சண்டை இல்லை; சர்ச்சை இல்லை;

# கல்கி

KALKI 2.2.97 ரூ. 3.00

சேர்ந்து கலக்கும் இருவர்!

# மனிதர்களையும் படிக்கிறார் இந்த மாணவி!

"இந்தப் பெண்ணிடம் எனக்கு-எனக்கு மட்டுமல்ல- எங்கள் கல்லூரி ஆசிரியைகளுக்கும்- பிடித்த முக்கிய அம்சம், எல்லோரையும் அரவணைத்துக் கொண்டு போவது."

– இந்தப் பெண்: ஆர். விஜயப்ரியா– பி.எஸ்ஸி கம்ப்யூட்டர் சயன்ஸ் இறுதி யாண்டு மாணவி.

அபிப்ராயம் சொன்னவர்: டாக்டர் கிருஷ்ணவேணி அருணாசலம். சென்னை அண்ணாநகரிலுள்ள வள்ளியம்மாள் மகளிர் கல்லூரி முதல்வர்.

விஜயப்ரியாவிடம் எதைப் பற்றிப் பேசினாலும் தீர்மான பதில்களாகவே வருகின்றன. விரல் நுனியில் பதில் என்பார்களே அப்படி.

சின்ன வயதிலேயே தந்தையை இழந்த போதும் தாயின் மிகுந்த அக்கறையினால் தஞ்சாவூரில் கொஞ்சகால பள்ளிப் படிப்புக்குப் பின் சென்னை வந்து இன்று தம் கல்லூரியின் ஸ்டார் என்று ஒருமனதாக அடையாளம் காட்டப்படும் அளவு வளர முடிந்திருக்கிறது இவரால்.



"நான் தாயை மதிக்கிறவள். நான் படிக்கும் இந்தக் கல்லூரியும் தமது அன்னை வள்ளியம்மாளின் நினைவாகப் பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் அவர்கள் எழுப்பியதுதான். இக்கல்லூரியை நான் நேசிக்க அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்."

வள்ளியம்மாள் கல்லூரியில் மாணவிகள் புடைவை கட்டிக் கொண்டுதான் வர வேண்டும். மாடர்ன் உடைகளுக்கு அனுமதி



" 'விளம்பரம் செய்யக் கூடாது'ன்னு சுவர்ல எழுதி வச்சது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

" 'விளம்பரம் செய்ய மாட்டோம்'னு பெருசா யாரோ எழுதிட்டுப் போயிருக்காங்க!"

- அம்பை தேவா

இல்லை. "இந்தக் கட்டுப்பாடு உங்களுக்குப் பிடிக்கிறதா விஜயப்ரியா?"

"பிடிக்கிறது!" என்று இயல்பாகக் கூறிவிட்டுத் தொடர்கிறார், "சின்ன வயதிலேயே கம்ப்யூட்டர் என்ற வார்த்தை மீது எனக்கு ஏதோ பெரிய அப்ஸஷன். அதைப் படித்துத் தேற வேண்டும் என்ற தீராத ஆசைதான் என்னை இந்தக் கோர்ஸில் சேரத் தூண்டியது."

பரதநாட்டியம் விஜயப்ரியாவின் இன்னொரு காதல். தஞ்சாவூர் பி.ஜெ.பாரதியிடம் நடனம் பயின்று, ஏழாவது படிக்கும் போது அரங்கேற்றம் ஆகிவிட்டது.

கல்லூரி சார்பாக நடைபெறும் போட்டிகளில் விஜயப்ரியாவின் சதங்கை ஒலி கேட்டே தீரும்.

வித்தியாசமான ரசனைகள் இவருக்கு.

இவரைப் போன்ற மாணவிகள் 'மைக்கேல் ஜாக்சன், மைக்கேல் ஜாக்ஸன்' என்று மயங்கிப் போகும் இந்நாளில், இவரின் அபிமானப் பாடகர் பேர் தெரியுமா? புஷ்பவனம் குப்பு சாமி!

நாட்டுப்புறப் பாடல்கள் என்றால் சொக்கிப் போகிறார் இந்த வருங்கால கம்ப்யூட்டர் நிபுணி.

எத்திராஜில் நடைபெற்ற உலக திருக்குறள் மையத்தின் ஆண்டு விழாவில் இவரது நடனத்தைப் பாராட்டியவர் இன்றைய சமூக நல அமைச்சர் சற்குணபாண்டியன்.

சமீபத்தில் முதல்வர் கலந்து கொண்ட திருக்குறள் சட்டவியல் மாநாட்டில் குறளை மையமாக வைத்து நடனமாடியிருக்கிறார். இவர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளின் பட்டியல் மிக நீளம்.

குழு நடனங்கள் ஆடுவதிலும், அமைப்பதிலும் ஆர்வம் அதிகம். ஏன்?

"அப்போதுதான் நான் மட்டுமல்லாமல் என் தோழிகளையும் சேர்த்துக் கொள்ள முடியும்."

தம்மை மட்டும் வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொள்ளாத பரந்த மனப்பான்மை இப்போதே இவரிடம் விதையாக ஊன்றியிருக்கிறது.

இவருக்கு மிகப் பெரிய இன்ஸ்பிரேஷன், கல்லூரி ஸ்தாபகர் பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தமும், முதல்வர் கிருஷ்ணவேணியும்.

"நாங்கள் ஏதேனும் வெற்றிபெற்றால் ஏதோ அவர்களின் சொந்தக் குழந்தைகளே வெற்றி பெற்றது போல் குதூகலித்துப் போகிறார்கள்!"

"என்னவாக வர வேண்டும் என்று எதிர்கால ஆசை?"

"முழுமையான மனுஷியாக! நான் எங்கே போனாலும் என் திறமைக்காக என்னை அனைவரும் மதிக்க வேண்டும். அந்த அளவுக்கு என்னை செம்மைப்படுத்திக் கொள்ள ஆசை!" என்கிறார்.

"திருமண விஷயங்களில் வரதட்சிணை போன்ற கொடுமைகளுக்கு மாப்பிள்ளையைப் பெற்றவர்களே காரணம். பிள்ளை வீட்டார் மனம் மாறினால் எல்லாம் மாறிப் போகும்" என்பது இந்த மாணவியின் தீர்மான அபிப்ராயம்.

டேட்டிங், பாய்ஃபிரண்ட் என்றால் 'நோ'என்கிறார்.

சிவாஜியின் நடிப்புக்கு ரசிகை. "மாதுரி தீட்சித்தின் எக்ஸ்பிரஷன், அவரது டிரஸ் சென்ஸ், எனக்கு மிகவும் பிடிக்கும்!"

விளையாட்டுகளிலும் ஆர்வம் உண்டு. விஜயப்ரியாவின் ஹாபி என்னவாக இருக்கும்? அவரே சொல்லாவிட்டால் நம் எவராலும் ஊகிக்கவோ, கண்டுபிடிக்கவோ முடியாது.

"ரீடிங் ஒன்ஸ் மைண்ட் (Reading one's mind) தான் என் ஹாபி" என்கிறார்.

பஸ்ஸுக்கு நின்று கொண்டிருக்கும் போது கூட பக்கத்தில் நின்று கொண்டிருக்கும் நபரின் சிந்தனையோட்டத்தை அவரிடம் பேச்சுக் கொடுக்காமல் தெரிந்து கொள்ள முயற்சிப்பது தான் இந்த ஹாபி.

"சரி. இதுவரை எவ்வளவு பேரை சரியாக எடை போட்டிருக்கிறீர்கள்?"

"பாதிக்குப்பாதி."

சந்திப்பு: **ராணிமைந்தன்.**

படங்கள். **யோகா**

பிரதமர் தேவேகௌடாவின் மிக முக்கியமான கௌர வப் பிரச்னை என்ன தெரியுமா? பிப்ரவரியில் நடக்கப் போகும் ராம்நகர் தொகுதி இடைத்தேர்தல்! இது கடந்த தேர்தலில் அவர் எம்.எல்.ஏ.வாக ஜெயித்த தொகுதி. பிரதம ரானதும் ராஜிநாமா செய்து விட்டார். அதனால் எப்படி யாவது தமது கட்சிக்காரர்தான் ஜெயித்தாக வேண்டும் என்பதில் மிகவும் தீர்மானமாயிருக்கிறார் பிரதமர்.

இதன் காரணமாகவே நடிகர் அம்பரீஷை வேட்பாள ராக்கியிருக்கிறார் பிரதமர். சென்ற பொதுத் தேர்தலில் ஜனதா தள வெற்றிக்காகப் பிரசாரம் செய்தவர் இவர். அதற்குப் பிரதிபலனாகத் தம்மை ராஜ்யசபா எம்.பியாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ஆனால் பிரதமரோ, "ராம்நகர் நான் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதி. அதனால் நாடே நமது கட்சியின் வெற்றியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. நீயும் மக்களால் தேர்ந் தெடுக்கப்பட வேண்டும். அதுதான் கௌரவம். தேர்ந்தெடுக் கப்பட்ட பிறகு கர்நாடக அமைச்சரவையில் உனக்கு அமைச்சர் பதவியும் உறுதி!" என்று வாக்குறுதி கொடுத்துத் தேர்தலில் நிற்கவும் வைத்திருக்கிறார்!

ஆனால் அம்பரீஷால் வெற்றிக் கனியைப் பறிக்க முடி யுமா? நூறு கவுன்சிலர்களைக் கொண்ட பெங்களூர் மாநக ராட்சித் தேர்தலில் வெறும் முப்பத்து மூன்று கவுன்சிலர் தொகுதிகளில்தான் ஜனதா தளம் வென்றது. இதன் காரண மாக தமது குடும்ப நண்பரான பத்மாவதி என்ற பெண் மணியை மேயராக்குவதற்காகச் சுயேச்சைகளையும் சிறு சிறு கட்சிகளின் தயவையும் நாட வேண்டியிருந்தது பிரதமருக்கு.

இந்தச் சூழலில் வரும் இடைத் தேர்தல் என்பதால் அதில் தமது கட்சி வேட்பாளர் ஜெயித் தால்தான் தமக்கு கௌரவம் என்று பிரதமர் மும்முரமா யிருக்கிறார். அம்பரீஷோ சந்தேகத்தோடுதான் தேர்தலில் போட்டியிடுகிறார்!



# கௌடாவின் கௌரவப் பிரச்னை!

கர்நாடக முதல்வர் ஜே.எச். படேலுக்குச் சர்ச்சை என் றாலே சர்க்கரைப் பொங்கல்தான். சமீபத்தில் கிருஷ் ணனையும் கோபிகைகளையும் இணைத்து இவர் ஒரு புதிய அரும்பதவுரையைச் சொல்லப் போக, புதிய சர்ச்சை ஒன்று வெடித்திருக்கிறது. இருந்தாலும் மனிதர் அசருவதாயில்லை!

இவரை கர்நாடக முதல்வராக நியமித்ததில் ராமகிருஷ்ண ஹெக் டேவுக்குப் பெரும் பங்கு உண்டு. ஹெக்டே - தேவேகௌடா மோதல் வெளிப்படை யாகத் தொடங்கி விட்டபோதும் படேல் யார் பக்கமும் சாயாமல் காலம் தள்ளிக் கொண்டிருக் கிறார். இதில் ஹெக்டேவுக்கு ஏக அதிருப்தி.

இதுபற்றி ஹெக்டேவிடம் நிருபர்கள் கேட்டனர் :

"ஜே.எச். படேலை முதல்வர் ஆக்கியதற்காக வருந்துகிறீர்களா?"

"இல்லை. நான் அந்த அள வுக்குச் சின்ன புத்திக்காரன் இல்லை."

"படேல் பேசுகிற பேச்சுக் களும் கருத்துக்களும் சர்ச்சை யைக் கிளப்புகிறவகையில் இருக் கின்றனவே?"

"என்ன செய்வது? அவரு டைய பார்வை விசாலமானது இல்லை. அவருக்கும் இந்தியா வைப் பற்றித் தெரியாது. இந்தியா வுக்கும் அவரைப் பற்றித் தெரி யாது!"

இதற்கு படேல் வாய்திறக்க வில்லை!



• சர்ச்சை என்றால் சர்க்கரைப் பொங்கல்!

பெங்களூரிலிருந்து : **அமுதவன்**

"அதிசயப் பிறவி" ஜி.ஆர். கைர்நார் - இந்த 'புல்டோசர் மன்னன்' செயல்பட ஆரம்பித்தால் ஆட்டம் காணுவது அடுக்கு மாடிக் கட்டடங்களும், இடுக்கில் முளைத்திருக்கும் கடைகளும் குடிசைகளும் மட்டுமல்ல! ஆட்சியிலிருக்கும் அரசும், அவர்களை ஆட்டிப் படைக்கும் "அண்டர்வர்ல்ட்டான்"களும் கூடத்தான்! அன்று தாவூத்'தின் கட்டடங்களை இடித்து, 'பவார்' அரசுக்கு சமாதி கட்டினார். இன்று மேடையில் 'இடி' என முழங்குகிறார். மாநகர் (இவர் பேச்சுக்களைப் பிரசுரித்த செய்தித்தாள்) பற்றி எரியக் காரணமாயிருந்தவர்; வேலையிலிருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டாலும், நடவடிக்கைகளை சஸ்பெண்ட் செய்யாமல் தொடர்ந்து கொண்டிருக்கிறார். அவரை நேரில் சந்தித்த போது...

**கேள்வி** : ஊழலை எதிர்த்துப் போராட முக்கியமாகத் தேவைப்படும் குணங்கள் எவை?

**கைர்நார்:** உண்மை, நேர்மை, பயமின்மை, நாட்டு நடப்பு பற்றிய தெளிந்த அறிவு! 'எல்லாம் அவன் செயல்' என்று நாம் செயல்படாமலேயே மெத்தனமாக இருப்பதால்தான், அன்று நாட்டை அந்நியர்களிடம் இழந்தோம்; இன்று அரசியல்வாதிகளிடம் இழந்து கொண்டிருக்கிறோம். பாரதத்தையும் ராமாயணத்தையும் வாழ்க்கை முறையாகக் கொள்ளாமல், வழிபாட்டு முறையாகக் கொண்டு அல்லல்படுகிறோம். கடவுள் நம்பிக்கை என்பது தன்னம்பிக்கையை வளர்க்கும் சாதனமாகப் பயன்படுத்த வேண்டும். போராட்டத்துக்குத் தேவைப்படும் 'கை' 'நம்பிக்கை'தான்!

**கே** : இதை வைத்துக் கொண்டு பண பலமும் ஆள்பலமும் கொண்ட சமூக விரோத சக்திகளை எதிர்த்து வெற்றி பெற முடியுமா?

**கைர்நார்** : ஏன் முடியாது? வரதாபாயிலிருந்து தாவூத் வரை, நான் எதிர்த்தவர்கள் அனைவருமே, போலீசிலிருந்து அரசு வரை அனைத்தையும் ஆட்டுவித்த முடிசூடா சக்ரவர்த்திகள்தான்! கொலை செய்வதாக மிரட்டினார்கள்; முப்பது கோடிகள்


• கைர்நார்



வரை பேரம் பேசினார்கள்; கார், பங்களா, தோட்டம், பதவி உயர்வு, குஜராத்தில் குஷாலான வாழ்க்கை என ஆசை காட்டினார்கள். மசிந்தேனா? கைகால் உடைந்தது; மண்டை பெயர்ந்தது; தேகத்தை குண்டு துளைத்தது; பாதுகாப்புத் தர வேண்டியவர்களே பயந்து நடுங்கிப் பதுங்கினார்கள். நான் பின்வாங்கவில்லையே?

இத்தனைக்கும் நான் எளிமையான விவசாயக் குடும்பத்தில் பிறந்தவன்தான்! மச்சரானால் பஞ்சம் பிழைக்க வழி உண்டே என்றுதான் பள்ளியில் சேர்க்கப்பட்டேன்! வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்றால், ஒன்று 'சிபாரிசு' வேண்டும்; அல்லது "ரிசர்வேஷன்" வேண்டும் என்றார்கள்; நான் அயரவில்லையே! கடுமையாக உழைத்துப் படித்து, பி.காம். தேறி, பி.எம்.ஸியில் குமாஸ்தாவாக சேர்ந்து, டிபார்ட்மெண்டல் பரீட்சை எழுதி எழுதியே டெபுடி கமிஷனராக உயர்ந்தேன். காரணம் தன்னம்பிக்கைதானே...?

**கே :** எளிமையாக ஆரம்பிப்பவர்கள் பதவிக்கு வந்ததும் மாறி விடுகிறார்களே!

**கைர்நார் :** தேவையில்லை! ஏ.ஸி.யும், கார், என் கீழ் வேலை செய்ய 30,000 ஆட்கள். முதல் மந்திரியிலிருந்து அடி மட்டத் தொண்டர், குண்டர் எல்லோரிடமும் பரிச்சயம். எல்லாம் இருந்தும் நான் மாறவில்லையே! குடிசைகளை இடிக்கும்போது, அங்குள்ள வறுமை கண்டு பல நாட்கள் நான் சாப்பிடாமல் இருந்திருக்கிறேன். ஆனால் கருணை வேறு கடமை வேறு! அது போல் பதவி வேறு, பணம் வேறு! இண்டலிஜன்ஸ் ப்யூரோ சல்லடை போட்டுத் தேடியும் எனக்கு சொந்தமான ஒரு இஞ்ச் நிலமோ, ஒரு கூரை வீடோ, ஒரு குந்துமணித் தங்கமோ கூட கிடைக்கவில்லையே! என் சகோதரி ஒருத்தி ஆயா வேலை பார்க்கிறார்; மற்றொருத்தி பாத்திரம் கழுவுகிறார் வயிற்றைக் கழுவ! யாருக்காகவும், எதற்காகவும் கடமையிலிருந்து தவறக் கூடாது என்ற உறுதியுடன் செயல்பட்டால், எதையும் சாதிக்க முடியும்!

**கே :** உங்களது தனிப்பட்ட சாதனையாக எதைக் குறிப்பிடுவீர்கள்?

**கைர்நார் :** நான் எதையும் பிரமாதமாக சாதித்து விடவில்லை! என் கடமையைத்தான் செய்தேன். கடமைகளை சரிவரச் செய்வதே இந்தக் காலத்தில் குதிரைக் கொம்பாய் இருப்பதால் என் பணிகளைச் செய்ததற்கே எக்கச்சக்க பாராட்டு பெற்றேன். பத்திரிகையாளர்களும் என்னை பிரபலப்படுத்தி விட்டார்கள்!

**கே :** குடும்பத்தார், முக்கியமாக மனைவி எதிர்ப்பு தெரிவிக்கவில்லையா?

**கைர்நார் :** 'வம்பு ஏன்' என சண்டை போடுவாள். 'என்னை மன்னித்து விடு' என கும்பிடத் துவங்கினேன்; நல்ல விளைவிருந்தது. ஒருகாலத்தில் ஜன்னலோரமாக நான் உட்கார்ந்தாலே, யாராவது சுட்டு விடுவார்களோ என அஞ்சியவள், நாளடைவில் 'என்ன ஒரு வாரமாக ஒரு அடிதடி, குண்டடி, காயம் எதுவுமில்லை? வேலையில் இருக்கிறீர்களா இல்லையா?' என கிண்டலடிக்கத் துவங்கி விட்டாள். 'இந்த வேலை போனால் நடுத்தெருதான்' என்றாலும் 'நானும் உங்களுடன் ப்ளாட்ஃபாரத்தில் குடித்தனம் செய்யத் தயார்' என்னுமளவுக்குத் துணிந்து விட்டாள்...

**கே :** இருந்தும் உங்களுக்கு ஏன் யாருடனும் ஒத்துக் கொள்ள மாட்டேனென்கிறது? ஈகோ பிரச்னையா? அண்ணா ஹசாரே, சேஷன், நீங்கள் மூவரும் இணைந்து முக்கோணத் தாக்குதலுக்கு தயாராவதாய் பேச்சு அடிபட்டதே...?

**கைர்நார் :** புதிய அலை உருவாகிறது என மகிழ்ந்தேன். ஆனால் அண்ணா ஏமாற்றி விட்டார்! ஊழல் குற்றச்சாட்டுகளை ஊழல் சாம்ராட்டுகளிடமே சமர்ப்பிப்பதா? முதல்வர்

# "ஒரு சகோதரி ஆயா...மற்றொருத்தி பாத்திரம் கழுவுகிறார்...!"

ஜோஷி, வீடு வீடாகச் சென்று உணவு உண்டு, கஷ்டப்பட்டு படித்தவர். குமாஸ்தாவாக வேலைக்குச் சேர்ந்தவர்; இன்று நட்சத்திர ஓட்டல்களுக்கும், அடுக்கு மாடிகளுக்கும் சொந்தமான "கோடீஸ்வரர்"! ரிமோட் கண்ட்ரோல் தலைவரைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். சிவசேனையின் அடாவடித்தனம் பிரசித்தி! இவர்களிடமிருந்து நீதியை எதிர்பார்க்கலாமா?

அண்ணா சுறாமீன்களை விட்டு விட்டு சின்ன மீன்களைப் பிடிப்பவர். டிபார்ட்மெண்ட் அளவில்தான் அவர் குற்றம் சாட்டினார். ஸ்திர புத்தியுமில்லை! முண்டே மீது அவதூறுகளை அடுக்கினார்; அப்புறம் அவரைப் போலில்லை என்கிறார். ஊழல் குற்றச்சாட்டுகள் 400க்கும் சாட்சியங்கள் உண்டு என்றார்; அப்புறம் சாட்சி எதற்கு? நெருப்பில்லாமல் புகையுமா என பல்டி அடிக்கிறார். சேஷன் நல்லவர்தான்; சிறந்த உழைப்பாளி; சாதனையாளர். ஆனாலும் சந்திராசுவாமி போன்றோருடன் தொடர்பு வைத்திருப்பதை ஏற்க முடியவில்லையே! என்ன செய்வது? இன்றைய நிலையில் என்னால், சமூக சேவையில் ஈடுபடுபவர்களிடம் எவ்வளவு குறையிருந்தாலும் ஏற்க முடியவில்லை! நூறு சதம் கெட்டவர்களை அப்புறப்படுத்த நூறு சதம் நல்லவர்களால்தான் முடியும் என்ற கொள்கையுடையவனாயிருக்கிறேன். மேலும் தேன் தோய்ந்த வார்த்தைகளை உபயோகிக்காமல், பட்டென்று முகத்திலடித்த மாதிரி பேசி விடுவது வேறு என்னிடமுள்ள பெரிய குறை! நாளடைவில் மாற்றங்கள் வரலாம்! எழுபத்தைந்து சதம் நல்லவர்களாக இருந்தால் போதும் என்ற நிலைக்கு இறங்கலாம்; முள்ளை எடுக்க மலர் எதற்கு என நினைக்கலாம்...

கே : 'மகாநகர்' எரிந்ததற்கு உண்மைக் காரணமென்ன? நீங்கள் பால்தாக்கரே பற்றி அவதூறு கிளப்பியிருப்பது விளம்பரம் தேடிக் கொள்ளத்தான் என்று சொல்வது...?

கைர்நார் : எனக்கு இப்படிப்பட்ட 'பப்ளிசிடி' தேவையேயில்லை! நம் மக்கள், ஏமாந்தே தீருவோம் என கங்கணம் கட்டிக் கொண்டு அலைகிறார்கள். கேடிகள், குண்டர்கள் எல்லோரையும் சத்புருஷர்களாகக் கொண்டாடி, கும்பிட்டு கோயில் எழுப்பத் தயாராக இருக்கிறார்கள். இந்த 'சத்புருஷர்கள்' எவ்வளவு 'அசத்தா'னவர்கள் என்பதை நாம் வெளிச்சத்துக்குக் கொண்டு வராவிட்டால், இந்த முட்டாள்தனம் எல்லைமீறிப் பெருகி விடும்!

அன்று சிவாஜி பார்க் கூட்டத்தில், மாயாவதி - முலாயம்சிங் விவகாரத்தைப் பேசிவிட்டு, மஹாராஷ்ட்ராவின் நிலைக்கு வந்தேன். இவர்கள் தலைவரின் விவகாரங்கள் கௌரவமானதாக இல்லை என்பதை சூசகமாக உணர்த்தினேன். நாகரிகம் கருதி ஓரளவுக்கு மேல் வெளியிட முடியவில்லை! அதைப் பிரசுரித்ததற்குத்தான் அடிதடி, பேப்பரைக் கொளுத்துதல், ஆசிரியர் நிகில் வாகலேவைத் தாக்குதல், பெண்கள் என் வீட்டுக்கு வந்து கலாட்டா என தொடர்ந்து ஆர்ப்பாட்டங்கள். அந்தப் பெண்களே என்னிடம் "நீங்கள் மதிப்பிற்குரியவர்; உங்கள் போராட்டம் உன்னதமானது; ஆனாலும் உங்கள் பேச்சு சிவசேனையிலுள்ள எல்லாப் பெண்களையும் இழிவுபடுத்துவதாக அமைகிறதல்லவா...?" என விளக்கம் சொன்னார்கள்!

**கே** : *1996-ன் மிகப் பெரிய ஊழலாக எதைக் கருதுகிறீர்கள்?*

**கைர்நார்** : நரசிம்மராவ் சம்பந்தப்பட்ட ஊழல்தான்.

**கே** : ஊழலற்ற அரசியல் கட்சி என எதற்கு முத்திரையிட்டு இந்தியாவின் எதிர்காலத்தை ஒப்படைப்பீர்கள்?

**கைர்நார்** : எல்லா அரசியல் கட்சிகளும் அகப்பட்டதைச் சுருட்டும் கூட்டம்தான்! சூறையாடும் விதங்களும் விகிதங்களும் மாறுபடலாம்! கம்யூனிஸக் கொள்கைகள் சற்று நம்பிக்கை ஊட்டினாலும், செயலளவில் எல்லோரும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்தாம்! இந்தியாவின் எதிர்காலம் அரசியல்வாதிகளிடம் இல்லை. ஊழலை எதிர்த்துக் குரல் கொடுக்கும் சக்தியையிழந்து அடங்கிக் கிடக்கும் மக்களிடம்தான் இருக்கிறது! அவர்களை உசுப்பி விட்டால்தான் நாடு உருப்படும்; அதுதான் என் இலக்கு!

**கே** : ஏதேனும் கட்சி ஆரம்பிக்கப் போகிறீர்களா? எதிர்காலத் திட்டமென்ன?

**கைர்நார்** : அரசியல் கட்சி எதுவும் ஆரம்பிக்கும் எண்ணமில்லை! நாட்டில் நல்லவர்கள் நலிந்து விடவில்லை; விளம்பரமில்லாமல் நற்பணிகள் செய்து கொண்டிருக்கும் நல்லோர் ஓர் ஐம்பது பேர் எனக்குக் கிடைத்தால் போதும். பெரும் இயக்கத்தை ஏற்படுத்தி, நாட்டில் புதிய அலை ஒன்றை உருவாக்கி, ஒளிமயமானதோர் எதிர்காலத்துக்கு நிச்சயம் வழிவகுப்பேன். இந்நிலையில் என் திட்டங்களை விவரிப்பது பிழையாகப் படும்! செயலில் நிரூபிக்கிறேன்! நாளை நமதே!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# சண்டை இல்லை; சர்ச்சை இல்லை;

# சேர்ந்து கலக்கும் இருவர்!

ஒரே துறையைச் சேர்ந்த வித்தகர்கள் திருமணம் செய்து கொண்டால், போட்டி, பொறாமை, கருத்து மோதல் உத்தரவாதமாய் வரும் என்பது உலக அபிப்ராயம். இந்தக் கருத்தைப் பொய்யாக்கும் வாழ்க்கை நடத்தி வருகிறார்கள் அனுராதா – ஸ்ரீராம். இசை ஜோடி!

"வீட்டில் இருவரும் சேர்ந்து பாடுவதுண்டு.. எனக்குத் தெரியாத கீர்த்தனைகளை அவள் சொல்லித் தருவாள். அது போலவே நானும் அவளுக்குத் தெரியாதவற்றைச் சொல்லித் தருவேன்..." என்கிறார் ஸ்ரீராம். இரண்டு பேரும் சேர்ந்து கச்சேரி கூட செய்திருக்கிறோம். சேர்ந்து ப்ராக்டிஸ் செய்வது ரொம்ப ரொம்ப சந்தோஷமான அனுபவம்..."

அனுராதா சினிமாவில் பின்னணி பாடுவதில் தற்போது முழு மூச்சுடன் ஈடுபட்டிருந்தாலும் (மின்சார கனவில் 'அன்பென்னும் மழையிலே' அவர் பாடியதுதான்) வலுவான கர்நாடக இசை அஸ்திவாரம் உடையவர். ஸ்ரீராம் பரசுராம் கர்நாடக சுத்தத்துக்குப் பெயர் போன வயலின் கலைஞர். பாடவும் செய்கிறார். ஸ்ரீராம் பிஎச்.டி. ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டது முத்துஸ்வாமி தீக்ஷிதரின் பஞ்சலிங்க ஸ்தல கிருதிகள். அனுராதாவின் ஆராய்ச்சித் (எம்.ஏ. தீஸிஸ் பேப்பர்) தலைப்பு : 'இளையராஜா – ஒரு சகாப்தம்'!

"சினிமா இசைக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் எப்படி ஒத்துப் போகிறது?"

நம் கேள்வியே அனாவசியம் என்பது போல் பார்க்கின்றனர் இந்தத் தம்பதி.

"நான் ஒரு யுனிவர்சல் மியூசிஷியன்" என்கிறார் ஸ்ரீராம். "இந்த இசை மட்டம்; அந்த இசை உசத்தி என்கிற மாதிரி சர்ச்சைகளில் எனக்கு நாட்டமும் இல்லை; நம்பிக்கையும் இல்லை. எந்த இசையிலும் எங்காவது ஓர் இடத்தில் நல்லது இருக்கும். அது மனத்தைத் தொட்டுத் தங்கிவிடும். சினிமா மியூசிக் என்றால் கீழாகப் பார்க்கும் மனோபாவம் என்றைக்குமே எனக்கு இருந்ததில்லை. கஜல், வெஸ்டர்ன் சிம்ஃபனி, மைக்கேல் ஜாக்சன்... எல்லாவற்றையுமே ரசிக்கிறவன் நான்..."

அனுராதா தமிழில் பாப் பாடும் நூதன முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். மாக்னா சவுண்ட் வெளியிட இருக்கும் அந்த பாப் ஆல்பத்துக்குப் பாடல்களை எழுதியிருப்பவரும் அவரேதான்!

"சில வரிகளை சாம்பிளாகச் சொல்லுங்களேன்..."

"ஸாரி! இப்போது வெளியிட முடியாது..." என்கிறார்.

சினிமாவுக்குப் பாடல் எழுதும் வாய்ப்புக் கிடைத்தால்....?

"இப்போதைக்கு எழுத மாட்டேன்..." என்கிற அவரது பதில், எதிர்காலத்தில் எழுதினால் ஆச்சர்யப்படாதீர்கள் என்பதாகத் தொனிக்கிறது.

சென்னை, கோட்டூர்புரத்தில் வசிக்கும் அனுராதா – ஸ்ரீராம் சந்தித்து காதலிக்கத் தொடங்கியது அமெரிக்காவில்! மும்பை பல்கலைக்கழகத்தில் மெகானிகல் எஞ்சினியரிங் படித்து, அதன் பின்னர் கல்கத்தா ஐஐஎம்மில் எம்.பி.ஏ. பட்டமும் வாங்கி, நேரே அமெரிக்கா போனார் ஸ்ரீராம்.

"எதற்கு...?"

"இசை ஆராய்ச்சி மேற்கொள்ள. நான் பிறந்து வளர்ந்தது மும்பையில் என்றாலும் பூர்விகம் பாலக்காடு. அம்மா, சகோதரி எல்லோரும் பாடுவார்கள். நான்கு வயதில் அவர்களைப் போலவே 'இமிடேட்' செய்து பாடுவேன். முறையாகக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். ராமகிருஷ்ண சர்மா, தஞ்சாவூர்

• அனுராதா - ஸ்ரீராம்

சங்கர அய்யர், ஆகியோர் கற்றுத் தந்தார்கள். பண்டிட் சி. ஆர். தாஸ் ஹிந்துஸ்தானி இசை குரு. வயலினில் மேற்கத்திய சாஸ்த்ரீய இசையும் கற்றேன். அதை மேலும் பயின்று உச்சியை அடைய வேண்டும் என்றுதான் அமெரிக்கா போனேன். வெஸ்லியன் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தேன்...''

''அங்கேதான் நாங்கள் சந்தித்துக் கொண்டோம்...'' என்கிறார் அனுராதா.

''நான் சென்னை பல்கலைக் கழகத்தில் இசை படித்திருந்தேன். தஞ்சாவூர் கல்யாணராமன், டி. பிருந்தா இருவரிடமும் பாட்டு கற்றுக் கொண்டேன். மாணிக் புவா தாக்குர்தாஸிடம் ஹிந்துஸ்தானி இசை பயின்றேன். மேற்கொண்டு படிக்க வெஸ்லியன் ப்பயச சேர்ந்த போது இசைத் துறையில் நான்கு இந்தியர்களே இருந்தார்கள். ஸ்ரீராம் பிஎச்.டி. ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். நான் இரண்டு வருட எம்.ஏ. வகுப்பில் சேர்ந்தேன். இருவரும் அடிக்கடி சந்திக்க சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. எங்கள் காதல் மலர்ந்ததும், பிறகு பரஸ்பர ஈர்ப்பை உறுதிசெய்ததும் அந்தப் பல்கலைக் கழகச் சூழ்நிலைதான்...''

''பாட்டும் பிடீட்டுமாக காதல் வளர்ந்ததா...?'' என்று கேட்டால்,

''மியூசிக் மட்டுமே வாழ்க்கை இல்லையே!'' என்கிறார் ஸ்ரீராம். ''எங்கள் இருவருக்குமே புது இடங்களைச் சுற்றிப் பார்ப்பதில் ஆர்வம் இருந்தது. சமையலில் விதவிதமான ருசிகளை அனுபவிப்பதில் த்ரில் இருந்தது. இதாலிய, சைனீஸ் சமையல் முதல், படித்த புத்தகங்கள், விஷயங்கள் என்று எல்லாவற்றையும் பற்றிப் பேசுவோம்... ரொம்ப உற்சாகமாய் இருந்த தருணங்களில் டென்னிஸ் கூட ஆடியிருக்கிறோம்.''

இரு குடும்பங்களின் எதிர்ப்பின்றி சுபமாக நடந்தது இவர்கள் திருமணம்!

• விச்வநாதன்



கர்நாடக இசைக் கலைஞர்கள், சினிமாவை 'நான் வெஜிடேரியன்' என்று கருதி முகம் சுளித்த காலமெல்லாம் மாறி வருகிறது. உன்னிகிருஷ்ணனும் பாம்பே ஜெயஸ்ரீயும் சினிமாவில் டூயட் பாடுகிறார்கள். இளைய தலைமுறையினரின் இந்த ஆரோக்கிய மனப்போக்கு அனுராதா ஸ்ரீராம் தம்பதியிடத்திலும் இருக்கிறது. ஆனால், இவர்களையெல்லாம் முந்திக்கொண்டு 'கதவுகளைத் திறந்து வையுங்கள்' என்று முதன் முதலில் விண்ணப்பித்தவர் மிக சீனியரான ஒரு வித்வான். - டி. விச்வநாதன். நாட்டிய மேதை பாலசரஸ்வதியின் சகோதரரான இவர் சம்பிரதாயம் பிசகாத புல்லாங்குழல் கலைஞர். சென்னை மியூசிக் அகடமி இவருக்கு சங்கீத கலாநிதி விருது வழங்கிய போது, (1988), தமது ஏற்புரையில் இந்த விண்ணப்பத்தை வைத்தார் விச்வா (இசையுலகம் அவரை இப்படித்தான் அழைக்கிறது). 'எல்லா விதமான இசையையும் திறந்த மனத்துடன் அணுகுங்கள். அதனால் நமது பாரம்பரியம் வலுப்படுமேயொழிய நீர்த்துப் போகாது' என்ற கருத்தை முன்வைத்தார்.

அனுராதா, ஸ்ரீராம் பயின்று, காதல் வயப்பட்ட வெஸ்லியன் பல்கலைக் கழகத்தின் இந்திய இசைப் பிரிவுத் தலைவராக இருந்து வருபவர் இந்த விச்வாதான்!

ஸ்ரீராம் சுமார் நான்கு ஆண்டுகள் டி. விசுவநாதனிடம் பயின்றிருக்கிறார். சமீபத்தில் விச்வா சென்னையில் நிகழ்த்திய ஓர் அரிய கச்சேரியில் ஸ்ரீராம் வயலின் வாசிக்க, அனுராதா உடன் பாடினார்.

விச்வாவின் சிந்தனைப் பாதிப்பு இவர்களுடைய வாழ்க்கை முறையில் தெரிவதில் ஆச்சர்யமில்லை.

மீண்டும் அனுராதாவிடம் வருகிறோம்.

"இளையராஜா ஒரு சகாப்தம் என்று தலைப்புக் கொடுத்து விடலாம். ஆனால் அவரை நெருங்கி விஷயத்தை வரவழைப்பது படு கஷ்டமாயிற்றே... எப்படி சாதித்தீர்கள்...?"

"இளையராஜா ஒரு 'இன்ட்ரோவர்ட்' - அதிகம் பேச மாட்டார் என்பது வாஸ்தவம் தான். ஆனால் நான் ஆரம்பத்திலேயே அவரிடம் போய் கேள்விகள் கேட்கவில்லை. அவர் இசை அமைத்த சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட திரைப்படங்களை ஒவ்வொரு ஃப்ரேமாகப் போட்டுப் பார்த்து ஆராய்ந்தேன். ரீ-ரிகார்டிங், பாட்டுக்கு அமைத்திருந்த இசை என்று அனைத்தையும் அலசினேன். அப்புறம் முப்பதுக்கும் மேற்பட்ட அவருடைய உதவியாளர்களுடன் நிறையப் பேசினேன். அவருடைய குடும்பத்தினரை பேட்டி கண்டேன். தினமும் அவர்களுடன் பேசுவேன். அவர் மகன் யுவன், அப்போதே அவருக்கு கீபோர்டு வாசித்துக் கொண்டிருந்தான்... இவர்களிடமெல்லாம் பேசிய பிறகு அவரையும் பேட்டி கண்டேன். நேரிடையான என் கேள்விகளுக்குக் கச்சிதமான, சுருக்கமான பதில்களை வைத்திருந்தார். கூடுதலாக ஒரு புன்னகை. பார்க்க நேரும்போதெல்லாம் மறக்காமல் 'விஷ்' பண்ணுவார்... தர்மபிரகாஷில் நடந்த எங்கள் கல்யாணத்துக்கு வந்து வாழ்த்தி, பரிசு கொடுத்தார்..."

"இருவருமே இசையைத் தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்துவது எப்படியிருக்கிறது...? அமெரிக்காவிலேயே தொடர்ந்து இருந்திருந்தால் இன்னும் வளமாக இருந்திருக்கலாமோ...?"

"அங்கே தங்கிவிடும் நோக்கில் நாங்கள் போகவில்லை. அதனால் திரும்பி இந்தியா வருவது ஒன்றும் கஷ்டமாகத் தெரியவில்லை. திறமையும் தன்னம்பிக்கையும் இருந்தால் வாழ்க்கை வசதியாகவே அமையும். வாழ்க்கை முறை படாடோபமில்லாமல் எளிமையாய் இருந்தால் அதுவே இசையிலும் பிரதிபலிக்கும். எம்.டி ராமநாதன், ராம்நாட் கிருஷ்ணன் போன்றவர்கள் இதற்கு உதாரணம்..." என்கின்றனர் இருவரும்.

"ஒரு விஷயம் மிகவும் முக்கியம். 'இன்னும் தெரிந்து கொள்ள வேண்டும்' என்கிற தேடல் இருக்க வேண்டும். அந்தத் தேடலினால் புதிதாக ஒன்றைக் கற்கும்போது அலாதியான திருப்தி உண்டாகிறது. அதே சமயத்தில், 'இன்னும் இதுபோல் எத்தனை விஷயங்கள் தெரியாமலே இருக்கின்றன என்கிற அவஸ்தையும் ஏற்படுகிறது... இதுவே நம்மை மேலும் சிறப்பாகச் செயல்பட உந்துகிறது..." என்கிறார் ஸ்ரீராம். அவரை ஆமோதித்துப் புன்னகை செய்கிறார் அனுராதா.

**- சாருகேசி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**



"நான் போட்ட தங்க மோதிரத்தை வச்சிருக்கீங்களா மாப்பிள்ளை?"

"முடியலயே! எங்கே போனாலும் 'இமிடேஷன்'னு சொல்லி வச்சிக்க மாட்டேங்கறாங்களே!"

- எல். கோபால கிருஷ்ணன்


பல்லவன்

# பஸ் பஸ்... மாடி பஸ்!


நல்ல காலம்; நம்ம ஆட்சியின்போது மாடி பஸ் அறிமுகப் படுத்தலை
அதுக்கு ஏன் சந்தோஷப் படறீங்க?
மாடி பஸ் விட்டிருந்தா, அதுல லஞ்ச ஊழல் நடந்திருக்கும்; அரெஸ்ட், பெயில், ஜெயில்... ஒண்ணுமில்லாம தப்பிச்சோமில்லே?


இருபது வருஷ சர்வீஸ்ல ஒரு பிரமோஷன் உண்டான்னு கேப்பியே! எனக்கு பிரமோஷன் ஆயிருச்சு! நான் இப்போ மாடி பஸ் டிரைவர்!


பஸ் ஸ்டாப்ல கூட நிக்காம போறீங்க?
ரெண்டு கண்டக்டரும் தனித்தனியா ஒரு விசில் கொடுத்ததை டபிள் விசில்னு நெனச்சு நிப்பாட்டாம வந்திட்டேன். ஸாரி




கருத்து: ஜூலி

படம்: செல்லம்






**முன்பு, ம.தி.மு.க. பிரமுகரான ஏழுமலை கொலை செய்யப்பட்டார். இப்போது அவரது சிஷ்யர் சிவா. கொலைக்கான பின்னணி என்ன?**

பெரிய திரை, சின்னத்திரை ஆகியவற்றில் வரும் வன்முறைக் கொலைக் காட்சிகள் போலவே அமைந்து விட்டது அந்தச் சம்பவம். பூக்களால் ஜோடிக்கப்பட்டு, 'மாப்பிள்ளை அழைப்பு' கார் வழிமறித்து நிற்க, ஜீப்புக்குள் இருந்தவர்கள் என்ன ஏதுவென்று சுதாரித்துக் கொள்வதற்குள் 360 டிகிரியிலிருந்தும் வந்த ஆட்களின் கைகளில் வெட்டரிவாள்கள் பளிச்சிட்டன. சில நொடிகளுக்குள் வீழ்த்தப்பட்டார், அவர்.

பெயர் : ஜி. வி. சிவா. ராயபுரம் தொகுதி ம.தி.மு.க. செயலாளர். வை.கோ.வின் கண்ணின் மணிகளில் ஒருவர். வடசென்னையில் மற்றுமொரு கொலை. பரபரப்பு, கடையடைப்பு எல்லாமே நடந்து முடிந்திருக்கின்றன. போலீஸ் வழக்கம் போல நிதானமாக துப்பறியத் துவங்கியிருக்கிறது.

வடசென்னை பொதுவாகவே கொஞ்சம் 'பேஜாரான' ஏரியாதான். அதிலும் குறிப்பாக, வியாசர்பாடி, ராயபுரம், தண்டையார்ப்பேட்டை பகுதிகளில் வன்முறை என்பது நீறுபூத்த நெருப்பு. எல்லாம் சகஜமாக இருப்பது போன்ற மாயத் தோற்றம். திடீரென்று கோஷ்டி மோதல், கொலை எல்லாம் அரங்கேறும். இதற்கு முக்கியக் காரணம், சட்டவிரோதமான காரியங்கள் செய்பவர்களிடையே உள்ள போட்டி பொறாமைதான். இவற்றில் தலையெடுக்கும் பிரமுகர்களை வளர்த்து விடுவதில் போலீசுக்கும் பெரும் பங்கு உண்டு என்கிற கசப்பான உண்மையைச் சொல்லித்தான் ஆக வேண்டும். தங்களுடைய சட்டவிரோதமான செயல்கள், சமுதாயத்தின் கண்களில் இருந்து மறைக்கப்பட வேண்டுமென்பதற்காகவே, கட்சி அரசியலிலும், சமூக சேவையிலும் நாட்டம் கொண்டவர்களாக நடித்துக் கொண்டிருப்பவர்கள் இன்னமும் வடசென்னையில் நிறையப் பேர் இருக்கிறார்கள். இந்தப் பின்னணியைப் புரிந்து கொண்டால், வடசென்னை ஏன் பேஜாரான பகுதியாக இருக்கிறது என்பது புரிந்து போகும்.

# கொலைக்களமாகிறதா வடசென்னை?



• சிவா

வெட்டிச் சாய்க்கப்பட்ட சிவாவுக்கு வயது 43. குடியாத்தம் பக்கம் உள்ள மூடநேந்தல் கிராமம். பள்ளியிறுதி வகுப்பு படித்த பின் போலீஸ் வேலை கிடைத்தது. ஆனால் அந்த வேலையில் அவர் நீடிக்கவில்லை. காரணம் ரொம்ப சுவாரஸ்யமானது. திருப்பத்தூரில் அரிசிக் கடத்தலைத் தடுக்கும் செக் போஸ்டில் சிவாவுக்கு டூட்டி. பொறுப்பாளரான சப்-இன்ஸ்பெக்டர், இரவு முழுவதும் தூங்கிக்



• சிவாவின் இறுதி ஊர்வலம்...

'ஸ்மக்ளிங் சிவா' என்றும் 'மரியாதையாக' குறிப்பிடப்பட்டார்.

இந்தச் சமயத்தில்தான் எண்ணூர் நாராயணன் என்பவர் தொடர்பு அவருக்குக் கிடைத்தது. அவர்கள் குடும்பம் நடத்தி வந்த சாராயக் கடைக்கு (அரசு ஏலத்தில் எடுத்தது) உதவியாகச் செயல்பட்டு வந்தார் சிவா. கையில் கொஞ்சம் பணம் சேர்ந்தது. லோடு மற்றும் கண்டெய்னர் லாரிகளை வாங்கினார். இதற்கிடையில் எண்ணூர் நாராயணனுக்கும் அவருக்கும் மோதல் ஏற்பட, தனியாக வந்து 'தொழில்' நடத்தத் துவங்கினார். ஏழுமலை நாயக்கரின் நட்பு கிடைத்தது. அவருக்கு சிஷ்யரானார். இருவரும், வை.கோ. கட்சியில் இணைந்தனர்.

துறைமுகத்தில் கப்பல்களில் இருந்து நிலக்கரி இறக்க சப்-காண்டிராக்டராக இருந்த தெய்வ சொரூப் சந்திரனை சில காரணங்களுக்காக மெயின் காண்ட்ராக்டர் நீக்கிவிட்டார். அந்த காண்ட்ராக்ட் ஏழுமலை தயவில் சிவாவுக்குக் கிடைத்தது. அதிலிருந்து ஏறுமுகம்தான்! இடையில்

கொண்டிருப்பாராம். விடிந்ததும் போலீஸ்காரர்களிடம், இரவு வசூலான மாமூலை முற்றிலும் நவுட்டிக் கொண்டு போய் விடுவாராம். இதனால் கடுப்பில் இருந்த சிவா, ஒருநாள் அந்த சப்-இன்ஸ்பெக்டரை நன்றாக 'கவனிக்க' வேலைநீக்கம் செய்யப்பட்டார்.

பின்னர் சென்னைக்கு வந்து பர்மா பஜார் வியாபாரிகளோடு தொடர்பு கொண்டு, கள்ளக் கடத்தல் சாமான்களை விற்கும் தொழிலில் ஈடுபட்டார். அந்த வியாபார வட்டாரத்துக்கே உரிய பரிச்சயங்கள் ஏற்பட்டு வளர்ந்தன. இதனால் அவ்வப்போது துறைமுகம், ராயபுரம் ஆகிய இடங்களில் சிறு சிறு மோதல்கள். சிவா, 'பாட்டில் சிவா' என்றும்

ஒரு துயரம், குரு ஏழுமலை (ஜெ. ஆட்சியில்) சிலரால் வெட்டிக் கொல்லப்பட்டார். குருவின் பணியைத் தொடர்ந்தார் சிவா. ஒரு பள்ளியின் தாளாளரானார். பொறாமைக் கண்களிடையே டாட்டா சுமோ வாங்கினார். ம.தி.மு.க. சார்பாக ராயபுரத்தில் போட்டியிட்டார்.

தொழில்ரீதியான போட்டி, பொறாமைதான் சிவா கொலைக்குக் காரணம் என்று கருதப்படுகிறது.

"முதல் நாள், நானும் என் பெண்ணும், ஒரு கல்யாணத்துக்காக கடலூர் சென்று விட்டோம். வழக்கம் போல காலை ஐந்து மணிக்கு எழுந்து, பாதுகாவலர்களுடன் நண்பர் - உதவியாளர்



''சேமிக்கற பழக்கம் இருந்ததால்தான் நான் இன்னிக்குக் கோடீஸ்வரனா இருக்கேன்!''

''ஆனா உனக்கு சேமிக்கற பழக்கம் இருந்ததா எனக்குத் தெரியலையே?''

''நான் ஆரம்பித்த ஃபைனான்ஸ் கம்பெனியில நிறையபேர் அவங்க சேமித்த பணத்தைப் போட்டாங்களே! அதைச் சொல்றேன்டா!''

---

''இன்னிக்குப் பிரதமர் பதினான்கு மணிநேரம் இந்த நாட்டு ஏழைகளின் நல்வாழ்வு குறித்து 'ஆழ்ந்த யோசனையில்' இருந்தாராம்!''

''அநியாயமாயிருக்கே! அப்போ பதினாலு மணி நேரமா தூங்கிட்டு இருந்தார்?''

---

''ஐயையோ! என்னங்க இது? கோர்ட்டுக்குள்ளே ஒரு பேய் உலாவுது?''

''பயப்படாதீங்க! அதுதான் சுடுகாட்டு ஊழல் வழக்குல ஒரு முக்கிய சாட்சியாம்!''

– பாஸு

---

''ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தை நடத்தி வைப்பாங்கன்னு கேள்விப்பட்டிருக்கோம். ஆனா... இந்தத் தரகர் ஒரே ஒரு பொய் சொல்லி இந்த கல்யாணத்தை நடத்தி இருக்கார்!''

''அப்படி என்ன சொல்லிட்டார்?''

''பல்லவன்ல 'டபுள் டெக்கர்' பஸ் ஓட்டறதால டபுள் சம்பளம் வாங்கறார்னு இல்லே சொல்லியிருக்கார்!''

– நரேந்திரன்

சுரேஷ் வீட்டுக்குச் சென்றிருக்கிறார். அப்போதுதான் இந்தச் சம்பவம் நடந்திருக்கிறது. தாக்கிய ஆட்களில் ஒருவர், யார் என்பதைக் கவனித்து எங்கள் ஆட்கள் பார்த்திருக்கிறார்கள். இது தவிர, சிறிது தூரத்தில் காருக்குள் அமர்ந்தபடியே மேற்பார்வை செய்து கொண்டிருந்தவர்களையும் எங்கள் ஆட்கள் பார்த்திருக்கிறார்கள்.

"1993லிருந்தே என் கணவருக்கு இவர்களிடமிருந்து பாதுகாப்பு வேண்டி இன்ஸ்பெக்டர் முதற்கொண்டு, உள்துறைச் செயலாளர் வரை மனு கொடுத்து விட்டேன். ஒரு நடவடிக்கையும் இல்லை! ஒன்றிரண்டு முறை என் கணவர் தவறான செயல்கள் செய்திருக்கலாம். ஆனால் கடந்த பல வருடங்களாகவே நியாயமான வழியில் செயல்பட்டு வந்தார் என் கணவர் பொறாமைக்காரர்களால் தாங்க முடியவில்லை!" என்று கண்ணீருடன் நம்மிடம் சொன்னார் சிவாவின் மனைவி பவானி.

காதல் கல்யாணம். விடியலில் சென்று துறைமுக வேலைகளுக்கான ஆட்களை ஏற்பாடு செய்து விட்டு மதியம் திரும்பும் சிவா, கடவுள் படங்களுக்கு ஊதுவத்தி ஏற்றி வைத்து, பின்னர் காக்கைக்கும் சாதம் போட்டு விட்டுத்தான் சாப்பிடுவாராம்!

"பம்பாயில் காசுக்காகக் கொலை செய்யும் 'சுபாரி' கும்பல் போன்று வடசென்னையில் இப்போது ஏதுமில்லை. ஆசைத்தம்பி, கபிலன் ஆகியோர் சுட்டுக் கொல்லப்பட்ட பிறகு வன்முறைகள் குறைந்தே இருந்தன. சிவா கொலை, எங்களுக்கு ஓர் எச்சரிக்கைதான். இன்னமும் மிச்சமிருக்கும் ஒன்றிரண்டு கும்பல்களைக் கண்காணிக்க வேண்டும். தவிர துறைமுகத்துக்குள் ஏற்படும் தொழில் தகராறுகள் வெளியில் வன்முறைகளாக மாறுகின்றன. சிவாவைக் கொலை செய்தவர்களை விரைவில் கண்டுபிடித்து விடுவோம்" என்று சொன்னார் ஒரு போலீஸ் அதிகாரி.

இதற்கிடையில் சம்பவம் நடந்த இடத்திலிருந்து மூன்று கார்களை கைப்பற்றி உள்ளனர் போலீசார். எது எப்படியிருந்தாலும், சிவாவின் கொலையைத் தொடர்ந்து பழிக்குப் பழியாக மேலும் பல கொலைகள் நடக்கக்கூடும் என்பதுதான் அந்தப் பகுதி மக்களின் அச்சம்.

– ப்ரியன்

படம் : சாய்வர்ஷா









1997 பிப்ரவரி 2
தாது தை 20
மலர் : 55
இதழ் : 27

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கறுப்புப் பணம் : லட்சம் கோடி ரூபாய்!

"ஆண்டுதோறும் லட்சம் கோடி ரூபாய் கறுப்புப் பணம் இந்தியாவில் 'உற்பத்தி' யாகிறது" என்கிறார் ஜோதிபாசு. பிரதமர் தேவேகௌடா, "இந்தக் கறுப்புப் பணத்தையே ஒன்பதாவது ஐந்தாண்டுத் திட்டத்தைச் செயல்படுத்தப் பயன்படுத்தலாமே..." என்கிறார். திட்டக் கமிஷன் துணைத் தலைவர் மதுதண்டவதே ஒருபடி மேலே போய், "இத்தனை கறுப்புப் பணத்தையும் வெளிக்கொணர நிதியமைச்சர் வழிதேட வேண்டும்" என்று அறிவித்திருக்கிறார்!

'கறுப்புப் பணம் வைத்திருப்போர் அதை ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் பகிரங்கமாய் முதலீடு செய்யலாம்; கணக்கே கேட்கப்பட மாட்டாது; தண்டனை கிடையாது' என இதற்கு முன் நமது நிதியமைச்சர்கள் பலர் அறிவித்ததுண்டு. இதன் மூலம் பதுக்கல் மன்னர்களும் வரி ஏய்ப்புச் செய்து வந்த பண முதலைகளும் பயனடைய, நேர்மையாய் வரி செலுத்தி வந்த மாதச் சம்பளக்காரர்கள் முட்டாள்களாக்கப்பட்டார்கள்!

நாட்டின் முன்னணித் தலைவர்களுடைய முயற்சியில் அதே அநியாயம் மீண்டும் நிகழக் கூடிய சாத்தியக்கூறுகள் தெரிகின்றன. அப்படி நிகழ்ந்தால் நேர்மைக்கும் நாணயத்துக்கும் அர்த்தமில்லாமல் போய்விடும்.

ஒரு சலுகை வழங்குவதாயின், அது வரி செலுத்தும் அனைத்துத் தரப்பினருக்கும் உரியதாக இருக்க வேண்டும். ஓரிரண்டு ஆண்டுகளுக்கு, எல்லா பிரிவினருக்கும் வருமான




வரியைத் தாற்காலிகமாக ரத்து செய்யலாம். நாடு தழுவிய இந்த நடவடிக்கையினால் கறுப்புப் பணம் வெளுப்பாகி முதலீடு செய்யப்படும்; ஒழுங்காக வரி செலுத்தி வருகிறவர்களுக்கும் சிறிதளவு ஆதாயம் கிடைக்கும்.

இதன் பின்னர் மீண்டும் வருமான வரியை அமுல்படுத்தும்போது கவனமாகச் செயல்பட வேண்டும். வரி செலுத்துவோரின் எண்ணிக்கையை அதிகப்படுத்தும் வகையில் வருமான வரிச் சட்டத்தைத் திருத்தியமைக்க வேண்டும்.

இந்த யோசனையை, தேசிய அபிவிருத்தி கவுன்சில் உறுப்பினர்கள் ஏற்கெனவே வெளியிட்டிருக்கிறார்கள்.

"டென்மார்க், ஸ்வீடன் நாடுகளில் 85 சதவிகிதத்தினரும் ஆஸ்திரேலியாவில் 54 சதவிகிதம் மக்களும் வரி செலுத்துவோராக உள்ளனர். இந்தியாவிலோ 0.8 சதவிகிதத்தினர்தான் வரி செலுத்துகிறார்கள்..." என்று புள்ளி விவரங்கள் வழங்கியுள்ளார் தண்டவதே.

இதை அடிப்படையாகக் கொண்டு வருமான வரிச் சட்டங்களை மாற்றலாம். குறைந்த வருமானம் உள்ளவர்கள் கூட ஒரு சொற்பத் தொகையை வருமான வரியாகச் செலுத்தும் வகையில் திருத்தி அமைக்கலாம். கூடவே, வரி ஏய்ப்புச் செய்வோருக்குத் தண்டனையை மிகக் கடுமையாக்கலாம். அதோடு, நாற்பது நாற்பத்தைந்து சதம் வரை அபரிமிதமாக வரி விதிக்கும் போக்கும் மாறினால், வரி ஏய்ப்பும் கணிசமாகக் குறையும். அரசின் வருவாயும் சுலபமாக அதிகரிக்கும்.

## *ராவின் தில்லுமுல்லு; கேசரியின் தகிடுதத்தம்!*

**கா**ங்கிரஸ் தலைவர் சீதாராம் கேசரியின் வீட்டில் சி.பி.ஐ. சோதனை நடத்தியிருக்கிறது.




அவரை விசாரணைக்கு உட்படுத்தியிருக்கிறது.

டெல்லி உயர்நீதி மன்றத்தில் தொடரப்பட்ட ஒரு பொதுநல வழக்கின் அடிப்படையில்தான் இப்படியொரு விசாரணைக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது என்பதை அடியோடு மறந்துவிட்டு, கேசரி ஆதரவாளர்கள் கொதிப்படைந்திருக்கிறார்கள். 'பிரதமர் அலுவலகம்தான் இந்த நடவடிக்கைக்கு உத்தரவிட்டது; காங்கிரஸ் ஆதரவைத் தொடர்ந்து பெறுவதற்காக நிகழ்த்தப்படும் பிளாக் மெயில் இது...' என்றெல்லாம் குற்றம் சாட்டுகிறார்கள்.

நரசிம்ம ராவ் என்னென்ன தவறுகளுக்காகப் பதவி நீக்கம் செய்யப்பட்டாரோ, அவை அனைத்தையும் ஒவ்வொன்றாகத் திரும்பவும் அரங்கேற்றி வருகிறார் சீதாராம் கேசரி.

அந்தப் பட்டியலில் கடைசியாக இடம்பெறும் தவறு: மத்திய பிரதேசம், பஞ்சாப் தேர்தல்களில் காங்கிரஸ் தரப்பில் போட்டியிட, கமல்நாத், பூடாசிங் ஆகியோருக்கு டிக்கெட் கொடுத்திருப்பது.

காங்கிரஸ், ராவ் தலைமையில் இருந்தபோது, ஊழல் குற்றச்சாட்டுக்கு உள்ளான இவ்விருவருக்கும் தேர்தலில் போட்டியிட அனுமதி மறுக்கப்பட்டது. எனினும் அவர்களது உறவினர்கள் போட்டியிடலாம் என்கிற சலுகையின் மூலம், அவர்களே ரிமோட் கன்ட்ரோல் பிரதிநிதிகளாகச் செயல்பட அனுமதிக்கப்பட்டார்கள்! இது ராவ் செய்த தில்லு முல்லு.

கேசரி செய்திருக்கும் காரியம் அதனினும் மோசமானது! அவர் காங்கிரஸ் தலைவரானதுமே கமல்நாத்தின் மனைவி தமது எம்.பி. பதவியை ராஜினாமா செய்துவிட்டார். அந்த சிந்த்வாரா தொகுதியில் இப்போது கமல்நாத்தையே வேட்பாளராக அறிவித்துள்ளார் கேசரி!

பூடா சிங், பஞ்சாபில் ரோபார் தொகுதியில் போட்டியிட அனுமதிக்கப்பட்டுள்ளார்.

ஒருபுறம் இவ்வாறு பகிரங்கமாகத் தவறுகள் செய்வதும், இன்னொரு புறம் 'என் பேரில் சி.பி.ஐ. விசாரணையா? என்ன அக்கிரமம்!' என்று அலறுவதும், ராவுக்குப் பிறகும் காங்கிரஸ் மாறவில்லை என்பதையே உறுதிப்படுத்துகிறது!

# கோபாலசாமி

படத்தில் பாப் பாடகர் போல கையில் மைக் பிடித்துக் கொண்டிருப்பவர், காந்திஜி, நன்றாகத் தெரிகிறது.

அவருக்குப்பக்கத்தில் மேல் துண்டுடன் நிற்பவர்?

அவர்தான் எல்.என்.கோபாலசாமி. நாற்பது ஆண்டு காலம் சென்னை தக்கர் பாபா வித்யாலயத்தின் தலைவராக இருந்து, காந்திஜியின் தொழில் கல்வியுடன் கூடிய பாட திட்டத்தை அமுல்படுத்தி பெருவெற்றி கண்டவர்.



Poona 27/10/45

My dear Gopalswami

Yours about Rajaji.

In so far as the people caused any disturbance neither the Congress nor [illegible] had anything to do with them. There is no doubt that the people resented & rose against the many & wholesale arrests. The Q.I. movement would [illegible] by me.

I never started it. In some cases people lost self control. But the govt [illegible] violence eclipsed all popular violence.

To accuse Rajaji of betrayal is not to know him. He is too good to do anything mean. Of course I have accepted his formula because I believe in it.

Yours

Bapu

• காந்திஜி எழுதிய கடிதம்...

ஹரிஜனசேவா சங்கத்தின் தமிழ்நாடு தலைவராகத் திகழ்ந்தவர். சமுதாயப் பணிக்காக ஜம்னாலால் பஜாஜ் விருது பெற்றவர்.

படம் 1946ல் எடுக்கப்பட்டது. காந்திஜியை தமிழகத்துக்கு வரவேண்டும் என்று அழைத்தபடியிருந்தார் எல்.என். கோபாலசாமி. காந்திஜியோ, தமிழ்நாடு முழுமையாக ஹரிஜன ஆலயப் பிரவேசத்துக்குத் தயாராகிவிட்டதா என்று கேட்டவாறு இருந்தார். 1937லேயே மதுரை வைத்தியநாத அய்யருடன் சேர்ந்து மதுரை மீனாட்சி கோயிலில் ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை நடத்தி வைத்த எல்.என்.கோபாலசாமி, விரைவில் அண்ணாரின் விருப்பம் நிறைவேறி விடும் என்று வாக்களித்தார். படத்தில் மதுரைக்குச் செல்லும் வழியில் ரயிலிலிருந்தபடி காந்திஜி மக்களிடம் பேசுகிறார்.

அடுத்து காந்திஜி எல்.என். கோபாலசாமிக்கு எழுதிய ஒரு கடிதம் பாருங்கள். 1944-45ல் தமிழ்நாட்டுக் காங்கிரஸுக்குள் ராஜாஜிக்கு பலத்த எதிர்ப்பு தோன்றியது. 'நாட்டைக் காட்டிக் கொடுத்தவர்' என்றும் 'காந்திக்கு துரோகம் செய்தவர்' என்றும் ராஜாஜியை ஒரு பிரிவினர் பழித்துரைத்தார்கள்.

இதனால் மனம் நொந்துபோய் எல்.என். கோபால்சாமி காந்திஜிக்கு எழுதிய கடிதத்துக்கு அண்ணாரின் பதில்தான் இந்தக் கடிதம். கடைசி பாராவில் காந்திஜி எழுதுகிறார்:

"ராஜாஜி துரோகம் செய்து விட்டார் என்று குற்றம் சாட்டுவது அவரை அறியாதவர்கள் செய்யும் காரியம். ராஜாஜி தரக்குறைவான செயல் எதையும் புரிய முடியாத அளவுக்கு மிகவும் நல்லவர். அவருடைய திட்டத்தை நான் ஏற்றிருக்கிறேன் என்றால் அதில் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டிருப்பதால்தான்.

உங்கள்

பாபு,

இந்தக் கடிதம் ராஜாஜியை எதிர்த்தவர்களின் வாதங்களைத் தவிடுபொடியாக்கியது.

94வது வயதில் காலமான கோபாலசாமியின் மறைவில், மற்றொரு தூய காந்தியவாதியைத் தமிழகம் இழந்து நிற்கிறது.

**கல்கி — பாலு ஜுவல்லர்ஸ்**
**இணைந்து வழங்கும்**
**வாரம் ஒரு சவரன்**
**போட்டி - 1; முடிவு!**

# மகிழ்ச்சி பொங்கியது!

## பிறருக்குக் கொடுப்பதில் இன்பம்!

நான் பி.ச. படிக்கும்போது (78-ல்) எனது முதல் கதை விகடனில் பிரசுரமானது. அதற்காக ரூ 150 சன்மானம் கிடைத்தது. அதில், எனது நெருங்கிய உறவினர்களுக்கெல்லாம் ஐந்து ரூபாய் விதம் நூறு ரூபாயை அனுப்பினேன். மீதமிருந்த ஐம்பது ரூபாயை எனக்காகச் செலவு செய்வது என்று தீர்மானித்த போது ஒரு கடிதம். கதையோடு பிரசுரமாகியிருந்த எனது முகவரியைப் பார்த்து, வேலூர் சிறையில் ஆயுள் தண்டனை அனுபவித்துக் கொண்டிருந்த ஒரு கைதி எழுதியிருந்தார். தாம் அஞ்சல் வழியில் படித்துக் கொண்டிருக்கும் பட்டப் படிப்புக்காக கழகத் தமிழ் அகராதி வாங்கி அனுப்பும்படி கேட்டிருந்தார். அந்த ஐம்பது ரூபாயில் அவருக்கு அதை வாங்கியனுப்பினேன். அவரிடமிருந்து நன்றிக் கடிதம் வந்த போது, முதல் கதை பிரசுரமானபோது ஏற்பட்ட சந்தோஷத்தையெல்லாம் தூக்கிச் சாப்பிடுகிற ஒரு சந்தோஷம் எனக்கு.

நெய்வேலி, நளினி சாஸ்திரி.

## குட்டிப் பெண்ணின் பெருமிதம்!

அறிவொளி இயக்கத்தில் ஒருங்கிணைப்பாளராகப் பணிபுரிந்த நேரம். ஒரு கிராமத்திலுள்ள அறிவொளி மையத்தைப் பார்வையிடச் சென்றிருந்தேன். அங்கே பதினான்கு வயதுள்ள ஒரு மாணவிதான் ஆசிரியை. நாற்பது வயதுக்கு மேற்பட்ட பெண்கள்தான் கற்போர். "ப...ட்...டா, பட்டா; ப...டி...படி' என்று எழுதியும் வாசித்தும் காண்பித்த ஒரு பெண்மணி, கோவிந்தம்மாள் என்று தமது கையெழுத்தையும் போட்டு நிமிர்ந்தபோது அவரது முகத்தில் ஆனந்தக் கண்ணீர். பெருமிதத்தோடு என்னைப் பார்த்தாள் அந்தக் குட்டி ஆசிரியை. அப்போது எனக்கு ஏற்பட்ட நெகிழ்வும் மகிழ்வும் வேலைக்கான உத்தரவு வந்தபோது கூட எனக்கு ஏற்படவில்லை.



கீரனூர், சக்தி. முத்துகிருஷ்ணன்,

## போட்டோவில் சிரித்த தாய்!

கணவனை இழந்தாலும் மனம் தளராமல் என்னை ஆளாக்கிப் படிக்க வைத்தவர் என் தாயார். அப்படிப்பட்டவரை அவர் உயிரோடு இருக்கும்போது போட்டோ ஏதும் எடுத்து வைத்துக் கொள்ளாமல் விட்டு விட்ட வருத்தம். ஒருமுறை ஓர் உறவினர் வீட்டுத்





திருமண ஆல்பத்தைப் பார்க்க நேரிட்டபோது அதில் என் தாயாரின் சிரித்த முகம். அப்போது எனக்கு ஏற்பட்ட சந்தோஷம் இருக்கிறதே... லாட்டரியில் பல லட்சம் கிடைத்திருந்தாலும் ஏற்படாத சந்தோஷம் அது! உடனே அப் படத்தைப் பெரிதுபடுத்தி வைத்துக் கொண் டேன்.

கிருஷ்ணகிரி, கே. கணேசன்.

இந்தவாரப் போட்டியில்
ஒரு சவரன் பரிசு பெறுபவர்:
மு. பக்தவத்சலம்,
160 -ஏ, பாரதிநகர், ஆசிரியர் காலனி,
வாலாசாபேட்டை,
வட.ஆ.அ.மா. 632 513.

## துக்கத்திலும் கிடைத்த சந்தோஷம்!

கடந்த 24.12.96-ல் இந்திய விமானப் படையின் விமானம் ஒன்று விபத்துக்குள்ளாகி, அதில் பயணம் செய்த பாண்டு வாத்தியக் குழுவினர் அனைவரும் இறந்தபோது என் குடும்பமே துக்கத்துக்குள்ளானது. கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்தையும் மறந்து போன சோகம். காரணம் எங்கள் சகோதரரைப் போல் பழகிய ஒருவரும் அந்த பாண்டு வாத்தியக் கோஷ்டி யில் இருந்தார் என்பது. பிறகு ஒரு நண்பரின் மூலம், அவர் தமது அப்பாவின் உடல்நிலை மோசமானதால்– அவசர விடுப்பு எடுத்துக் கொண்டு போய் விட்டதால்– அந்த விமானத் தில் பயணம் செய்யவில்லை என்பதை அறிந் தோம். அடடா, மற்றவர் விபத்தில் மரண மடைந்த பொதுவான வருத்தம் இருந்தாலும் மறுபுறம் அப்போது ஏற்பட்ட சந்தோஷம் இருக்கிறதே... வார்த்தைகளால் சொல்ல முடியாது.

பெங்களூர் – 14, வே. ஜெயகரன்.

## காத்திருந்த மாணவர்கள்...

புதுக்கோட்டையில் முதன்மைக் கல்வி அலுவலராகப் பணியாற்றிய சமயம், மாத் தூரில் உள்ள அகதிகள் பள்ளிக்கு ஆய்வுக் காகச் சென்றிருந்தேன். நல்ல ஆசிரியர்கள் உட்பட எல்லா வசதிகள் இருந்தும் பொதுத் தேர்வில் தேர்ச்சி சதவிகிதம் மிகக் குறை வாகவே இருந்தது. என்ன காரணம்? "சரியான சாப்பாடு இல்லை. அரசு தரும் உதவித் தொகை போதவில்லை!" என்று தயக்கத்தோடு கூறினர் மாணவர்கள்.

அவர்களுக்கு ஒரு வேளையாவது நல்ல தொரு விருந்தளிக்கத் தீர்மானித்தேன். உடன் பணிபுரிபவர்களும் உதவி புரிந்தனர். விருந்து தயார். 'நான் வரத் தாமதமாகும் என்பதால் நீங்கள் சாப்பிடுங்கள்' என்றும் சொல்லி யனுப்பியிருந்தேன்.

மாலை மூன்று மணிக்கு நான் அங்கே சென்ற போது, அதுவரை அவர்கள் சாப் பிடாமல் எனக்காகக் காத்திருந்தபோது மனம் நெகிழ்ந்து போனேன். அதை நினைத்தால் இன்று கூட சந்தோஷம்தான்.

வாலாஜாபேட்டை, மு. பக்தவத்சலம்,

## பாசம் மறக்காத பசு!

சென்னையில் குடியேறும் பொருட்டு கிராமத்தில் வளர்த்த எங்கள் பசுவான லட் சுமியை அழுது கொண்டே விற்க வேண்டிய தாயிற்று. பல மாதங்கள் கழித்து மீண்டும்



நாங்கள் கிராமத்துக்குச் சென்ற சமயம், எங் களை அடையாளம் கண்டு கொண்டு 'ம்மா...' என்று கத்திக் கொண்டே ஓடி வந்த போது தான் எத்தனை சந்தோஷம்!

வி. ஹேமாவதி, சென்னை – 53.

## ரயிலில் கிடைத்த அனுபவம்!

ஏறத்தாழ 15 ஆண்டுகளுக்கு முன்பு மின்சார ரயிலில் குரோம்பேட்டைக்குப் பயணம் செய்து கொண்டிருந்தேன். அப்போது சி.ஏ. பாலனின் 'தூக்கு மரநிழலில்' என்னும் நூலைப் படித்தவாறே சென்றேன். அதில் அவர் அனுபவித்த துன்பங்கள் என் கண் களைக் கலங்கச் செய்து விட்டன. யாரும் அறி யாமல் அவ்வப்போது துடைத்துக் கொண் டேன். எனக்கு எதிரில் அமர்ந்திருந்த அந்த மனிதர் ஆறுதல் தருவது போல் என்னைத் தட் டிக் கொடுத்து விட்டு பல்லாவரத்தில் இறங்கி



னார். இறங்கும்போது, "நான்தான் சி.ஏ. பாலன்!" என்றார்.

வேலூர் – 6, எல். கோபாலகிருஷ்ணன்.

## குழந்தைக் கவிஞர் கொடுத்த இன்ப அதிர்ச்சி!

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களை அவரது வீட்டில் சந்தித்தபோது, அவருடைய போட்டோ ஒன்றைக் கேட்டேன். 'எதற்கு? சட்டத்தில் மாட்டி வைக்கவா?' என்று கேட்ட அவர், என்னையும் அழைத்துக் கொண்டு ஒரு ஸ்டுடியோவுக்குச் சென்று என்னையும் அவருடன் சேர்த்துப் படமெடுக்க வைத்து, "இரண்டு பேரையும் சேர்த்தே சட்டத்தில் மாட்டி வைக்கலாம்!' என்று சிரித்தபோது ஏற்பட்ட சந்தோஷத்தை எப்படி மறக்க முடியும்?

முத்துராமலிங்கபுரம், ரா. பொன்ராசன்

## வாக்மனா? நேர்மையா?

நான் முதல் ராங்க் வாங்கினால் வாக்மன் பரிசளிப்பதாய் அப்பா சொல்ல, தீவிரமாய்ப் படித்தேன். வழக்கமாய் முதல் ராங்க் வாங்கும் என் தோழியை விட இரண்டு மதிப்பெண்கள் கூடுதலாய்ப் பெற்று முதல் ராங்க் வாங்கினேன். ஆனால் அறிவியல் பாடத்தில் தவறுதலாக ஒரு கேள்விக்கு இரண்டு முறை பதில் எழுதியிருந்த நான் ஏதாவதொன்றை அடித்திருக்க வேண்டும். செய்யவில்லை. ஆசிரியையும் இதைக் கவனிக்காமல் இரண்டு முறை மூன்று மதிப்பெண்களைப் போட்டு விட்டார். வாக்மனா? நேர்மையா? நேர்மையே வென்றது என் மனத்தில். அதில் வாக்மன் கிடைத்ததை விடவும் அதிக சந்தோஷம்!

பாளையங்கோட்டை, எஸ். தீபா.

## அன்பு வெளியான நேரம்...

என் கணவர் மிகுந்த அன்புடையவர் என்றாலும் அதை வெளிப்படுத்தத் தெரியாதவர். நான் எவ்வளவோ முயன்றும் வார்த்தைகள் மூலமாக அவரது அன்பை என்னிடம் வெளிக்காட்டியதேயில்லை. இந்நிலையில் அலுவலகத்தில் ஒரு தேர்வு. ஆறு முறை எழுதியும் வெற்றி காணாமல், ஏழாவது முறை எழுதினார். அவரது வெற்றிக்கு நான் வேண்டாத தெய்வமில்லை.




முடிவு வெளியான நாள். அவர் வேகமாக வீட்டுக்கு வந்து என்னை அணைத்து மகிழ்ச்சிப் பெருக்குடன் "ஐ லவ் யூ" என்றபோது அவரது அன்பையும் வெற்றியையும் ஒருசேரப் புரிந்து மகிழ்ந்தேன்.

சென்னை – 4, திருமதி தீபா பிரசன்னா.

---

## மூக்கேஷ்!

முதல் சானல் 'சுரபி' நிகழ்ச்சியில் முகேஷ் என்பவர் மவுத் ஆர்கன் வாசித்தார். இதில் என்ன அதிசயம் என்கிறீர்களா? அதை அவர் மூக்கால் வாசித்துக் காட்டினார்! முகேஷா? மூக்கேஷா!

–எல்.கோபாலகிருஷ்ணன்

# பாரதி கண்ணம்மா

உயர்சாதிப் பெண் கண்ணம்மாவுக்கு அவர்கள் வீட்டு வேலைக்காரன் பாரதி மேல் காதல். (பொருத்தமான தலைப்பு). இதற்கு மேல் தெரியாதா? குலப் பெருமை பேசும் மீசைக்கார அப்பா, ஊர்ப் பஞ்சாயத்து, கிராமத்துப் பழக்க வழக்கங்கள், அடிதடி இன்ன பிற.

இப்படியொரு புராதனமான கதையை வைத்துக் கொண்டு தன் முதல் இன்னிங்ஸைத் தொடங்கியிருக்கும் இயக்குநர் சேரன், திரைக் கதையில் மாமூல் இயக்குநர்களிலிருந்து விலகி, வித்தியாசம் காட்டியிருப்பதன் மூலம் கவனம் பெறுகிறார்.

வெறும் சம்பவங்களால் சீட்டு மாளிகை கட்டாமல், பாத்திரங்களின் மன ஓட்டத்தைக் கொஞ்சம் கவிதை கலந்து சித்திரிக்க முயன்றிருப்பது, இந்த ரகப் படங்களுள் சற்றுப் புது முயற்சி.

மீனா தன்னைக் காதலிப்பது பார்த்திபனுக்குத் தெரியும். ஆயினும் நீண்ட கால சரித்திரப் பின்னணி உள்ள தமிழ் சினிமா ஹீரோக்கள் போலவே கிடைத்த வாய்ப்பை நழுவ விடாமல் கனவு கண்டு, டூயட் பாடவில்லை. அந்தஸ்து வித்தியாசம் அதிகம் உள்ள இந்தக் காதலின் பின் விளைவுகள் என்னவாயிருக்கும் என்று யோசித்துப் பேசுகிற இடங்கள் நயமானவை.

நயமான பிற விஷயங்களில் முதன்மையானது - முதலாளி வீட்டு மனிதர்களிடம் பார்த்திபன் பழகுகிற விதம். அந்த வயதான கிழவியிடம் மரியாதை கலந்த வம்பு பண்ணுவது, சினிமாத்தனமான பவ்யமின்றி முதலாளி விஜயகுமாரிடம் இயல்பாகப் பழகுவது, அதேசமயம் சாப்பாட்டுக்குப் பாத்திரத்துடன் போய் நிற்கும் போது வந்து விடக்கூடிய ஏழைமையின் ஒடுக்கம் - இவையெல்லாம் ஆச்சர்யப்படும் விதமான நேர்த்திகள்.

ஒரு மிக சாதாரணக் கதையை இத்தனை சுவாரஸ்யமாகச் சொல்லத் தெரிந்த இயக்குநர், சறுக்குவது விஜயகுமார் சம்பந்தப்பட்ட காட்சிகளில்.

குலப் பெருமை சொல்வதாகப் பஞ்சாயத்தில் அவர் கை கால்களை உதைத்துக் கொண்டு வீர வசனம் பேசுவது, சாதி வெறி மாறாத டிபிகல் சினிமா அப்பாவாக மீசையை முறுக்குவதையெல்லாம்கூட இன்னும் சற்று யோசித்திருந்தால் வித்தியாசமாகச் செய்திருக்கலாம்.

மீனாவுக்குப் படத்தில் கனமான வேஷம். அழகாக வந்து போகாமல் கொஞ்சம் நடிக்கவும் மெனக்கெட்டிருப்பது ஆறுதலான விஷயம். தொடர்ந்தால் சந்தோஷம்.

இயக்குநர் சேரனை ஒரு விஷயத்துக்காகப் பாராட்ட வேண்டும். முதல் படத்திலேயே துணிச்சலாக ஆன்ட்டி - க்ளைமாக்ஸ்!

மீனா இறந்துகிடக்க, பார்த்திபன் திடீரென்று சிதையில் பாய்வது கடைந்தெடுத்த அபத்தமென்றாலும் அந்த முடிவைப் படத்தில் யாருமே யூகித்திருக்க முடியாது.

ஆனால் அமர காதல் காவியம் படைப்பதற்காகக் காதலர்களை அமரர்களாக்குவதை ரசிகர்கள் ஏற்பது - கொஞ்சம் கஷ்டம் தான்.

—ஆர்.பி.ஆர்.



**கலா - உலா:**

# அமெரிக்காவிலிருந்து அன்புடன் அழகுணர்ச்சியுடன்...



அந்த அசைவுகளை வார்த்தைகளால் வர்ணித்துச் சிறைப்படுத்திவிட முடியாது! பார்த்தால் மிக எளிமையாக, இலகுவாகத் தோன்றும்... ஆனால், உழைப்பும் அர்ப்பணிப்பும் அலாதியான கற்பனையும் கலந்த யோக நிலை அது!

மேடையில் ஒரு பொட்டு அலங்காரம் கிடையாது. விளக்கொளியின் மென்மையான ஜாலமே அலங்காரமாக, அங்கே அந்தக் கலைஞர் குழு சிருஷ்டித்த உலகில், பார்ப்பவரின் கற்பனைக்கேற்ப விதம் விதமான நிகழ்வுகளும் உணர்ச்சிகளும் விரிந்து கொண்டே போயின.

கைகள், கால்கள், கண்கள் என்று தனித்தனியேயும், பின்வர் அவை யாவும் ஒன்றாக இணைந்தும் அசைந்து, முக பாவத்தின் துணையுடன் கதை சொல்லும் இந்திய நடனத்துக்குப் பழகியவர்களுக்கு, இந்த நவீன நடனம் விநோதமாகக் கூட தோன்றும். ஆனால் சற்று யோசித்தால் புரியும். இந்தக் கலைஞர்களின் உடல் முழுவதுமே அபிநயிக்கிறது! வானப்

பின்னணியில் விரையும் மேகங்களைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் எத்தனை அர்த்தங்கள் தெரியும்...? காற்றில் மிதந்து வரும் குருவி இறகை கவனித்துக் கொண்டேயிருந்தால் என்னென்ன கதைகளை அது சொல்லும்...? அத்தகைய அனுபவம்தான் அன்று வாய்க்கப் பெற்றது.

பால் டெய்லர், இன்று உலகின் தலைசிறந்த நவீன நாட்டிய நிபுணர். அமெரிக்க அரசு, இந்திய சுதந்தரத்தின் பொன் விழாவையொட்டி அவரை சிறப்பு நிகழ்ச்சியொன்று தயாரிக்கும்படி பணித்தது. அமெரிக்க தகவல் நிலையம், இந்திய தனியார் நிறுவனங்கள் பலவற்றின் உதவியுடன் அந்தச் சிறப்பு நிகழ்ச்சியை வழங்கியது.

"இந்தியாவுக்கான நிகழ்ச்சி என்றதுமே என்னையறியாமல் இந்திய நடன அசைவுகள் பலவற்றை இந்தச் சிறப்பு நிகழ்ச்சியில் புகுத்தி விட்டேன். பிற்பாடு அவற்றை நீக்கிவிடலாமா என்று யோசனை வந்தது. மிக இயல்பாக அவை பொருந்தி வந்ததால் அவ்வாறு நீக்கும் யோசனையைக் கைவிட்டேன்..." என்று இந்திய ரசிகர்களுக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார் பால் டெய்லர்.

இடது பாதம் தூக்கி நின்ற அழகிலும், விரல்களால் மான் முத்திரை பிடித்துக் காட்டி ஒயிலாகத் திரும்பிய கணத்திலும், திடீர் திடீரென்று பனிச்சிட்ட அரை மண்டி நிலையின் கச்சிதத்திலும் பால் டெய்லர் குறிப்பிட்டிருக்கும் இந்திய இன்ஸ்பிரேஷன் முத்திரை தெரிந்தது.

பால் டெய்லர் கம்பெனி வழங்கிய அந்த நவீன நாட்டிய நிகழ்ச்சியைப் பார்த்தவர்கள் கொடுத்து வைத்தவர்கள்.

**- சீதா ரவி**



படங்கள் உதவி: **அமெரிக்க தகவல் நிலையம்.**

**கா**லை எழுந்து இரவு படுக்கப் போகும் வரை பரமேசுவரி வருடம் முழுவதும் ஒரே அட்டவணைப்படி இயங்கினாள்.

குளித்துவிட்டு டிப்போவில் பால் வாங்கி வந்து காய்ச்சிப் பொங்குவதற்குள் வென்னீர் வைத்து, காப்பி தயாரானதும் கணவனை எழுப்பி, மேசை மேல் செய்தித்தாளுடன் வைத்து, பனியன் அண்டர்வேர் பார்த்து எடுத்து வைத்து, சட்டை பாண்ட்டுக்கு இஸ் திரி போட்டு, குளித்து வருவதற்குள் தோசை அல்லது இட்டிலி மேசை மேல் வைத்து, கணவன் ஆபீசுக்கு எடுத்துச் செல்ல டிபனோ தயிர் சாதமோ எடுத்துக் கொடுத்து, ப்ளாஸ்கில் காப்பி, கைதுடைக்க டவல்...

தினத்துக்கும் தினத்துக்கும் 'இன்று ஒரு தகவலி'லிருந்து இரவு பூக்காரி கொண்டு வந்து வைக்கும் ஜவந்திப் பூச்சரம் வரை வேறு பாடின்றி இயங்கிய வாழ்க்கை. ஞாயிறு போன்ற விடுமுறை நாட்கள் வாராந்திர அட்ட வணைப்படி இயங்கின. அதில் 'ஜெய்ஹனு மான்' போன்ற பக்தித் தொடர்களும் குப்பை தட்டுவதும் செய்தித்தாளை பழைய பேப்பர் காரனுக்குப் போடுவதும் சாயங்காலம் தொலைக் காட்சியில் மழை பெய்யும் பழைய படமும் போனில் அம்மாவுடனும் பிருந்தா வுடனும் கால், கால் மணி நேரப் பேச்சுமாக போச்சு முழு வாழ்வும் என்று பரமேசுவரி யாரிடமும் புகார் செய்ததில்லை. வாழ்க்கை யின் கணங்கள் பால், ஸ்டோர் கணக்கிலும் சீட்டுக் கட்டுவதிலும் புடைவைக்கு ஃபால்ஸ் தைப்பதிலும் வீணாகிறது என்று அவளுக்குத் தோன்றியதில்லை.

ஒருநாள் மனசைக் கலைத்தது அவள் பள்ளிச் சிநேகிதி ஹேமாதான். திடீர் என்று போன் பண்ணிவிட்டு வந்தாள். பளபள கூந் தலும் மொரமொர காட்டன் புடைவையும் வெளிநாட்டு வாசனையுமாக வந்தாள். பொட்டு இல்லை.

"மைகாட்! என்ன இப்படி, உனக்கும் ஒரு பசு மாட்டுக்கும் என்ன வித்தியாசம் பரமா?"

"புரியலை."

"ஏதாவது வித்யாசமா, வியப்பா செய்ய நினைச்சிருக்கியா?"

"அப்படி ஏன் நினைக்கணும்?"

"நினைக்காட்டா நமக்கும் பசுக்களுக்கும் என்னடி வித்தியாசம்?"

"என்ன சொல்றே ஹேமா? புரியலே இல்லை."

"உன் கணவர் எப்பவாவது உன்னைத் திட்டியிருக்காரா?"

"லேசா திட்டுவாரு. திட்னதுக்கு உடனே மன்னிப்பும் கேட்பார்."

"அடிச்சிருக்காரா?"

"சேச்சே!"

"எப்பவாவது உன் வாழ்க்கையில் சொல் லிக்கும்படியா பரவசம், விபத்து, திருட்டு, கொள்ளை ஏதாவது நடந்திருக்கா?"

"என்னென்ன வார்த்தையெல்லாம் சொல்றே ஹேமா! அப்படியெல்லாம் நடந்தாத்தான் வாழ்க்கையா?"

"உள்பாவாடைக்கு நாடா கோக்கறதுதான் வாழ்க்கையா?"

"ஒருத்தர் ஒருத்தருக்கு ஒரு மாதிரி."

"கண்ணாடில பார்த்துக்கோ! உனக்கும் எனக்கும் ஒரே வயசு. இப்பவே மாமி மாதிரி இருக்கே. இது என்ன டிரஸ்ஸு காலங்கார்த் தாலை? ஒரு நைட்டின்னும் இல்லாம ஹவுஸ் கோட்டுன்னும் இல்லாம... சின்ன வயசில என்ன அழகா இருப்பே!"

"குழப்பறே ஹேமா."

"ஒருநாள் கூட வா. வெளியுலகம் எப்படி இயங்கறதுன்னு

# ஒருதலை வேட்கை



காட்டறேன். பெண்கள் என்னவெல்லாம் செய்யறா, எவ்வளவு ஃப்ரீயா இருக்கா, தைரியமா இருக்கான்னு காட்டறேன்."

"இவரை விட்டுட்டு எங்க வர முடியும்? பத்து நிமிஷம் இல்லைன்னா 'பரமேசுவரி பரமேசுவரி'ன்னு அனத்திடுவார்."

"அது கூட பரமேசுவரிதானா? 'பரமா' 'பரமு'ன்னு செல்லப் பேர் எதும் கிடையாதா?"

"அதெல்லாம் அவருக்குப் பிடிக்காது."

"அதான் உங்களுக்கு..."

சொல்ல வந்ததை நாக்கைக் கடித்துக் கொண்டு சட்டென்று நிறுத்தி விட்டாள் : "சரி சரி, எப்ப உனக்கு மாறுதல் தேவையோ, அப்ப என்னைக் கூப்பிடு... வரேன்."

ஹேமா விதைத்து விட்டதைப் பற்றி ராத்திரி படுக்கும் வரை சிந்திக்கவே இல்லை. கணவர் இகனாமிக் டைம்ஸ் படித்துவிட்டு, மூக்குக் கண்ணாடியைப் பெட்டிக்குள் பொருத்திவிட்டு, 'நாராயணா' என்று ஒருமுறை சொல்லிவிட்டு, அந்தப் பக்கம் திரும்பிக் கொண்டு, ஐந்தாவது நிமிஷத்தில் குறட்டை விடத் துவங்கியதும்தான் யோசித்தாள்.

குறட்டையை தினம் கேட்டுக் கொண்டிருப்பதுதான் தன் வாழ்நாளா? அவரிடமிருந்து எத்தனை கணவ சப்தங்கள்! காலை பல் தேய்க்கும்போது நாக்கில் விரல் விட்டு ஒரு அமானுஷ்ய சப்தம், அவ்வப்போது ஹ்ர்ர்ரக் என்று தொண்டையைக் காறும்

# சுஜாதா

சப்தம், சபையறியாமல் காற்றுப் பிரியும் சப்தம், சில நாட்கள் தொடர்ச்சியாக நாற்பத்தெட்டு தும்மல் சப்தம், சாப்பிடும்போது எல்லோருக்கும் முன்னிலையில் தட்டை சரித்து மிச்ச ரசத்தை உறிஞ்சும் சப்தம்...

சேச்சே! இதென்ன நினைப்பு. எல்லாக் கணவர்களும் இந்த மாதிரி சப்தங்கள் எழுப்புபவர்கள்தானே? ஹேமாவிடம் கேட்டுப் பார்க்க வேண்டும்.

சட்டென்று குறட்டை நின்றது. கணவன் விழித்துத் திரும்பி, அருகில் பார்த்து, "நீ இன்னும் தூங்கலை?"

"தூக்கம் வரலை."

"உடம்பு கிடம்பு சரியில்லையா?"

"உடம்பு நேராத்தான் இருக்கு."

"ஹால்ல போயிப் புஸ்தகம் படி. எனக்கு லைட்டு கண்ணைக் குத்தறது."

எனக்கென்று ஏதும் இல்லையா?

ஹாலில் போய் உட்கார்ந்து கொண்டாள். டீவியை போட்டதில் மணல் ஓடியது. எதையாவது சாப்பிட்டு அல்லது குளிர் காற்றடித்து உடம்புக்கு வந்தால் தேவலை. ஒருநாளாவது என்னைக் கவனிப்பார்; ஒரு வாய் காப்பி போட்டுத் தருவார்.

உடம்பு சரியில்லை என்று பாசாங்கு செய்யலாமா? பொய் சொல்



விப் பழக்கமே இல்லையே. அப்பா அப்படி வளர்த்து விட்டாரே...

அப்பா, அம்மா இரண்டும் அவர்தான். அவரை நினைத்தபோது அவளுக்குக் கண்ணீர் இயல்பாகச் சுரந்தது.

"எல்லா அப்பாவுக்கும் பெண்ணைப் பிடிக்கும். அழகு, திறமைக்காக இல்லை, தன் குழந்தைங்கறதுக்காக."

காலை பூஜை அலமாரியில் அப்பா படத்தின் மேல் விபூதி உதிர்ந்திருந்தது. முதலில் அதை அவள் கவனிக்கவில்லை. மேலேயிருந்து சுண்ணாம்பு உதிர்ந்திருக்கும் என்று துடைக்கப் போன போது, அப்பா ஏதோ தனக்கு ஆணையிடுகிறார் என்று தோன்றியது. 'மகளே வாழ்க்கையை விரயம் பண்ணாதே. உன் சிநேகிதி சொல்வது சரிதான். அவள் பேச்சைக் கேள்' என்று சொல்வதாக நினைத்தாள். அவளுக்கு பூப்போடுவது, விபூதி உதிர்வது, பல்லி கூப்பிடுவதில் எல்லாம் நம்பிக்கை.

கணவன் அலுவலகத்துக்குப் புறப்பட்டதும் ஹேமாவுக்கு போன் செய்தாள். அடையாறில் ஒரு அட்ரஸ் சொல்லி, "அங்க வா" என்றாள்.

"அடையாறுக்கு எப்படி வரது?"

"ஆட்டோ பிடித்துக் கொண்டு. இது என்ன கேள்வி?"

"நான் ஆட்டோவில் தனியாப் போனதே இல்லையே ஹேமா..."

"தனியா காரியங்கள் பலதும் செய்யப் போறே. அதற்கு ஆட்டோவில் போறது ஆரம்பம்."

குதித்துக் குதித்து ஆட்டோ போகும் போது, அதில் உள்ள காஸெட் 'முத்து' படப்பாடலில் அர்த்தங்களைத் தேடினாள்.

ஹேமா சொன்ன இடம் நான்கு மாடி நவீனக் கட்டடம். ஃப்ளாட் பகுதி. முன்பக்கம் பொட்டிக், கூரியர், ஸ்நாக் பார் என்று கடைகள் இருக்க, வாசலில் காவல்காரன் நிறுத்தி, பக்கவாட்டில் அனுப்பினான். கட்டடம் ஒல்லியான கான்க்ரீட் கால்களில் நின்று கொண்டிருக்க, அடிவாரத்தில் கார்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தன. தரை பெருக்கப்பட்டு சுத்தமாக இருந்தது. ஓரத்தில் குரோட்டன்ஸ் செடிகள் கத்தரித்த ஒழுங்கில் இருந்தன. கொன்றை மரம் ஒன்றின் மஞ்சள் பூக்கள் உதிர்ந்திருந்தன. பிள்ளை சைக்கிள்கள் அனாதையாகக் கிடந்தன. வாசல் நிறைய செருப்புகள் இருந்த அந்த ஃப்ளாட்டின் மணிப் பொத்தானை அழுத்த, ஹேமாதான் திறந்தாள்.

பெரிய ஹாலில் உள்ளே சித்தார் சங்கீதம் கேட்டது. சோபாவைக் காட்டி உட்காரச் சொன்னாள். பாவாடை தாவணி கட்டிய இருபத்தைந்து வயசுப் பெண் வந்து அவள் முன்னால் மினரல் வாட்டர் பாட்டிலை வைத்து விட்டுச் சென்றாள். தொட்டியில் மீன்கள் எதிர்பாராத திசைகளில் அடிக்கடி திரும்பிக் கொண்டிருந்தன.

"காப்பி, டீ, எலுமிச்சை ஜூஸ் ஏதாவது வேணுங்களா?"

"இது என்ன இடம்?"

"சங்கம்."

உள்ளே தரையில் கோல் தட்டுவதும் யாரோ பரதநாட்டியம் மிதிக்கும் சப்தமும் கேட்டது. வெள்ளைக்காரப் பெண்மணி மேலுதட்டில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டு, அவளருகில் வந்து உட்கார்ந்து, அந்தத் தண்ணீரை அருந்தி, "தட்டடில்லானா வாஸ் ஆஸம்" என்றாள். எதிரே பாரதி படத்தின் கீழ், "விடுதலைக்கு மகளிரெல்லாரும் வேட்கை கொண்டனம் வெல்லுவமென்றே" என எழுதியிருந்தது.

"பரமா, இதுதான் நான் சொன்னேனே, அம்பிகா மேனன், இந்த சங்கத்தின் தலைவி. மேடம் திஸ் இஸ் பரமேசுவரி" என்றாள்.

அம்பிகாமேனன், ஒயர் ப்ரேம் கண்ணாடி மூலம் பரிவாகப் பார்த்து, "வாம்மா!" என்றாள். புதிய பொலிவான தோற்றத்துடன் நாசூக்காக ஹோல்டரில் பொருத்தி, லிப்ஸ்டிக் தீற்றின உதடுகளில் வைத்து சிகரெட் பிடித்தாள். "உன்னைப் பற்றி ஹேமா சொல்லிச்சு. நினெக்கு வாழ்க்கையில் வித்தியாசமா அனுபவம் வேணும்?"

"ஆமா" என்றாள் சற்றே தயக்கத்துடன்.

---

## ஜாலி போட்டி - 23; முடிவு

'புது' போட்டிக்கு ஏராள சரியான விடைகள். குலுக்கலில் தேர்வாகி ரூ.5000 பரிசு பெறுகிறார் எஸ்.. மணிவண்ணன். 129, இந்திரா நகர், கிருமாம்பாக்கம் அஞ்சல், பாகூர் கொம்யூன், பாண்டிச்சேரி - 607 402.

**சரியான விடைகள்:**

பாரதிராஜா - புதுமைப்பெண்
பாக்யராஜ் - புதிய வார்ப்புகள்
ரகுமான் - புதுப்புது அர்த்தங்கள்
ரேவதி - புதிய முகம்
சித்தாரா - புது வசந்தம்
சத்யராஜ் - புதிய வானம்
பிரேம் - புதுப் பிறவி
தாணு - புதுப்பாடகன்

"ஹேமா, பரமேசுவரியை நிலையத்துக்கு அழைச்சுட்டுப் போறது..."

'பாரும்மா, அங்க உள்ள பெரியவங்களுக்குக் கொஞ்சம் தினம் காலையில் ஒரு மணி நேரம் வாசிச்சுக் காண்பிக்கணும். அந்த வேலை சம்மதமோ? மனசுக்கு ரொம்ப திருப்தி தரது."

"நான் விவரம் சொல்றேன் வா" என்றாள் ஹேமா.

"மாசம் ரெண்டாயிரம் ரூபாதான் அவங்களால் தர முடியும்."

பரமேசுவரிக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. ஹேமா அவளை வாசலுக்கு அழைத்து வந்து, "இரு. மேடம் கூட பேசிட்டு வந்துர்றேன். இந்த வேலை உனக்கு ரொம்பப் பிடிச்சதா இருக்கும். உனக்குன்னு ஸ்பெஷலா ஏற்பாடு செய்திருக்காங்க மேடம்."

"இவங்க யாரு?"

"அம்பிகா மேனனைத் தெரியாதுங்கறியா! வெளியுலகத் தொடர்பில்லாம இருந்திருக்க. டீவி பார்க்கறதில்லை?"

"பார்ப்பேனே, ஜெய் ஹனுமான்!"

"அதில் எல்லாம் வரமாட்டாங்க."

ஹேமா அலட்சியமாகக் குறுக்கிட்ட பாதசாரிகளையும் சைக்கிளர்களையும் திட்டிக் கொண்டே முரட்டுத்தனமாக கார் ஓட்டினாள். பொறுமையில்லாமல் ஹாரனை அழுத்திக் கொண்டே, "எல்லா விதத்திலயும் நீ உன்னை அசர்ட் பண்ணணும். இல்லைன்னா ஆண்கள் உலகம் நம்ம தலையில மிளகாய் அரைச்சுரும். அவங்க நம்மைப் பயன்படுத்திக்கற போது நாம அவங்களைப் பயன்படுத்திக்கணும்."

"நாம இப்ப போற இடம்?"

"முதியோர்களுக்கான அமைதி இல்லம். கொஞ்சம் பணக்கார முதியவர்கள். பெண்ணு, பிள்ளைகள் எல்லாரும் அமெரிக்காவில் இருந்து டாலர் அனுப்பறாங்க. லைப்ரரி, ஜிம், கேபின் டீவி, எண்டர்டெயின்மெண்ட் எல்லாமே உண்டு, பாரேன். ஃபைவ் ஸ்டார் ஓட்டல் போல இருக்கும்."

"எனக்கு என்ன வேலை?"

"கொஞ்சம் கொஞ்சமா மேடம் உன்னை இன்வால்வ் பண்ணுவாங்க. முதல்ல அங்க உள்ள தாத்தாங்களுக்குப் படிச்சுக் காட்டணும். அப்புறம் உடம்பு துடைச்சுவிட்டு, பவுடர் போட்டா சம்பளம் மூணு மடங்காகும். வயசானவங்களுக்குச் சேவை செய்யறது எத்தனை உத்தமமானது தெரியுமா?"

"என்ன படிக்கணும்?"

"ஏதாவது பக்தி வேதாந்த புஸ்தகமா இருக்கும், நமக்கென்ன?"

"எனக்குப் படிக்கப் புடிக்கும்!" என்றாள்.



"விடுதலை ஆனப்புறம் தலைவருக்கு ஜெயில்லருந்து நோட்டீஸ் வந்திருக்காமே?"

"ஜெயில்ல அவர் இருந்த அறைல ரெண்டு கம்பி குறையுதாம்!"

-அம்பை தேவா

நிசமாகவே ஒரு விலை உயர்ந்த ஓட்டல் போலத்தான் இருந்தது. கடற்கரை தெரிந்தது. டென்னிஸ் கோர்ட்டு, நீச்சல் குளம் எல்லாம் இருந்தன. பிரம்பு நாற்காலிகளில் பெர்முடா நிஜார் அணிந்து பல முதியவர்கள் கைப்பிரம்புடன் புல் தரையில் ஊடாடிக் கொண்டிருந்தார்கள். சீருடை அணிந்த பெண்மணிகள் அழைத்துச் செல்ல, அவர்கள் தோளை அணைத்துக் கொண்டு, சதா பேசிக் கொண்டு, தட்டுத் தடுமாறிக் கொண்டு சென்றார்கள். சிலருக்கு வயது நூறுக்கு மேல் இருக்கும் போலத் தோன்றியது.

ஹேமா, ராகவேந்திரராவ் என்பவரின் அறையில் நுழைந்து, "ஸார் இதான் பரமேசுவரி" என்றாள்.

கலங்கிய கண்களுடன் அவர் பரமேசுவரியைப் பார்த்தார். "படிச்சுக் காட்டறதுக்கு வந்திருக்கா? கம் மை சைல்டு" என்று ராகவேந்திர ராவ் அவளைத் தோளில் அணைத்து உட்காரச் சொன்னார். தலையில் சொற்ப மயிரிருந்தாலும் அழுத்தி வாரி டை அடித்து தேன் கலரில் இருந்தது.

"என்ன புஸ்தகம் படிக்கணும் தாத்தா?"

"வாட்?"

"கொஞ்சம் இரைஞ்சு பேசு. ஒரு சைடு காது மந்தம். தாத்தாவுக்கு என்ன புஸ்தகம் பிடிக்கும்னு கேக்கறா?"

"ஜாக்குலின் சூஸன், ராபின்ஸ். தமிழ்ல சித்தர் பாடல்கள். டோண்ட் கால் மி தாத்தா. கால் மி மிஸ்டர் ராவ்."

"சரி சரி. வெள்ளிக்கிழமைலருந்து வருவா, மிஸ்டர் ராவ்."

"வா கண்ணு."

அந்த இடத்தைவிட்டு வெளிவந்த போது, "ஜாக்குலின் சூசன் பக்திப் புத்தகமா?"

"எதைப் படிச்சா என்ன, நிறைய டாலர்

வெச்சிருக்கார். சந்தோஷமாய்டுத்துன்னா பரிசாவே தந்துண்டிருப்பார். எல்லாம் பொட்டிக்குள்ள வெச்சிண்டிருக்கு கிழம்."

"அவருக்கு யாரும் இல்லையா?"

"டிவோர்சி. மகள் அமெரிக்காவில. பெண்டாட்டி ரெண்டாம் கல்யாணம் பண்ணிண்டு பெங்களூர்ல. ஆழ்வார்பேட்டைல பெரிய காலி மனை. இன்னிக்கு கோடிக்கணக்கில் வெலை போகும்!"

தூரத்திலிருந்து டாட்டா காட்டினார்.

"இவருக்கும் இன்னொரு கல்யாணம் பண்ணிக்க இஷ்டம்தான். 'ஹிந்து'ல விளம்பரம் கொடுத்திருக்கார். வேடிக்கையா இருக்கும்."

காலடியில் விழுந்த பந்தை எடுத்து வந்த திசையில் எறிந்தாள் ஹேமா.

"காலைல எட்டு மணிக்கு வெள்ளிக்கிழமை வந்துரு. உங்க வீட்டிலிருந்து ஃபைவ்-சி புடிச்சா நேரா நிலைய வாசல்லயே இறங்கிக்கலாம்."

"முதல்ல என் கணவரை கேக்கணுமே இதை ஒப்புத்துக்கலாமான்னு..."

"எதுக்குக் கேட்கணும்?"

"இல்லை. அவருக்கு ப்ரெக்ஃபாஸ்ட் எல்லாம் பண்ணிட்டு வரணும்."

"அதெல்லாம் வெச்சுக்காதே. வாழ்க்கை முழுக்க சமைச்சுப் போட்டாச்சு. உங்க ஏரியாவில இல்லாத ஓட்டலா என்ன? காலைல மட்டும் அட்ஜஸ்ட் பண்ணிக்கச் சொல்லு. இதுக்கெல்லாம் பர்மிஷன் கேட்டா ஆம்பிளைகள் வேண்டாம்னுதான் சொல்லுவா. வம்சத்திலேயே பொம்மனாட்டி வேலைக்குப் போறதில்லையேன்னு மனுவிலருந்து கோட் பண்ணுவா. நீ சொல்ல வேண்டியது 'நான் காலைல காரியமா போறேன். நீங்க ராமாஸ்லயோ கிருஷ்ணாஸ்லயோ இட்லி சாப்ட்டுக்கங்க.' அவ்வளவ்தான்!"

"அரசியலுக்கு வரதுக்கு முன்னாடி என்ன பண்ணிட்டு இருந்தீங்க, தலைவா...?"

"கஸ்மாலம்! ஒரு அரசியல்வாதி ஆரம்பத்துல என்ன பண்ணுவான்னு தெரியாதா?... போலீஸ் ரெக்கார்டை எடுத்துப் பாரு!"

– எஸ்.எஸ்.பூங்கதிர்



"ஒப்புத்துக்க மாட்டார்."

"ஒப்புக் கொண்டுதான் ஆகணும். சாய்ஸே கொடுக்காதே. பண்ணி வெச்சுட்டுப் போறேன் அப்படி இப்படின்னு..."

"பார்க்கலாம்."

"விட்ட குறையா சொல்லாதே. வெள்ளிக்கிழமை வரே."

கணவனிடம் இந்த விஷயத்தை எப்போது எடுப்பது என்று சமயம் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆபீசிலிருந்து வந்ததும் க்ராஸ் வோர்டு போட்டார். சாப்பிடும் போது ஒரு சந்தர்ப்பம் கிடைத்தபோது, போன் அடித்தது. இரவில் முடியாது. ஐந்தாவது நிமிஷம் தூங்கி விடுவார். ஆனால் அவரே கையலம்பினதும் கேட்டு விட்டார். "என்னவோ சொல்லணும்னு அடிக்கடி என்னைச் சுத்தி வரே!" என்றார்.

"எப்படித் தெரிஞ்சுது?"

"ஏம்மா எத்தனை வருஷம் உன்னோட குப்பை கொட்டியிருக்கேன்."

"வந்து, நான் கார்த்தாலை ஒரு வேலைக்குப் போகலாம்னு இருக்கேன். எனக்கும் வீட்டில இருந்து போர் அடிச்சுப் போறது."

"வேலைக்கா? என்ன வேலை? எவ்வளவு சம்பளம்?"

"முதியோர் இல்லத்தில படிச்சுக் காட்டற வேலை. ரெண்டாயிரம் ரூபாய்."

"நீ ரெண்டாயிரம் ரூபாய் சம்பாதிச்சு குடும்பம் நடக்கணுமா?"

"அப்படி இல்லை. எனக்குப் போது போக்கா இருக்குமேன்னு..."

அவர் கண்களின் பாப்பாக்கள் தீர்மானமற்ற நிலையில் ஆடின.

"எத்தனை மணிக்குப் போகணும்?"

"எட்டு மணிக்கு."

"எனக்குக் காப்பி, டிபன் எல்லாம்?"

"போறப்ப ஓட்டல்ல சாப்பிட்டுப் போய்டுங்க ஒரு வேளை."

'முடியவே முடியாது; வேண்டவே வேண்டாம்' என்று சொல்வார் என்றுதான் எதிர்பார்த்தாள். மாறாக, "சரி" என்றார்.

பரமேசுவரிக்கு திக்கென்றது. ஏனோ விட்டு விடுதலை கிடைத்த உற்சாகம் பொங்கவில்லை. காரணம் புரியவில்லை.

வெள்ளிக்கிழமை ராவ் தாத்தா குளித்து விட்டு, சன்னலருகே வெளிச்சத்தில் மடியில் ஷால் போட்டு மூடி, நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அருகே 'வேலி ஆஃப் தி டாலஸ்'ம் பதினெண் சித்தர் பாடல்களும் இருந்தன.

"கம் மை சைல்டு. இந்த மாதிரி மஞ்ச கலர் சாரி கட்டிக்காதே. பொருத்தமா இல்லை. சிவப்பா இருக்கே.... டார்க்கா எதாவது கட்டு!"

என்றார். "இல்லை சுடிதார் மாட்டிக்க... இந்தா.. போன தடவை படிச்சவ 117-ம் பக்கத்தோட நின்னுட்டா. தொடர்ந்து படி..."

அந்தப் புத்தகத்தில் மூன்று பெண்களின் வாழ்க்கை மிகவும் அந்தரங்கமான விவரங்களுடன் இருந்தது. ஆண்-பெண் கூச்சமில்லாமல் படுக்கை அறை ரகசியங்களைப் பரிமாறிக் கொண்டார்கள். இட்டு வார்த்தைகள் சரளமாக இருந்தன. பல இடங்களில் ஆபாச வார்த்தை வரும்போது கூசினாள்.

"உனக்குப் பிடிக்கலையா?"

"ஆபாசமா இருக்கு."

"கற்பனைக் கதைதானே? நீ என்ன படிக்க விரும்பறே? உனக்காக நான் உட்ஹவுஸ் படிக்கிறேன். சித்தர் பாடல் கொஞ்சம் படிச்சுரு. 99-ம் பக்கம் பாரு திருஏகம்ப மாலை."

அவள் சோகையாகச் சிரித்தாள்.

"கைப்பிடி நாயகன் தூங்கையிலே அவன் கையெடுத்து அப்புறம் தன்னில் அசையாமல் முன்வைத்து அயல்வளவில் ஒப்புடன் சென்று துயில் நீத்து பின்வந்து உறங்குவளை எப்படி நான் நம்புவேன் இறைவா கச்சி ஏகம்பனே..."

"டு யுஅக்ரி?"

"எனக்கு அவ்வளவா தமிழ்க் கவிதை புரியாது சார்."

"புரிய என்ன இருக்கு? ரொம்ப எளிமையான பாட்டு. பொண்டாட்டியை எப்படி நம்பறதுங்கறார்? இந்த பாட்டுத்தான் என் வாழ்க்கையில நடந்தது. தள்ளி வச்சது சரியா, தப்பா? சரிதானே? நீங்க எல்லாரும் அப்படித்தானே?" என்றார்.

"இன்னிக்குப் போதும் சார்."

வீட்டுக்குத் திரும்புகையில் முன் பணமாக ரூபாய் ஆயிரம் கொடுத்தார்கள். பரமேசுவரிக்குச் சந்தோஷம் தலைகால் புரியவில்லை. முதன் முதலாகத் தன் கணவனிலிருந்து அன்னியப்பட்டு கைக்குக் கிடைத்த அந்தப் பணத்தின் மதிப்பை விட அது அவளுக்குக் கொடுத்த சக்திதான் தெம்பளித்தது. 'அவனில்லாமல் இயங்க முடியும் என்னால்.'

தினம் காலை எழுந்து கணவனை எழுப்பாமல் கச்சிதமாக உடையணிந்து, தனக்கேற்ற செருப்பு, தனக்கேற்ற காட்டன் புடைவை, பிடித்த பெர்ஃப்யூம் எல்லாம் வாங்கி அணிந்து கொண்டு, ப்ளாட்பாரம் பிள்ளையாரை வணங்கிவிட்டு ஏழு மணி பஸ்ஸில் ஏறிக் கொண்டு, கண்டக்டர் அதே ரூட்டில் முகம் பழகிப் போய் புன்னகைக்க, சகபயணிகளும் புன்னகைக்க,

வெளியே இத்தனை நல்ல விஷயங்களா?

முதல் மாச சம்பளம் வாங்கினதும் அதைக் கணவனிடம் கொடுத்து நமஸ்கரித்த போது, "எங்கிட்ட பணம் இருக்கு" என்றார்.



"சிறை வாழ்க்கை நம்ம தலைவரை ரொம்ப பாதிச்சிடுச்சு!"

எப்படிச் சொல்ற?"

"பக்கத்துல ஸ்கூல் பெல் அடிச்சாகூட உடனே அவருக்கு சாப்பாட்டு ஞாபகம் வந்துடுதாம்!"

– கொங்கணாபுரம் வே. செந்தில்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

"இதுவரைக்கும் நீங்க சம்பாதிச்சு நான் வாங்கிண்டிருக்கேன். நான் சம்பாதிச்சதில் நீங்க ஏதாவது ஷர்ட் வாங்கிக்கங்களேன்."

"சே சே! அவமானம். நீ எனக்கு எதும் வாங்கித் தர வேண்டாம். காலை இந்த டிபன் ராமாயணத்தை ஒழுங்குபண்ணிட்டா போதும்?"

"ஏன்?"

"ஒரு மாசமா ஒட்டல்ல சாப்ட்டு லூஸ் மோஷன். கம்பெனி டாக்டர் அமீபிக் டிசண்ட்ரியா இருக்கும்ங்கறார். ஒட்டல்ல சாப்பிடறது ஒத்துக்கவே இல்லை."

"இட்லிதானே சாப்டறீங்க? சேஃப் ஆச்சே?"

"சில நாள் மாறுதலுக்குப் பூரி கிழங்கு, மசால் தோசை, வடைன்னு நாக்குக் கேக்கறது பாரு. நீ வேலைக்குப் போ, போகாதே... ஐ டோன் கேர். ஆனா ரெண்டு இட்லி மட்டும் பண்ணிக் கொடுத்துட்டுப் போய்டு. எம் ஐ ஆஸ்கிங் டூ மச்?"

"சரி" என்றாள்.

எனவே பரமேசுவரி இப்போது காலை நாலரை மணிக்கே எழுந்து மாற்றி மாற்றி கணவனுக்கு இட்லி அல்லது தோசை தயாரித்துக் கொடுத்து விட்டு, ஏழு மணி பஸ் கூட்டமாக இருக்கிறது என்று ஆறரைக்கே புறப்படுகிறாள்.

ராவ் தாத்தா சில நாள் அன்பாகப் பொழிவார். சில நாள் கிறுக்குத்தனமாக நடந்து கொள்வார். இப்படித்தான் ஒருமுறை படித்து முடித்ததும்...

"எங்க போறே?" என்று கையைப் பிடித்தார். "வா எனக்குப் பவுடர் போட்டு விடு. ஆழ்வார்ப்பேட்டை சொத்தை வித்தா ஒரு கோடி வரும்ங்கறா. ஒரு கோடியை வெச்சுண்டு நான் என்ன பண்ணுவேன்? உனக்கு எழுதித் தரேன்!" என்றவர், மிக அவசரமாக



## ஆட்டோ அட்டூழியம்!

மீட்டருக்கு மேல் கேட்காத ஆட்டோக்காரர்களே இல்லை. சென்னையில் இப்படி என்றால் வெளியூர்களில் மீட்டரே போடுவதில்லை; எங்கு போனாலும் குத்தகை ரேட்டு தான்!

உண்மையிலேயே மீட்டர்படி ஆட்டோ ஓட்டினால் லாபம் கிடைக்காதா? புதிதாக ஒருவர் கடனில் ஆட்டோ வாங்கி கடனுக்கான வட்டி, அசல் எல்லாம் கொடுத்தாலும் நல்ல லாபமே கிடைக்கும். இதோ ஒரு புள்ளி விவரக் கணக்கு.

| | |
|---|---|
| புது ஆட்டோ(பஜாஜ்)வின் விலை (மீட்டர், இன்ஸ்யூரன்ஸ், ஆயுள்வரி உட்பட) | – ரூ. 56,600 |
| ஆட்டோ வாங்கிய தொகைக்கான (ரூ.56,600) 18 சதவிகித மாதாந்திர வட்டி | – ரூ. 849 |
| சராசரியாக ஒரு நாளைக்கு ஓடும் தூரம் | – 100 கி.மீ. |
| ஆளில்லாமல் ஓடும் தூரம் | – 20 கி.மீ. |
| கி. மீட்டருக்கான கட்டணம் | – ரூ. 3.50 |
| குறைந்தபட்சக் கட்டணம் | – ரூ. 7.00 |
| ஆக, ஒரு நாளைக்கான வருமானம் (100X3.50) | – ரூ. 350 |
| ஆளில்லாமல் ஓடும் தூரத்தையும் சேர்த்து ஆகும் பெட்ரோல், ஆயில் மற்றும் பராமரிப்புச் செலவு | – ரூ. 143 |
| மொத்த லாபம் (350-143) | – ரூ. 207 |
| மாதத்துக்கு 28 நாட்கள் ஓடுவதாக வைத்துக் கொண்டாலும் வருமானம் | – ரூ. 5,796 |
| மாத வட்டி | – ரூ. 849 |
| மீதி | – ரூ. 4947 |
| அசலுக்குச் செலுத்தும் தொகை | – ரூ. 1000 |
| எஞ்சிய லாபம் | – ரூ. 3947 |

அதாவது ஒரு ஆட்டோக்காரர் முழுக்க முழுக்க நேர்மையான முறையில் ஓட்டினாலும் சராசரியாக மாதம் 4000 ரூபாய் சம்பாதிக்க முடியும் என்பதுதான் உண்மை. இது குறைந்தபட்சக் கணக்குத்தான்.

இந்த நிலையில் மீட்டருக்கு மேல் வாங்குவது எத்தனை கொள்ளை என்பதை நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள்!

தகவல் – நன்றி : தமிழ்நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு, திருச்சி.

அவன் எதிர்பாராத இடங்களில் எல்லாம் ஒல்லியான உலர்ந்த கையால் உலவியதை சட்டென்று விலக்கிக் கொண்டு வெளியே வந்தாள். உடம்பு படபடத்தது.

வீட்டுக்குப் போனதும் ஹேமாவுக்கு போன் செய்தாள். அவள் டாக்டர் மேனனுடன் இத்தாலியில் பெண்கள் மாநாட்டுக்குப் புறப்படும் அவசரத்தில் இருந்தாள். "என்ன விஷயம் சொல்லு?"

"தாத்தா சரியில்லை ஹேமா..."

"என்னாச்சு?"

"கை அலையறது. கண்ணும் அலையறது."

"அவ்ளவ்தானே! இவருக்கு என்ன வயசு தெரியுமா? நியரிங் எய்ட்டி. அவரால என்ன முடியும்! ஏதோ ஒரு பாசாங்கு சந்தோஷத்துக்காக, பழைய ஞாபகத்துக்காகத்தான் கொஞ்சூண்டு பாக்கியிருக்கு சபலம்."

"இதை டாலரேட் பண்ணணும்ங்கறியா ஹேமா?"

"பாரு, உன்னை ஒரு நர்ஸ் மாதிரி நினைச்சுக்கயேன். அடுத்த வருஷம் செத்துப் போறதுக்குள்ள ஒரு அல்ப சந்தோஷம் கொடுக்கறம்னு நினைச்சுக்கயேன். உபத்திரவமில்லாத பாசாங்கு சந்தோஷம். அவரால ஒண்ணும் முடியாது. புடிச்சு ஒரு தள்ளுத் தள்ளினா அந்த க்ஷணமே ப்ராணனை விட்டுடும். உனக்குப் பிடிக்கலைன்னா நேரா தாத்தாகிட்ட சொல்லிடு. இல்லை நாற்காலிய கொஞ்சம் தள்ளி வெச்சுண்டு படி. தாத்தா புரிஞ்சுப்பார்."

பரமேசுவரிக்குக் குழப்பமாக இருந்தது.

"தாத்தா தொட்டதாலே கற்பு கிற்பு கலைஞ்சு போச்சுன்னு– அந்த டைப்பா நீ?"

"சொல்லத் தெரியலை ஹேமா, என்னமோ கம்பளிப் பூச்சி ஊர்ற மாதிரி இருக்கு."

ஹேமா இத்தாலிக்குப் போய் வந்தபின் பெய்ஜிங் செல்லும் ஆயத்தத்தில் மும்முரமாக இருந்தாள். ஒருமுறை சந்தித்த போது காரில் அவளை வீட்டில் கொண்டு விட்டாள். "எப்படி இருக்கே? தாத்தா தொந்தரவு பண்றாரா?"

"இல்லை ஹேமா. பாதி நாளைக்குப் படிக்கறபோதே தூங்கிடறார்."

"கணவன்?"

"அவருக்கு டைனிங் டேபின் மேல இட்லியும் மோரும் வெச்சுட்டா போறும்."

"சொன்னேன் பாத்தியா. இப்ப லைஃப் கொஞ்சம் வித்தியாசமா இல்லையா? உனக்குன்னு ஒரு தனி சுதந்தரம், தனியா பஸ்ல போறது, சம்பளம் வாங்கறது, சம்பாதிக்கறதை உனக்குன்னு செலவு பண்ணிக்கறது எல்லாமே ஒரு மாறுதலா, ஒரு விடுதலை போல இல்லையா?"

"இதுதான் விடுதலையா ஹேமா?" என்றாள் பரமேசுவரி.



# மனைவியிடம் கடன் வாங்கிய லாலு!

## தில்லி நியூஸ் :

● பஞ்சாப் பயங்கரவாதிகளைப் பற்றிய குல்ஸாரின் திரைப்படம் 'மாச்சிஸ்' (தீக்குச்சிகள்) தடை செய்யப்பட வேண்டும் என்ற காங்கிரஸ் கட்சியின் வேண்டுகோளை, தேர்தல் கமிஷன் நிராகரித்து விட்டது. பஞ்சாபின் 117 டெபுடி கமிஷனர்களுக்கும் கடிதம் எழுதி, அவர்கள் கருத்துக்களைக் கேட்ட பிறகே தேர்தல் கமிஷன் இந்த முடிவை எடுத்தது. சட்டம் - ஒழுங்கு பாதிக்கப்படும் நிலைமையை இந்தத் திரைப்படம் உருவாக்காது என்று 17 மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகளும் சொல்லி விட்டார்கள்!

● திஹார் சிறையிலிருந்து வெளியே வந்திருக்கும் சந்திராசுவாமி, தமது பழைய ஆசிரமத்துக்கு ஒரு புதிய எலக்ட்ரானிக் நாற்காலியை வரவழைத்திருக்கிறார். விலை 15,000 ரூபாய். ஸ்பாண்டிலைடிஸ் தொந்தரவைச் சமாளிக்கத்தான் இந்த நாற்காலி. இப்போது பரவாயில்லையாம். சந்திராசுவாமியின் மருத்துவரும், ஓர் எலக்ட்ரானிக் இஞ்சினீயருமாகச் சேர்ந்து இந்த நாற்காலியை உருவாக்கியிருக்கிறார்கள். இருமலுக்கும் தொண்டைக் கமறலுக்கும் சந்திராசுவாமி இப்போது மருந்து எதுவும் சாப்பிடுவதில்லை. இரண்டு வெள்ளி தம்ளர்களில் வைத்திருக்கும் சுடுதண்ணீரை அவ்வப்போது வாயில் போட்டுக் கொப்பளிக்கிறார்!

● சிவில் விமானத் துறை மற்றும் ஒலி-ஒளி பரப்புத் துறை அமைச்சரைப் பார்க்கப் போன பத்திரிகையாளர்களுக்கு அதிர்ச்சி. சி.எம். இப்ராகிம் மேசை மீது இருந்த கடிதத்தின் நகல் தந்ததுதான் அது. சமீபத்தில் காங்கிரசில் இணைந்த என்.டி. திவாரி, வெளிநாட்டில் சுற்றுப் பயணம் போகிறார். அவர் எங்கெங்கே போகிறார், எங்கு தங்குகிறார், யாரை எல்லாம் பார்க்கிறார் என்ற தகவல்களை ரகசியமாக அனுப்பும்படி, வர்த்தக அமைச்சகம், இந்திய தூதரகங்களுக்கு அனுப்பிய கடிதத்தின் நகல், இப்ராகிமின் மேசை மீது எப்படி வந்தது? பத்திரிகையாளர்கள் புரிந்து கொண்டார்களாம், பிரதமரின் சூப்பர் சி.பி.ஐ. தலைவர் இப்ராகிம் தான் என்று!

● தகவல் - தொடர்பு அமைச்சர் பேணி பிரசாத் வர்மாவுக்கு, தமது தலைவர் முலாயம்சிங் யாதவ் மீது அசாத்திய கோபம். தமக்குத் தர வேண்டிய முக்கியத்துவத்தை முலாயம்சிங் யாதவ் தருவதில்லையாம். பேணி பிரசாத் வர்மாவைக் கட்சியிலும், கட்சிக்கு வெளியிலும் தலைவர் மதிப்பதில்லை என்று அறிந்து கொண்ட சமாஜ்வாதி தொண்டர்கள் மட்டும் அவரை ஏன் கண்டுகொள்ளுகிறார்கள்! அதனால் வர்மாவுக்குத் தம் தலைவர் மீதும், தம் கட்சித் தொண்டர்கள் மீதும் சரியான கோபம்.

● பிப்ரவரி 23-ஆம் தேதி நடக்க வேண்டிய தில்லி முனிசிபல் கார்ப்பரேஷன் தேர்தல்கள் திடீரென்று ஒத்திப் போடப்பட்டிருக்கின்றன. வோட்டர்கள் லிஸ்ட் இன்னும்

தயாராகவில்லை. முதலமைச்சர் சாஹிப் சிங் வர்மாவுக்கும், பா.ஜ.க. தலைவர் கேதார் நாத் சஹானிக்கும் இது விஷயம் நன்றாகத் தெரிந் தும், பிப்ரவரி 23-ஆம் தேதி தேர்தல் நடக்கும் என்று எப்படி முதலில் அறிவித்தார்கள் என்று கேட்கிறது காங்கிரஸ் கட்சி.

● கேசரிக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தியிருக்கும் ராவ் ஆதரவாளர்கள், பஞ் சாப் தேர்தலில் தங்கள் கோஷ்டியினர் பெரு வாரியாக வெற்றி பெற்று விட்டால், கேசரிக்கு அதுவே ஒரு பாடமாக அமையும் என்று நம்பு கிறார்கள். திடீரென்று தங்கள் உதவிக்கு வந் திருக்கும் சந்திரசேகரையும், சந்திராசுவாமி யையும் இவர்கள் பலமாக நம்புகிறார்கள். இதற் காக ராவ் ஆதரவாளர்கள் அடிக்கடி சந்திர சேகரைச் சந்தித்து விவாதிக்கிறார்கள். பட் ஜெட் கூட்டத் தொடரில் ராவ் ஆதரவாளர் கள் நாடாளுமன்றத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று பாடமே நடத்து கிறார் சந்திரசேகர்!

● தில்லி துப்புரவுத் தொழிலாளி தூலி சந்த் திடமிருந்து கண்டுபிடிக்கப்பட்டு, பரபரப்பை உண்டாக்கி இருக்கும் சுமார் ஒன்றே முக்கால் கோடி ரூபாயும் யாருடையது என்று கிட்டத் தட்ட கண்டுபிடித்து விட்டது சி.பி.ஐ. முன் னாள் மத்திய அமைச்சர் ஆர்.கே. தாவன்தான் அதற்குச் சொந்தக்காரர் என்று அறிவித்தும் விட்டார்கள். சில 'கோல்டு பிஸ்கட்டுகள்', சுமார் 40 லட்ச ரூபாய் எல்லாமே தாவனுக்குச் சொந்தம் என்கிறார்கள். நவம்பர் மாதம் கண்டு பிடிக்கப்பட்ட இந்தக் கொள்ளையை வெளியே வராமல் தடுக்க, உயர் போலீஸ் அதி காரி ஒருவருக்கு 25 லட்ச ரூபாய் கொடுக் கப்பட்டதும் வெளியாகியிருக்கிறது. சாகேத் பகுதியில் உள்ள ஒரு வீட்டைச் சுத்தப்படுத்தப் போன தூலி சந்துக்குக் கிடைத்த கரன்சி புதை யலில், அவர் கிட்டத்தட்ட ஒரு மகாராஜா மாதிரி நடந்து கொண்டார். இரண்டாவது கல் யாணம் செய்து கொண்டு ஹனிமூன் எல் லாம் கூட போனார்! சுமார் 20 லட்ச ரூபாய் செலவான பிறகே அவருடைய நண்பர் ஒருவர் போலீசுக்குத் தகவல் சொன்னாராம்!

● சமீபத்தில் வெளியான இன்கம்டாக்ஸ் தகவல்படி, பீகார் முதல்வர் லாலுபிரசாத் யாத வுக்கு, அவர் மனைவி ரப்ரிதேவி இரண்டரை லட்ச ரூபாய் கடன் கொடுத்திருக்கிறார். ஸிவான், தானாப்பூர் ஆகிய இடங்களில் நில புலன்களும், ஏழு லட்ச ரூபாய் ஃபிக்சட் டெபாசிட்டும், மாருதி கார், ஜோங்கா ஜீப் எல் லாம் இருக்கிறதாகக் காண்பிக்கிற லாலு, தாம் மனைவியிடமிருந்து இரண்டரை லட்ச ரூபாய் கடனாகப் பெற்றதாகக் காண்பித்திருப்பதை வருமான வரி அதிகாரிகள் வேடிக்கையாக நினைக்கிறார்கள். ஆனால் தமக்கும் ஜலால் பூர், தானாப்பூர் ஆகிய இடங்களில் நிலங் களும், பாட்னா ராஜாபஸாரில் ஒரு வீடும், சேமிப்புக் கணக்கில் ஆறரை லட்ச ரூபாயும் இருப்பதாக ரபாரி தேவி கணக்குக் காண்பித் திருக்கிறார். கல்யாணத்தின் போது கிடைத்த பரிசுகள் என்றும், விவசாயத்தில் கிடைத்த வருமானம் என்றும் ரபாரிதேவி சொல்லுவதை வருமானவரி அதிகாரிகள் நம்ப மறுக்கிறார்கள்.

● பட்ஜெட் சமர்ப்பிக்கும் முன், காங்கிரஸ் தலைவர் கேசரியிடம் பிரதமர் தேவேகௌடா கலந்தாலோசிக்க வேண்டும் என்ற நிபந் தனையை காங்கிரஸ் கட்சி வலியுறுத்தி வரு கிறது. சரத் பவார் அல்லது கேசரி தலைமை யிலான ஒரு குழு, தேவேகௌடாவிடம் பேசட்டுமே என்ற அரசுத் தரப்பு வாதத்தை காங்கிரஸ் ஏற்கவில்லை. 'நாங்கள்தானே வெளியே இருந்து ஆதரவு கொடுக்கிறோம்? எங் களுக்குத் தெரியாமல் என்ன பட்ஜெட் தயாரிக்கக் கிடக்கிறது?' என்கிறார் காட்டில். இதற்கிடையில் பிரதமரின் நம்பகமான ஆட் கள், ராஜேஷ் பைலட்டையும், சரத்பவாரையும் இன்னும் சில முக்கியப் புள்ளிகளையும் சந்தித்து, ஐக்கிய முன்னணி அரசில் சேருவது பற்றியும், முக்கியமான அரசுத் துறை கார்ப் பரேஷன்களுக்கு சேர்மன் பதவிகளை ஏற்பது பற்றியும் பேசுவது கேசரிக்கு ஆத்திரத்தையும் எரிச்சலையும் ஊட்டியிருக்கிறது!

● கண்-மண் தெரியாமல் ஓட்டி சாலை விபத்துக்களில் நூற்றுக்கணக்கான பேரை மேல் உலகத்துக்கு அனுப்பி வைக்கும் ப்ளூலைன், ரெட்லைன் பஸ் டிரைவர்களைப் பரி சோதித்து, பயிற்சியும் அளிக்கத் தொடங்கி இருக்கிறது தில்லி போலீஸ். டிசம்பரில் தொடங்கிய இந்தப் பணியில் இதுவரை 1344 டிரைவர்கள் பரிசோதிக்கப்பட்டார்கள். 382 பேர் தேறவில்லை! தில்லி போலீசுக்கு, போக்கு வரத்துக் குற்றங்கள் மூலமே தினசரி 50,000 ரூபாய் வருமானம் வருகிறதாம்!

● ஆசியாவிலேயே மிகப் புகழ்பெற்ற ராஜன்பாபு காசநோய் மருத்துவமனையின் இன்றைய நிலையைப் பார்க்கும் எவருக்கும் கண்ணில் நீர் வரும். அத்தனை மோசமாக இருக்கிறது. இயந்திரங்கள் சரியாக இல்லை; எக்ஸ்ரே பிலிம்கள் இல்லவே இல்லை!

● இன்டெலிஜன்ஸ் பீரோவுக்கு ஸ்பெஷல் டைரக்டரை நியமித்திருக்கிறார் பிரதமர் தேவேகௌடா. பெயர் : டி. சீனிவாசலு. கர் நாடகத்தில் சிறைத்துறை உயர் அதிகாரியாக, தேவேகௌடா முதலமைச்சராக இருந்தபோது பதவி வகித்திருக்கிறார் சீனிவாசலு! அப் போதே இருவரும் வெகு நெருக்கமானவர் களாம்!

**— நியூஸ்வாலா**

புறப்படும்போது அம்மா இரண்டு நாட்களாகச் சொல்லிக் கொண்டிருந்ததைச் சொன்னாள்.

''மறக்காம லட்சுமியக்கா வீட்டுக்குப் போயிட்டு வந்துரு.''

அவனுக்குக் கல்யாண வீட்டை விட லட்சுமியக்கா வீட்டின் நினைவுக் காட்சிகள் தான் மனசில் ஓடின.

முதலில் சுகுமாரன் முகம் தோன்றியது.

சுகுமாரன் தத்துவம் பேசினான். சிரித்தான். பாடினான். ஆடினான். கத்தினான். நடந்தான். கோபமாகப் பார்த்தான். கல்லை எடுத்து வீசினான். யார்மண்டையிலோ பட்டது.

சுகுமாரனின் தங்கை மாதவி ஒரு வாரம் தலையில் கட்டுப் போட்டுக் கொண்டு வேலைக்குப் போனாள்.

சுகுமாரனின் அப்பா பெரியசாமி தினமும் குடித்துக் கொண்டுதான் வருவார். மகன் பைத்தியமாகிப் போய் விட்ட கவலை. சில நேரங்களில் ரோட்டில் படுத்துக் கொண்டிருப்பார். யாராவது பார்த்துவிட்டு வந்து சொல்வார்கள். லட்சுமியக்கா பதறியடித்துக் கொண்டு ஓடுவாள்.

சுகுமாரனின் அம்மா லட்சுமியக்காவிற்கு அடிக்கடி பதறியடித்துக் கொண்டு ஓடுகிற வாழ்க்கை.

சுகுமாரன் திடீரென்று இரண்டு நாட்கள் காணாமல் போய் விட்டான். லட்சுமியக்கா அலைஅலையென்று அலைந்தாள். வாய்க்கால்மேட்டில் யாரோ பிணம் மிதந்து கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். அலறியடித்துக் கொண்டு ஓடினாள். சுகுமாரன் இல்லை.

மருதமலை அடிவாரத்தில் சுகு

# காலம்



மாரன் சுற்றிக் கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது. தயாளனையும் சண்முகத்தையும் கூட்டிக் கொண்டு ஓடினாள். படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டு போவோர் வருவோரிடம் பிச்சை கேட்டுக் கொண்டிருந்தான்.

"அடப்பாவி மகனே..." என்று அவனருகே போய் அமர்ந்து அழுது புலம்பினாள்.

சுகுமாரனிடம் தயாளன் ஏதேதோ பேசி ஆசை காட்டினான். அவனை அடிவாரத்தில் இருந்து இழுத்து வருவதற்குள் படாதபாடு பட்டு விட்டார்கள்.

"போலீஸ்காரர் நிக்கறார்... வந்துரு... போயிடலாம்..." என்று பஸ் டிரைவர் ஒருத்தரைக் காட்டிச் சொன்னதும் மிரண்டு போய் கூட வந்தான்.

வாடகைக் கார் பிடித்து அவனை துடியலூருக்கு அழைத்து வந்தார்கள்.

சுகுமாரனுக்கு பதினேழாவது வயதில் பைத்தியம். கடுமையானதாக இல்லாவிட்டாலும் ஒருவிதக் கிறுக்குத்தனம் பிடித்துக்

**கனகராஜன்**

கொண்டதாகச் சொல்வார்கள்.

தயாளனின் குடும்பம் லட்சுமியக்காவின் வீட்டிற்குக் குடிவந்த போது சுகுமாரனுக்கு இருபத்தி நான்கு வயது. லட்சுமியக்கா மூன்று அறைகளை வாடகைக்கு விட்டிருந்தாள்.

முதல் நாள் பார்த்தபோது சுகுமாரன் திண்ணையில் அமைதியாய் உட்கார்ந்து கொண்டிருந்தான். இரண்டாவது நாளும் அப்படியே. மூன்றாவது நாள்தான் அவனது நோய் தெரிந்தது. பஸ் ஸ்டாப்பில் துண்டு பீடி, சிகரெட்டுகளை பொறுக்கிக் கொண்டிருந்தான். கீழே கிடந்த பழைய வாட்டரிச் சீட்டுகளைப் பொறுக்கிச் சட்டைப் பையில் திணித்துக் கொண்டிருந்தான். பஸ் நிற்கிற போதெல்லாம் ஓடிப் போய் 'போலாம் ரைட்... போலாம் ரைட்...' என்று கத்திக் கொண்டிருந்தான்.

தயாளனுக்கு சந்தேகம் வந்தது. பக்கத்து அறையில் குடியிருந்த சண்முகத்திடம் கேட்டான்.

சுகுமாரனுக்குப் 'பைத்தியம்'. அவன் பைத்தியமாகி விட்ட கவலையில் பெரியசாமி பெரிய குடிகாரர் ஆகிவிட்டார். வேலைக்குப் போவதில்லை. கல்யாண வயசில் மாதவி. செயற்கை வைரம் தீட்டும் கம்பெனிக்கு வேலைக்குப் போகிறாள். லட்சுமியக்காவிற்கு புருசனையும் மகனையும் பார்த்துக் கொள்கிற வேலை. வீட்டு வாடகைப் பணமும் மகளின் சம்பளப் பணமும் குடும்பத்தை ஓட்டுகிறது.

பெரியசாமி குடிக்கப் பணம் கேட்டு ரகளை செய்வார். பணம் தராவிட்டால் ஏதாவது ஒரு பொருளைத் தூக்கிக் கொண்டு போய் விடுவார். மாதவியின் வாட்சை ஒரு தடவை தூக்கிக் கொண்டு போய் விற்று – குடித்துத் தீர்த்தார்.

மாதவியின் முகத்தில் புன்னகையையே பார்க்க முடியாது. யார் கூடவும் பேசவும் மாட்டாள். அவள் அதிகமாகப் பேசிய வார்த்தைகள் இதுவாகத்தான் இருக்கும்.

''அம்மா... நான் போயிட்டு வர்றேன்...'' வேலைக்குப் போகும்போது சொல்வது.

நாலைந்து தடவை மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்து அவளைப் பெண் பார்த்துவிட்டுப் போனார்கள். அப்பா குடிகாரர், அண்ணன் பைத்தியம் என்பதைக் காரணம் காட்டி அதிகமாக நகை கேட்டார்கள். வீடு முழுக்க மாதவியின் பேரில் இருக்க வேண்டும் என்றார்கள்.

மாதவியின் கல்யாணம் தள்ளிக் கொண்டே போனது.

லட்சுமியக்கா புருசனைப் பற்றிக் கவலைப்பட்டாள். மகன் பைத்தியம் தெளிய வேண்டுமே என்று ஏங்கினாள். மகள் கல்யாணம் தள்ளித் தள்ளிப் போகிறதே என்று வேதனைப்பட்டாள்.

லட்சுமியக்கா எல்லோருடனும் பிரியமாகப் பழகினாள். பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு ஓடி ஓடி உதவி செய்கிறவளாக இருந்தாள்.

சுகுமாரனை அடிக்கடி பக்கத்து ஊர்க் கோவில்களுக்கு கூட்டிப் போவாள். தூரத்தில் ஏதாவதொரு கோவிலின் பெருமை பற்றிக் கேள்விப்பட்டால் சுகுமாரனை அழைத்துப் போய் இரண்டு நாட்கள் இருந்துவிட்டு வருவாள். துணைக்கு சண்முகமோ, தயாளனோ கூடப் போய் வருவார்கள்.

ஆஸ்பத்திரி ஆஸ்பத்திரியாக ஏறுவதும் தொடர்ந்தது. பூரண குணமாவதற்கான வாய்ப்புகளே அதிகம் இருப்பதாக டாக்டர்கள் சொன்னதால் மருந்து, மாத்திரை என்று மாதவியின் சம்பளப் பணமும் கரைந்தது.

சுகுமாரனுக்கு மருந்து, மாத்திரைகள் தருவதற்குள் லட்சுமியக்கா படாதபாடுபட்டு விடுவாள்.

"அய்யோ... என்னை வெஷம் குடுத்துக் கொல்ல வர்றா..." சுகுமாரன் கத்துவான். அவனை இரண்டு பேர் பிடித்துக் கொண்டு மருந்துகளை விழுங்க வைக்க வேண்டும். அவனுக்கு வெறி அதிகமாகி விடும். வயிற்றுக்குள் போன மருந்தை வெளியே வரவழைக்கக் கண்டபடி துப்புவான். கோபத்தில் லட்சுமியக்காவைப் போட்டு அடித்து விடுவான். அத்தனை அடிகளையும் அவள் தாங்கிக் கொள்வாள். ஒரு தடவை அவனிடம் உதைபட்டு இரண்டு நாட்கள் நடக்க முடியாமல் அவதிப்பட்டாள்.

பெரியசாமி குடித்து விட்டு வந்து சுகுமாரனைப் போட்டு அடிப்பார்.

"செத்துப் போடா... செத்துப் போடா..." என்று...

பெரியசாமியை தயாளனும் சண்முகமும் இழுத்துக் கொண்டு போவார்கள்.

"விடுங்கடா... விடுங்கடா... அவனைக் கொல்லணும்..." என்று கதறுவார்.

அந்தக் காட்சியைப் பார்த்துவிட்டு லட்சுமியக்கா கவரோடு சாய்ந்து கொண்டு அழுவதைப் பார்க்க மனசுக்குக் கஷ்டமாக இருக்கும்.

தயாளனின் அப்பாவிற்கு பொள்ளாச்சிப் பக்கம் வேலை மாற்றம் வந்தது.

"தயாளா... கோயமுத்தூர் வந்தா எங்க வீட்டுக்கு வா... அடிக்கடி வந்திட்டுப் போங்க. மறந்திடாதீங்கப்பா..." லட்சுமியக்கா கண் கலங்க வழியனுப்பி வைத்தாள்.

ஆறேழு வருடங்கள் ஆகிவிட்டன.

துடியலூர் போகிற சந்தர்ப்பமோ, லட்சுமியக்காவைப் பார்க்கிற வாய்ப்போ ஏற்படவில்லை.

அம்மாவின் பெரியப்பா வீட்டுக் கல்யாணம். பெண் வீட்டார் துடியலூரைச் சேர்ந்தவர்கள். கல்யாணப் பத்திரிகையைப் பார்த்ததில் இருந்து லட்சுமியக்காவைப் பற்றி அம்மா பேசிக் கொண்டே இருந்தாள்.

கல்யாணத்துக்குச் சென்றபோது, தயாளன் கல்யாண மண்டபத்தை விட்டு வெளியே வந்தான். பாரதிநகரில் லட்சுமியக்காவின் வீடு.

நடந்தான்.

எதிரே வந்து கொண்டிருந்த ஒரு ஆள் சட்டென்று நின்றான்.

"ஹலோ... நீங்க தயாளன்தானே?" என்று கேட்டான்.

"அட... சண்முகம்..."

"எங்க திடீர்னு இந்தப் பக்கம்? உன்னைப் பார்த்து எத்தனை வருசமாச்சு...? எப்படி இருக்கே? எங்க இருக்கே?"

சொன்னான்.

"லட்சுமியக்கா எப்படி இருக்கறாங்க சண்முகம்? அவங்களைப் பார்க்கணும்."

"அது பெரிய கதை தயாளா?"

"என்ன? சொல்லு சண்முகம்."

"பெரியசாமி செத்துப் போயிட்டாரு... அவர் செத்து அஞ்சு வருசமாச்சு..."

"அடக்கடவுளே...!"

"சுகுமாரனுக்கு பைத்தியம் தெளிஞ்சு குணமாயிட்டான்."

"அப்படியா? பரவாயில்லையே?"

"என்ன பரவாயில்லை... மாதவிக்குக் கல்யாணம் ஏற்பாடாச்சு. இந்த சுகுமாரன் பணம் நகையெல்லாம் தூக்கிட்டு எங்கயோ ஓடிப் போயிட்டான். மாதவி கொஞ்சம் கொஞ்சமா சேர்த்து வெச்ச பணம். அவன் ஓடிப் போயி மூணு வருசமாச்சு... லட்சுமியக்கா என்ன செய்யும்? இவனுக்கு ஆஸ்பத்திரி செலவுக்குன்னு வாங்கின கடன்... நகை வாங்கின கடன் எல்லாத்தையும் அடைக்க வீட்டை வித்துட்டாங்க."

"அப்புறம்...?"

"மாதவி கல்யாணம் அநியாயமா நின்னு போச்சே... அதை நெனைச்சு நெனைச்சே லட்சுமியக்காவுக்கு கிறுக்குப் புடிச்சுப் போச்சு."

"இப்ப அவங்க எங்க இருக்கறாங்க?"

"கவுண்டம்பாளையத்தில... மாதவி இன்னும் அதே கம்பெனிக்கு வேலைக்குப் போகுது லட்சுமியக்காவைப் பார்த்துக்கணும்... வேலைக்குப் போகணும்... பாவம் அது..."

"சண்முகம்... அவங்களை நான் பார்க்கணுமே? அட்ரஸ் இருக்கா?"

"வேண்டாம்பா... லட்சுமியக்கா யாரைப் பார்த்தாலும் 'சுகுமாரா... சுகுமாரா'ன்னு அழுகுது. மாதவிக்கு நம்மளைப் பார்த்தா விசனம் அதிகமாயிடுது. அவங்க சித்தி வீட்டில இருக்கறாங்க..."

தயாளன் பேசாமல் நின்றான்.

"வா டீ சாப்பிடலாம்..."

"இல்ல... சண்முகம் கல்யாண வீட்டில சாப்பிட்டேன். உனக்குக் கம்பெனிக்கு நேரமாச்சு... நீ கிளம்பு... இன்னொரு நாளைக்குப் பார்ப்போம். நான் புறப்படறேன்..." விடைபெற்றுக் கொண்டு பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தான்.

'அம்மா... போயிட்டு வர்றேன்...' மாதவியின் குரல் மனசுக்குள் ஒலித்தது.

தயாளன் அம்மாவிடம் பொய் சொல்வது என்று முடிவு செய்தான். கல்யாண வீட்டில் ரொம்ப நேரமாகி விட்டதால் லட்சுமியக்கா வீட்டிற்குப் போக முடியவில்லையென்று. அம்மா இவன் மேல் ரொம்ப சங்கடப்படுவாள். வேதனையை விட சங்கடம் பரவாயில்லை.

# குறையொன்றுமில்

**போ**ன வாரம் ராமனை யோசனையிலே விட்டு விட்டு வந்தோம்! இப்படிக்கூட யோசித்தானாம் ஸ்ரீராமன்: 'சீதை பத்து மாதம் சிறையில் இருந்தாளே... அதனால்தான் வால்மீகி இதை (ராமாயணத்தை) அவள் சரித்திரம் என்று கொண்டாடினானோ...? சிறையிருந்ததால் ஏற்பட்ட ஏற்றமோ இது...? சிறையிருந்ததால் ஏற்பட்ட ஏற்றம்தான் என்பது சத்தியமானால், அடுத்த அவதாரத்தில் நாம் சிறையிலேயே பிறக்க வேண்டியதுதான்...'

இதையொட்டியே பகவான், கிருஷ்ணாவதாரத்திலே சிறைச்சாலையிலேயே பிறந்தான். அந்த அவதாரத்தின் பெருமையெல்லாம் யாருக்கு...? அவனுக்குத்தான்!

ராமாயணத்தில், சிறையிருந்தவளுடைய ஏற்றம் சொல்லப்படுகிறது. மஹாபாரதத்தில் தூது போனவனின் ஏற்றம் சொல்லப்படுகிறது. அந்த அவதாரத்தில் (பாரதம்) பரமாத்மா ஈடில்லாத தூதுவனாய் விளங்கினான்.

இப்படி இரண்டு அவதாரங்களில் பகவான் நமக்கு தர்மத்தைக் காட்டி



முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



லை

யிருக்கிறான். ஆகையினால் புருஷகாரம் என்று சொன்னேனே... சிபாரிசு - அதை மனத்தில் கொண்டு; நாமும் மஹாலக்ஷ்மியினுடைய முன்னிலையில் பகவானிடத்திலே சரணாகதி பண்ணணும்.

தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்பவை சதுர்வித புருஷார்த்தங்கள் – அதாவது மனிதர்கள் ஏற்றம் அடைவதற்குப் பெற வேண்டிய நான்கு விதமான புருஷார்த்தங்கள். இவற்றைத்தான் ராமாயணத்திலே அவதரித்தே விளக்கினான் பகவான்.

தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்கிற நான்கையும் ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்களான நான்கு சகோதரர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

தர்மம் - பகவான் ராமன். அர்த்தமாய் இருக்கக்கூடியவன் இளையபெருமாள் லக்ஷ்மணன். காமமாய் இருக்கக்கூடியவன் சத்ருக்னன்; மோக்ஷமாய் இருக்கக்கூடியவன் பரதன். இப்படி நான்குவித புருஷார்த்தங்களை நான்கு பேர் காட்டிக் கொடுத்தார்கள்.

இவற்றுள் மூத்த சகோதரனான 'தர்மத்துக்கு'க் கெடுதல் ஏற்பட்டால், அர்த்தமும் இல்லை. காமமும் இல்லை மோக்ஷமும் இல்லை...! அர்த்த, காம, மோக்ஷம் சித்திக்க வேண்டுமென்றால் தர்மம் நல்ல முறையிலே இருக்க வேண்டும். தர்மம் கெட்டது எனில் மற்ற எதுவுமே பயன் தராது.

இதில் அர்த்தம் - அதாவது பொருள் - இருக்கிறதே.... அது தர்மத்தை அண்டியே இருக்க வேண்டும். காமம் இருக்கிறதே... ஆசை அல்லது... இச்சை.... இது மோக்ஷத்தையொட்டியே இருக்க வேண்டும். ராமாயணத்தில் அப்படித்தான் இருக்கிறது என்பது கவனித்துப் பார்த்தால் புரியும்.

அர்த்தமான இளைய பெருமான் லக்ஷ்மணன் எப்போதுமே ராமனை - தர்மத்தை - விட்டுப் பிரியாமலே இருந்தான். தர்ம வழியில்தான் பொருள் ஈட்டப்பட வேண்டும். தர்ம வழியில்தான் அது செலவழிக்கப்பட வேண்டும் என்பதைக் காட்டுகிறது இது.

பரதனோடு கூடவே எப்போதும் இருந்தான் சத்ருக்னன் - காமம் அல்லது இச்சை மோக்ஷத்தையொட்டியே இருக்க வேணும் என்பதைக் காட்டும்விதமாக....



சத்ருக்னன் குற்றமற்றவன். ராமபக்தி என்கிற குற்றத்தைச் செய்யாதவன்!

'ராம பக்தி என்பது குற்றமா...? அதெப்படி...?' என்று எல்லோருக்குமே சந்தேகம் வரும். ராம பக்தியோடு நின்றால் அது குற்றம். ராமனுடைய சரணாரவிந்தத்திலே பக்தியுடையவர்களின் திருவடியில் பக்தி கொண்டவன் அவன். இது பாகவத பக்தி எனப்படும் - பரதனுக்கு ராமன் அல்லால் தெய்வம் இல்லை. அப்படிப்பட்ட பரதனை சத்ருக்னன் ஆச்ரயித்தான். ஆகையினால் இந்த பக்தி உயர்ந்தது.

பாகவதோத்தமர்களிடத்திலே அன்புடன் இருப்பது என்பது ரொம்ப கஷ்டம். சத்ருக்னாழ்வார் காட்டிய அந்த பரம நெறியைத்தான் மதுரகவியாழ்வாரும் பின்னாளில் காட்டி அருளினார்.

நம்மாழ்வாருடைய திருவடியைப் பற்றினார் மதுரகவி ஆழ்வார். துவாபர யுகத்திலே இருந்தவர் இந்த மதுரகவி ஆழ்வார். அப்போது பகவான் கிருஷ்ணன் துவாரகையில் இருந்தான். ஆனால் இவர் போய் ஒருநாள்கூட கிருஷ்ணனைச் சேவிக்கவில்லை. கலியுகத்திலே நம்மாழ்வார் அவதரித்தபோதோ அந்த நம்மாழ்வாரின் திருவடியை இவர் போய் பற்றினார்! அவரைத் தவிர வேறொரு தெய்வம் தனக்கு இல்லை என்று சொல்லிவிட்டார்.

மதுரகவி ஆழ்வார் காட்டிய நெறி, சத்ருக்னாழ்வார் காட்டிய அதே நெறிதான்.

அயோத்தி பக்கத்திலே சஞ்சாரம் பண்ணிக் கொண்டிருந்தார் மதுரகவி ஆழ்வார். அப்போது தென் திக்கிலிருந்து ஒரு ஜோதி கிளம்பி, திருக்குருகூர் என்கிற இடத்திலே போய் விழுந்தது. அங்கே புளியமரப் பொந்தில் ஒருத்தர் உட்கார்ந்திருந்தார். அதி தேஜஸ்வியாகக் கண்ணை மூடிக் கொண்டு தியானத்திலிருந்தார். அங்கே போய்ச் சேர்ந்த மதுரகவி ஆழ்வார், அவரிடம் பேசினால் காதிலே விழுமோ, விழாதோ என்று சந்தேகப்பட்டு, ஒரு கல்லை எடுத்துக் கீழே போட்டார். அது 'டக்'கென்று கீழே விழுந்ததும் அந்த தேஜஸ்வி கண்ணைத் திறந்து பார்த்தார். உடனே ஒரு கேள்வியைக் கேட்டார் ஆழ்வார்.

"செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்...?"

இதற்குப் பதிலாக என்ன சொன்னார் தெரியுமா...?

"அத்தைத் தின்று அங்கே கிடக்கும்!" என்றார் அந்தப் பெரியவர்!

இதில் ஓர் அர்த்தம் பொதிந்து கிடக்கிறது.

'செத்தது' என்றால் இந்தச் சரீரம். 'சிறியது' என்றால் ஆத்மா. அதாவது 'சரீரத்தினுள்ளே இருக்கிற ஆத்மா எதைத் தின்று எங்கே கிடக்கும்...?' என்று கேள்வி.

இதற்குச் சொல்லப்பட்ட பதிலுக்கு என்ன அர்த்தம் என்று கேட்டோமானால், 'ஆசார்ய அனுக்கிரஹம் ஏற்படாத வரையில், சரீரமானது தன்னைத் தானே புதுப்பித்துக் கொண்டு - அதாவது மீண்டும் மீண்டும் பிறவி எடுத்து அல்லலுறும்...' (அத்தைத் தின்று அங்கே கிடக்கும்) என்று அர்த்தம்.

சில விஷயங்களில் எல்லா ஆசார்யர்களும் ஒன்றே போல் பேசுவதை நாம் கவனிக்க வேண்டும். ஆதிசங்கரரும் இதையேதான் சொல்கிறார்: 'எவனொருவன் வாழ்ந்து கொண்டிருக்கிறபோதே தன் சரீரத்தைப் பிணமாகக் கருதுகிறானோ, அவன்தான் மோக்ஷத்துக்கு அதிகாரி. சரீரத்துக்குப் பண்ணக்கூடிய அலங்காரமெல்லாம் பிணத்துக்குப் பண்ணக் கூடிய அலங்காரம்தான். இந்த சரீரம் அழியக் கூடியது; அதனால்தான் இதற்குப் பண்ணக் கூடிய அலங்காரமும் அழியும். ஆத்மாவுக்குப் பண்ணக்கூடிய அலங்காரத்துக்கு பிரும்மாலங்காரம் என்று பெயர். அது அழியவே அழியாது.

புளியமரப் பொந்திலிருந்த மகான் இந்தப் பேருண்மையை சூசகமாய்ச் சொன்னதும் மதுரகவியாழ்வார் அவரையே தமக்கு தெய்வம் என்று கொண்டு விட்டார். 'இன்றைய தினம் அன்பனானேன்' என்று பதினோரு பாசுரங்களில் அவ்வனுபவத்தைப் பாடினார். நாலாயிர திவ்யப்ரபந்தங்களை ஒரு தட்டிலும் அந்தப் பதினோரு பாசுரங்களை மட்டும் இன்னொரு தட்டிலும் எடை போட்டோமானால்... இந்தப் பதினொன்றே பளுவுடையதாக இருக்கும்! ஏனெனில் அது பகவத் பிரபாவம்; இது பாகவத (குரு) பிரபாவம்.

## அருள்வாக்கு

எரிந்த மரம் கரியாகிறது. அந்தக் கரியும் முதிர்ந்தால் பளிங்காக, வயிரமாக ஆகிறது. உலகம் இருந்தபோதிலும் அதன் மாயை நம்மைத் தொடாமல் எல்லாம் விஷ்ணுமயமாகத் தெரிகிறபோது, நம் அஞ்ஞானம் எரிந்து கரியாகப் போன நிலையில் இருக்கிறோம். திருமாலும் இதனாலேயே கருமாலாக இருக்கிறார். கரி வைரமாகிறது போன்ற நிலைக்கு - ஸ்படிகமாகிற நிலைக்கு - சுத்த ஸ்படிக ஸங்காசமான பரமேசுவரன் தெய்வமாக இருக்கிறார். கரியும் வைரமும் வேறு வேறு அல்ல. இதுவேதான் அதுவாயிருக்கிறது. மகாவிஷ்ணுவும் பரமேசுவரனும் ஒருத்தரேதான். உலகத்தின் ஆசாபாசங்கள், இவற்றுக்குக் காரணமான மாயை ஆகியவற்றின் நானாவிதமான வர்ண ஆட்டங்கள் இருவரிடத்திலும் இல்லை. மகாவிஷ்ணுவின் கறுப்பு, சிவனின் வெளுப்பு இரண்டுமே சயன்ஸ்படி ஏழு வர்ணங்களில் சேரவில்லை. சத்தியமான தத்

துவம் மாயையால் வேறுவிதமாக மாறித் தெரிகிறபோதுதான் வர்ணங்கள் உண்டாகின்றன. இருப்பதைப் பொய்யாக மாற்றிச் சொல்வதை இங்கிலீஷில் coloured version என்றே சொல்கிறார்கள் அல்லவா? கலர் வந்து விட்டால் பொய்க்கு வந்து விட்டோம் என்று அர்த்தம். கலர் இல்லாத கறுப்பு விஷ்ணுவிடமும் வெள்ளைச் சிவனிடமும் மனத்தை வைக்கிற வரையில் சத்தியத்தோடேயே ஒட்டிக் கொண்டிருக்கிறோம்.



இறுதியான வெண்மைக்கு அடையாளமாகவே கரியையும் எரித்தபின் கிடைக்கிற விபூதிச் சாம்பலைச் சைவர்கள் தரிக்கிறார்கள். என்றும் நிற்பது எதுவோ அதுவே நீறு; திருநீறு. மாயை தீண்டாத உலகத்துக்கு அடையாளம் மண். மரம், செடி, கொடி எல்லாம் மண்ணிலே பிறந்து, மண்ணிலே வளர்ந்து முடிவில் மட்கி மடிகிறபோது மண்ணே ஆகின்றன. எனவே மண்ணும் முடிவான நிலைக்கு அடையாளமாக இருக்கிறது. இதனால்தான் வைஷ்ணவர்கள் திருமண் இட்டுக் கொள்கிறார்கள். திருநீறும் திருமண்ணும் ஒரே தத்துவத்தைத்தான் காட்டுகின்றன. ஹரி-ஹர பேதம் இல்லாதது போல், அவர்களுக்குரிய சின்னங்களிலும் பேதமில்லை. ஜகத்தில் இருந்து கொண்டே மேல் நோக்கி உயர வேண்டும் என்பதற்காகத் திருமண்ணை மேல் நோக்கிப் போட்டுக் கொள்கிறார்கள். எல்லாம் சமமாகி விட்ட சிவயோக நிலையில் விபூதியை உயர வாட்டில் போடாமல் நெற்றியில் குறுக்கே தரித்துக் கொள்கிறார்கள்.

சிவனுக்கும் திருமாலுக்குமிடையே பேதம் கற்பிப்பது கொஞ்சம்கூடச் சரியில்லை. வைஷ்ணவ ஆழ்வார்களும், சைவ நாயன்மார்களும் உயர்ந்த பக்தி நிலையில் இரண்டையும் ஒரே ஸ்வரூபமாகக் கண்டு பாடியிருக்கிறார்கள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

பாகவத பிரபாவத்தைத்தான் சத்ருக்னன் காட்டினான். அவன் காட்டிய பரமநெறிதான் மதுரகவியாழ்வாருக்கு மூலமாக அமைந்தது.

சதுர்வித புருஷார்த்தங்கள் (தர்ம, அர்த்த, காம, மோக்ஷம்) ராமாயணத்தில் நான்கு திவ்ய புருஷர்கள் மூலமாகத் தெரிகிறது என்று சொன்னேன். பகவானே நான்கு வித புருஷார்த்தங்களுக்கும் உறைவிடமானவன். பகவான், ஆதிசேஷன், சுதர்ஸனம் (சக்ரம்), பாஞ்சஜன்யம் (சங்கு) என நான்கும் இந்த நான்குவித அர்த்தம் காட்டுபவை.

ராமாயணத்திலே தர்மத்தை பகவான் உணர்த்தியதாகச் சொன்னேன். மூன்று வித தர்மங்கள் உண்டு என்கின்றனர் பெரியோர்.

சேஷத்வம், பாரதந்த்ரியம், பாரதந்த்ரிய காஷ்ட என்று மூன்று விதமாக இந்த தர்மங்களைச் சொல்வர்.

சேஷத்வம் என்றால் 'கட்டிப் பொன் போலே...' என்று பொருள்.

இளையபெருமாள் லக்ஷ்மணன் செய்த கைங்கர்யம் சேஷத்வம் போன்றது - அப்படியே கடினம்! இரவு பகல் கண்விழித்து, கூட இருந்தபடியே கைங்கர்யம் செய்வதென்பது ரொம்ப கஷ்டமான காரியம். அதை லக்ஷ்மணன் செய்தான். எல்லோராலேயும் செய்யக்கூடியது அன்று அது!

'இமைத்திலன் நயனம் என்றான்...' என்று லக்ஷ்மணன் குறித்துச் சொல்லப்படுகிறது. எம்பெருமானும் சீதாபிராட்டியும் வனவாசத்தின் போது கண் துயில்கிறார்கள். அப்போது வெளியிலே நின்று இமைக்காமல் காவல் காத்தானே... ராத்திரி பகல் வித்தியாசமில்லாமல் நின்று கண்ணை இரப்பை காப்பதுபோல் காத்தானே! கூடவே இருந்தானே...!

இந்த வனவாசத்தின்போதுதான் தசரதன் மாண்ட செய்தி பரதன் மூலமாக ராமனுக்கு எட்டுகிறது. அப்போது அச்செய்தியை ராமபிரான் லக்ஷ்மணனுக்கு எப்படி எடுத்துச் சொன்னான் என்பதைப் பார்க்கணும். அந்த வார்த்தைகளை நன்றாகக் கவனிக்க வேண்டும்.

"ஹே லக்ஷ்மணா! நீ உன் தந்தையை இழந்தாயடா!" என்றான்.

அடியேனுக்கு ஒரு கோணலான புத்தி! ராமன் பேரிலேயும் தோஷம் சொல்ல வேண்டும் என்கிற ஆசை! அதனாலே இந்த இடத்தில் கோணலாக வியாக்யானம் பண்ணிக் காட்டுகிறேன்.'

'லக்ஷ்மணா! உன் தந்தையை நீ இழந்தாயடா!' என்று ராமன் சொன்னதிலிருந்து என்ன தெரிகிறது...? அப்பா தன்னைக் காட்டுக்குப் போகச் சொன்னது குறித்து ராமனுக்கு ரொம்ப வருத்தம். வெறுப்பே வந்து விட்டது. அதனால் தசரதனைத் தந்தையாக ராமன் பாவிக்கவில்லை. 'லக்ஷ்மணா! உங்க அப்பா போய்ட்டார்' என்று சொன்ன வார்த்தை...'

- இப்படி அடியேனுடைய புத்தி நினைக்கிறது!

ஆனால், ஆசார்யர்களும் மகான்களும் தங்கள் வியாக்யானத்தில் எம்பெருமானுடைய புஷ்பம் போன்ற திருவுள்ளத்தை நமக்குக் காட்டுகிறார்கள்.

என்ன வியாக்யானம் அது...? எதை உத்தேசித்து ஸ்ரீராமன் அப்படிப் பேசினான்... ஒரு வாரம் காத்திருந்து படியுங்களேன்!

(தொடரும்)

# கம

மூன்று மாதங்களுக்கு முன்பு வரை தாமோதரனின் மனைவி கமலா சாதாரணமாகத்தானிருந்தாள்.

தாமோதரனுக்கும் எனக்கும் ஒரே வங்கியில் தான் வேலை. இருபத்தைந்து வருஷத்துப் பழக்கம். நான் தாமுவின் கல்யாணத்துக்குக்கூடப் போயிருக்கிறேன். அப்போதெல்லாம் கமலா பூஞ்சையாக, கருப்பாயிருப்பாள். அப்புறம், இரண்டு குழந்தைகள் பெற்ற பிறகு ஆள் கொஞ்சம் வெளுத்துக் கொண்டு, ஆகிருதியாகிவிட்டாள். ரொம்பச் சிக்கனமாகக் குடித்தனம் செய்பவள் என்று என் மனைவி சொல்லக் கேட்டிருக்கிறேன். இதற்கு மேல் அவளைப் பற்றி எனக்கு எந்த வித அபிப்பிராயமுமிருந்ததில்லை. தாமு என்னிடம் வந்து, "வா, உன்னோடு கொஞ்சம் பேசணும். வீட்டுக்கு நடந்துண்டே பேசலாம்," என்று பொடி வைக்கும் வரை.

வீட்டுக்குப் போகும் வழியில்தான் நாகேசுவரராவ் பூங்கா. உள்ளே நுழைந்து பெஞ்சில் உட்கார்ந்ததும், "என்ன விஷயம்?" என்றேன்.

தாமு சில நிமிடங்கள் மௌனமாயிருந்தான். முகத்தைப் பார்த்தால் அழுது விடுவான் போலிருந்தது.

"என்னடா, ஏதோ பேசணும்னியே?"

"எப்படிச் சொல்றதுன்னு தெரியலே மணி. கமலாவைப் பத்தி ரொம்பக் கவலையாயிருக்கு."

"என்னாச்சு? ஏதாவது உடம்புக்கு...?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. சரி, இரண்டு மாசம் முன்னாடி, ஒரு நாள் சாயந்திரம் நான் ஆபீஸிலேருந்து வீட்டுக்குப் போனப்போ, டிபனைக் குடுத்துட்டு, காபியை அனுபவிச்சு நான் குடிக்கிற சமயமாப் பாத்து, 'தெருக்கோடி அம்புஜம்மாள் வீட்டிலே பஜனை க்ளாஸ் ஆரம்பிச்சிருக்கா.



# லாவைத் தேடி..

துக்கவா? மாசம் பத்து ரூபா தான்'ன்னா. நானும் உடனே சரின்னேன். அவளுக்கும் மத்தியான நேரம் போது போகணு மோல்லியோ? பொண்ணு, பிள்ளை ரெண்டு பேரும் காலேஜ், ஸ்கூல்னு போயிடறா. நாள் பூரா ஆத்திலே தனியாத் தானேயிருக்கா, போயிட்டு வரட்டுமேன்னு, ஒரு இரக்க உணர்ச்சியிலே சரின்னேன். அதுவே என் தலையிலே மண்ணை வாரிப் போட்டுண்டதா ஆயிடுத்து."

"என்ன சொல்ற நீ?"

"பூரா விஷயத்தையும் கேளு இப்பத்தான் தெருவுக்குப் பத்து மாமியா சேந்துண்டு மத்தியான நேரத்திலே சௌந்தர்யலஹரி, லலிதா சஹஸ்ரநாமம்னு கோஷ்டியா, பாடத் தெரிய றதோ



இல்லியோ, கத்திட்டாவது வராளே? அது மாதிரியாக்கும்னு நெனச்சிண்டிருந்துட்டேன். இது அப்படியில்லே."

"பிறகெப்படி?"

தாமு என்னைக் கேட்டான், "உனக்கு ஆத்மானந்தா சுவாமியைத் தெரியுமோ?"

"எனக்கெப்படித் தெரியும்? பிரேமானந்தாவைப் பற்றித்தான் பேப்பர்ல படிச்சிருக்கேன்."

"இந்த அம்புஜம்மாள் அவருடைய பரம பக்தை. வீட்டில் அவரோட போட்டோவை வச்சு அதுக்கு பூஜையெல்லாம் செய்யறாளாம். பஜனை கிளாஸ்லயும் ஸ்லோகங்கள் தவிர அவரைப் பத்தி பிரத்யேகமா ஸ்தோத்ரம் பண்ற பாட்டையும் சொல்லித் தரா. குருவாரத்தில், படத்திலேருந்து விபூதி குங்குமமெல்லாம் கொட்டறதாம். எங்காத்து பூஜை ரூம்ல கூட அவரோட போட்டோ ஒண்ணு வந்து உக்காந்திண்டிருக்கு."

"சரி, அதுக்கென்ன?"

"அதுக்கு ஒண்ணுமில்லே, இதெல்லாம் என் பெண்டாட்டிய பாதிக்க ஆரம்பிக்கிற வரையில்... ஒரு மாசம் முன்னாடின்னு

வெ.ஜானகி

நெனக்கறேன். ஒரு நா ராத்திரி நடுநிசில திடுக்கினு முழிப்பு வந்துது. எழுந்து பாத்தா பக்கத்திலே கமலாவைக் காணோம். பூஜை ரூம்ல லைட் எரியறது. எழுந்து போய் பார்த்தா, இவ நடு ராத்திரிலெ தலைக்குக் குளிச்சுட்டு வடம் வடமா ஈரத் தலைமயிர் முதுகிலெ தொங்க, நெத்தி முழுக்க குங்குமத்தையும் விபூதியையும் அப்பிண்டு, சாமி வந்த வளாட்டம், 'நந்த லாலா, நந்தலாலா'ன்னு என்னமோ பாடி ஆடிண்டிருக்கா. நான் பயந்து போயிட்டேன். 'கமலா, கமலா'ன்னு உரக்கக் கூப்பிட்டப்போ, கண்ணைத் திறந்து பாக்கறா. ஆனா கண்ணுலெ என்னைத் தெரிஞ்சுண்ட பாவனையேயில்லெ.

"பகவானுடைய அற்புதத்தைப் பாருங்கோ. இந்த ஏழையோட குடிசைல எழுந்தருளியிருக்கார். சுவாமி, சுவாமி!"ன்னு சொல்லிண்டே விழுந்து விழுந்து நமஸ்காரம் பண்றா. அப்புறம்தான் பாத்தேன். ஆத்மானந்தாவோட போட்டோ மேலேயும், அதுக்கு கீழே தரையிலேயும் ஒரே குங்குமமா சிதறியிருக்கு. எனக்கு என்ன பண்றதுன்னே புரியலே. இவளானா குதிகுதின்னு குதிக்கறா, இரைஞ்சு பாடறா, அந்தக் குங்குமத்தை அள்ளி அள்ளிப் பூசிக்கிறா. இதுக்குள்ளே குழந்தைகளும் எழுந்து வந்துட்டா. ரொம்ப பயந்து போயிடுத்து அதுகள். பொண்ணு 'அம்மா, அம்மா'ன்னு அழவே ஆரம்பிச்சுட்டா. இந்தக் கூத்தெல்லாம்

ஒரு பதினஞ்சு நிமிஷம் நடந்திருக்கும். பிறகு மரம் சாயறா மாதிரி கமலா தடக்குனு கீழே விழுந்துட்டா. பேச்சு மூச்சில்லே. கைகாலெல்லாம் 'அட்டை மாதிரி விரைச்சுண்டுடுத்து. அப்புறம் மூஞ்சிலெ தண்ணி தெளிச்சு எழுப்பி உக்கார வச்சோம். ஒண்ணுமே நடக்காதது மாதிரி எழுந்து வந்தா. குழந்தைகளைப் போய் படுக்கச் சொன்னா. தானும் ஹால்லே ஒரு பாயை விரிச்சுப் படுத்துண்டுட்டா.. நான்தான் பைத்தியக்காரன் மாதிரி ராத்திரி பூரா முழிச்சுண்டு கவலைப் பட்டுண்டிருந்தேன்."

சில வினாடிகள் எங்களிடையே மௌனம் நிலவியது. பிறகு தாமு, "அன்னியிலேருந்து தனித்தனி படுக்கைதான். அவ ஹால்லே, நான் பெட்ரூம்லெ," என்றான்.

"அப்படி வா, வழிக்கு," என்றேன் நான். "இதானே உன்னை பாடாப்படுத்தறது?"

"இல்லடா," என்றான் தாமு சீரியஸாக. "அதை நான் மிஸ்ஸே பண்ணலே. சொல்லப் போனா, விரிச்ச தலையும் நெத்தி நிறையக் குங்குமமும் விபூதியும், வெறிச்ச பார்வையுமா கமலாவைப் பாக்கறச்சே, பக்திப் பட ஹீரோயின் மாதிரிதானிருக்கே தவிர என் பொண்டாட்டி மாதிரியில்லே. இப்ப அவளே வந்து என் ரூம்லே படுத்தாக் கூட நான் எழுந்து வெளியே போயிடுவேன்."

"சரிடா, அப்ப என்ன பிரச்னை?"

"என்ன இப்படி கேக்கற? எனக்கு என்னோட பழைய, சாதுவான கமலா வேணும். கல்யாணத்துக்கு ஒரு பொண்ணு இருக்காடா எனக்கு! இவ இப்படி தையா தக்கான்னு குதிச்சுண்டு, நடு நிசியிலே பஜனை பண்ணிண்டிருந்தான்னா, யாருடா என் வீட்டிலெ சம்பந்தம் வச்சுப்பா?"

பாவமாயிருந்தது தாமுவைப் பார்க்க. முடிந்த அளவு சமாதானம் சொல்லி, வீடு வரை கொண்டு விட்டு வந்தேன். வீட்டில் கமலா இருந்தாள். தாமு சொன்னதைப் போல, பெரிய சைஸில் குங்குமப் பொட்டு, அதன் மேல் ஒரு விபூதிப் பட்டை, அதன் கீழ் ஒரு சந்தனப் பட்டை என்று, நெற்றியில் ஒரு அங்குலம் விடாமல் அலங்கரித்திருந்தாள். நான் "சௌக்கியமா?" என்று விசாரித்ததற்கு, அமர்த்தலாகப் புன்னகைத்தாள். தாமுவின் 'பழைய, சாதுவான பெண்டாட்டி' காணாமல் போய் விட்டாள் என்றே தோன்றியது.

இது நடந்து ஒரு வாரத்தில் என்னை வங்கியின் மாம்பலம் கிளைக்கு மாற்றி விட்டார்கள். தாமுவிடமிருந்து பிரியாவிடை பெற்றுச் சென்றேன். ஓரிரு மாதங்களுக்கு அவனை வந்து பார்க்க முடியாத அளவுக்கு வேலை. பிறகொரு நாள் மயிலாப்பூர் கிளைக்கு ஒரு வேலையாய் வந்தபோதுதான் சந்திக்க முடிந்தது. "உன் ஒய்ஃப் எப்படியிருக்கா?" என்றேன்.

"இன்னும் மோசமாகிவிட்டது, மணி."

"என்ன பண்றா?"

"இப்பல்லாம் நானே கமலாவைப் பாக்கணும்னா அப்பாயின்மென்ட் வாங்கணும். அவ்வளவு பிஸி."

"என்ன பண்றா?"

"என்ன பண்றாளா? உனக்கு விஷயமே தெரியாதா? அவதாம்ப்பா சீஃப் பஜனைப் பாடகி! அம்புஜம்மாளையெல்லாம் ஓவர்டேக் பண்ணியாச்சு. இப்ப எல்லோரும் இவளைத்தான் பாடக் கூப்பிடறா. சாயந்திரமானா, திருவல்லிக்கேணி, மாம்பலம், அண்ணாநகர்னு சென்னை மாநகர்ல சிதறிக்கிடக்கிற ஆத்மானந்தா ஸ்வாமிகளின் பக்த கோடிகளின் வீடுகளில் சப்ளாக்கட்டை, ஜால்ரா, ஆர்மோனியம் சகிதம் போய் ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருக்கா?"

"நிஜமாவா?"

"பின்னே? ஒரு வாரமாச்சு, ரெண்டு வாரமாச்சு. தினம் சாயந்திரம் வீட்டுக்குப் போனா இவ வீட்டிலே இருக்கறதில்லே. கேட்டாக்க, 'மாமி இங்கே பஜனை பாடப் போயிருக்கா, அங்கே ஜட்ஜ் ஆத்திலே கூப்பிட்டிருக்கா'ன்னு எதுத்தாத்துலே, பக்காத்தாத்திலேருந்து தகவல். ஒரு நாளைப் போல ராத்திரி உப்புமாவோ, தயிர் சாதமோ சாப்பிட்டு, எனக்கும் குழந்தைகளுக்கும் சலிச்சுடுத்து. இவளானா ராத்திரி பத்து மணிக்கு யார் கார்லயாவது தன் சிஷ்ய கோடிகள் புடைசூழவந்து இறங்குவா. 'மாமி, இன்னிக்கு பஜன் அற்புதம், கண்ணுலெ தண்ணியே வந்துடுத்து'ன்னு ஏதாவது பேத்திக்கிட்டு அதுக கிளம்பிப் போகும். இவ சம்பிரதாயமா 'சாப்பிட்டேளா'ன்னு கேட்



எந்தப் பேச்சாளரும் ஒரு நிகழ்ச்சியில் நாலு சொற்பொழிவு நிகழ்த்துகிறார்கள். சொல்ல வேண்டுமென்று குறிப்பு எழுதி வைத்திருந்தது; உண்மையில் சொன்னது; சொல்லியிருந்திருக்கலாமே என்று நினைத்துக் கொண்டது; சொன்னதாக மறுநாள் செய்தி வெளியானது.

– டான் டெட்ரா

தகவல்: ஜெயப்பிரகாஷ்

# கல்கி – பாலு ஜுவல்லர்ஸ் இணைந்து வழங்கும்



## வாரம் ஒரு சவரன் போட்டி – 4

எல்லாப் பாடங்களையும் பள்ளியிலோ, கல்லூரியிலோதான் பயில முடியும் என்பதில்லை. மிக முக்கியமான வாழ்க்கைப் பாடத்தை நாம் அனுபவத்தில்தான் கற்றுக் கொள்கிறோம். அப்படிக் கற்றுக் கொண்ட - பள்ளியில் பயிலாத - அந்த சுவாரஸ்யமான பாடம் ஒன்றைக் கீழுள்ள கூப்பனில் சுருக்கமாக எழுதியனுப்புங்கள். சிறந்தவை பிரசுரமாகிச் சன்மானம் பெறும். அவற்றில் மிகச் சிறந்த ஒன்றை எழுதியவருக்கு ஒரு சவரன் பரிசு!

கூப்பன் வந்து சேரக் கடைசித் தேதி: 10.2.97

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**சவரன் போட்டி - 4**

**பள்ளியில் பயிலாத பாடம் :**

பெயர்:..........................................................

முகவரி:..........................................................

..........................................................

..........................................................

டுட்டுப் போய் படுத்துண்டுடுவா." தாமு உணர்ச்சிவசப்பட்டு நிறுத்தினான்.

"ஏண்டா, நீ ஏன் இப்படி நடந்துக்கறேன்னு அவளை நீ கேக்கலியோ?"

"கேட்டேனே?"

"என்ன சொன்னா?"

'சொல்றேன். அதுக்கு முன்னாடி நடந்ததைக் கேளு. நடுவிலே நாலு நாள் காளஹஸ்தி கிட்ட ஒரு கிராமத்திலேருக்கிற ஆத்மானந்தாவோட ஆசிரமத்துக்கு வேற போயிட்டா. எல்லாம் அவ புது சிநேகிதிகளோடத்தான். சுவாமிகள் இவளோட பஜனையையெல்லாம் ரொம்ப ரசிச்சுக் கேட்டுட்டு, ஒரு சால்வையைப் பரிசாக் கொடுத்தார்னு கொண்டு வந்து பூஜை ரூம்லெ வெச்சிருக்கா. இந்த ட்ரிப்புக்கு அவ போனதிலே நான் ரொம்ப டென்ஷனாயிட்டேன். போனாப் போறதுன்னு விட்டா ரொம்ப ஜாஸ்தியாயிண்டிருக்குன்னு தோணிப் போச்சு.

"மறுநாள் இவ பாடப்போன பஜனைக்கு அவளுக்குத் தெரியாம நானும் போயிருந்தேன். யாரோ தொழிலதிபர் வீடு அது. மந்தைவெளில பெரிய பங்களா. கண்டபடிக்கு எல்லாரும் வீட்டுக்குள் பஜனை கேட்கப் போயிண்டிருந்தா. என்னைக் கூட யாரு என்னன்னு கேக்காம உள்ளே விட்டுட்டா. ஹால்லே பெரிய ஜமுக்காளம் விரிச்சு, பெரிய சைஸ் குத்து விளக்கு ஏத்தி வச்சிருந்தா. பிள்ளையார், ராமர் பாட்டாபிஷேகப் படங்களோட, ஆத்மானந்தாவோட லாமினேடட் ப்ளோ அப், மந்தகாசமா சிரிச்சுண்டு, நடு நாயகமா வச்சிருந்தா. நான் கூட்டத்தோட கூட்டமா போய் உக்காந்த கொஞ்ச நாழிக்கெல்லாம் வாசல்ல கார் வந்து நின்று, கமலாவும், கூட நாலஞ்சு பொம்மனாட்டிகளுமா உள்ளே வந்தா. பயங்கர வரவேற்பு. நெஜமா, ஒரு நிமிஷம் அவளை எனக்கு அடையாளம் கூடத் தெரியலே. அகலமா, ஏக ஜரிகை போட்ட ஒரு புடைவை கட்டிண்டிருந்தா. சத்தியமா அது நான் வாங்கிக் கொடுத்ததில்லே. தகதகன்னு... ஐயாயிரமாவது இருக்கும். யார் வீட்டிலே கொடுத்தாளோ? அது போறாதுன்னு தலைலே ஒரு வண்டி கனகாம்பரம். கண்ணிலே மை. மணி, நீ எப்பவாவது நம்மாத்து பொம்மனாட்டிகள் இப்படி வழிய வழிய மையிட்டுண்டு, நரைச்ச தலையிலே கனகாம்பரத்தை வச்சுண்டு பாத்திருக்கியா?"

நான் யோசித்துப் பார்த்தேன். இல்லையென்றுதான் தோன்றியது.

"மூஞ்சுரு மாதிரி சாதுவா இருப்பாடா கமலா. அந்த பஜனையிலே அவளை நீ பாத்திருக்கணுமே? அதென்ன பாட்டு, கண்ணீர்னு தூக்கிப்போட வக்கற மாதிரி குரல்லே?

கண்ணைச் செருகிண்டு, அதென்ன உருகி யுருகி நாம சங்கீர்த்தனம்? பஜனை முடிஞ் சோன்ன, கற்பூர ஆரத்தி. கண்டவாளும் அவ காலிலே விழுந்து, இட்டப் போய் குறை யெல்லாம் சொல்லிண்டா. இவளும் கண்ணை மூடி பிரார்த்தனை பண்ணிண்டு அவாளுக்கு விபூதியும் குங்குமமும் கொடுத்தா. இவ என் னடா, சந்நியாசினியா, மகானா– மகானுக்கு பெண் பால் கூடத் தெரியலியேடா! ஏண்டா, என் நிலைமைலே ஒரு புருஷன் என்ன செய்வான்?"

"தெரியலே. எனக்கு இதுலே அனுபவம் போறாது."

"நான் சொல்றேன். இழுத்து வச்சு ரெண்டு சாத்து சாத்தி, என்னடியிதுன்னு கேட்பான். நானும் அதைத்தான் செஞ்சேன். அதாவது... அடிச்சுக்கிடிச்சு ஒண்ணும் பண்ணலே. ஆனா ரொம்பக் கறாரா கேட்டுப்பிட்டேன், 'ஏண்டி, உனக்கே இது நன்னாருக்கா? குடும்ப ஸ்திரீ நீ. இந்த மாதிரி பளபளன்னு ட்ரெஸ் பண்ணிண்டு வீடு வீடாப் போய் பஜனை பண் ணிண்டு, குடும்பத்தை கவனிக்காமயிருக்கிறது தான் பக்தியா?'ன்னு. ஆனா அவ அதுக் கெல்லாம் ஒண்ணும் மசியலே. கொஞ்சம் கூட பதறாம, என்னை நேருக்கு நேர் பார்த்துச் சொல்றா, 'இதப் பாருங்கோ, இருபது வருஷம் உங்களோட பொண்டாட்டியா, குழந்தை களுக்கு அம்மாவா வாழ்ந்தாச்சு. இப்பத்தான் எனக்கு வாழ்க்கையிலே உண்மையாவே எது முக்கியம்னு புரிஞ்சிருக்கு. என் ஆத்ம திருப் திக்கு இதச் செய்யறேன். உங்களுக்கு இது கஷ்டமாயிருந்தாச் சொல்லுங்கோ, நான் சுவாமியோட ஆசிரமத்திலேயே போய் இருந் துக்கறேன்' அப்படீன்னு. இதுக்கு மேல என்ன சொல்ல? எப்படியோ தொலையட்டும்னு விட்டுட்டேன். இப்பல்லாம் அவ வழிலே குறுக்கிடறதேயில்லை."

ஒரு வாரம் போலச் சென்றிருக்கும். அன்றைய தினசரியில் மூன்றாம் பக்கம் ஒரு செய்தி. "ஆத்மானந்தா சுவாமி கைது!" ஆர்வத்துடன் படித்தேன். "ராம்பள்ளி: ஜூலை 8: ராம்பள்ளியிலுள்ள சுவாமி ஆத் மானந்தாவின் ஆசிரமத்தில் நேற்று போலீசார் சோதனை நடத்தினர். அப்போது போதை மருந்துக் கடத்தலில் ஈடுபட்ட கும்பலுக்கு ஆசிரமத்தில் அடைக்கலம் கொடுத்திருப்பது தெரிய வந்தது. இது தொடர்பாக சுவாமி ஆத்மானந்தாவையும் அவரது பிரதம சிஷ்யர் நரேந்திராவையும், சதீஷ்குமார், கந்தசாமி, பிரேம் மற்றும் கோவிந்து என்ற கடத்தல் காரர்களையும் போலீசார் கைது செய் தனர். ராம்பள்ளி கோர்ட்டில் இவர்கள் அனைவரும் ஆஜர் படுத்தப்பட்டனர்.



"யாருப்பா... நீ.. இது வரை உன்னைப் பார்த்ததே இல்ல... என் வகுப்புல ஏன் வந்து உக்காந்துருக்க?"

"நா ராமசாமிதான் சார்.. கமல் ரசிகனா இருக்கறதால மூணு மணி நேரம் மேக்கப் போட்டு மூகத்தை மாத்தியிருக்கேன்!"

– அம்பை தேவா

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

தலைமை மாஜிஸ்திரேட் ஆர். கோபல்லா அவர்கள் அனைவரையும் பதினைந்து நாட் கள் போலீஸ் காவலில் வைக்கும்படி உத் தரவிட்டார்." மேலும் விரிவாக எழுதப்பட் டிருந்தது. ஆனால் நான் படிக்கவில்லை. ஆத்மானந்தா கோர்ட்டுக்குள் கொண்டு செல்லப்படும் போட்டோவை நோட்டம் விட்டுவிட்டு, தாமுவுக்கு போன் செய்தேன்.

"பாத்தியா பேப்பர்லே?" என்றான் எடுத்தவுடன்.

"அதுக்காகத்தானே போன் பண்ணினேன். ஆத்மானந்தா சாயம்தான் வெளுத்துடுத்தே? கமலா என்ன சொல்றா?"

"செய்தியப் பாத்தோண்ண முகம் மாறிடுத்து. பேசாம பூஜை ரூம்ல போய் உக் காந்துட்டா. அப்புறம் கிளம்பி அம்புஜம்மாள் வீட்டுக்குப் போயிருக்கா. அங்கே இந்த ஏரியால இருக்கிற ஆத்மானந்தா பக்தர் களெல்லாம் மீட்டிங் போடறா போலிருக்கு. எப்படியோ, கமலாவோட பித்தம் இதோட தெளிஞ்சுடும்னு நெனைக்கிறேன்," என்றான் தாமு உற்சாகமாக.

கொஞ்சநாள் கழித்து, தாமுவைப் பார்க்க அவன் வீட்டுக்குப் போயிருந்தேன்.

தாமுவின் வீடு மயிலாப்பூரில் நடுத் தெரு தாண்டி ஒரு சந்தில் இருந்தது. சந்துக்குள் நுழையும் போதே தாமுவின் வீட்டுக்கு நிறையப் பேர் வருவதும் போவதுமா யிருப்பது தெரிந்தது. என்ன விசேஷமா யிருக்கும் என்று யோசித்தபடி வீட்டை யடைந்தேன். வாசலில் கல்யாண வீடு மாதிரி செருப்புகள் குவிந்து கிடந்தன. கேட்டுக்கு மேலே மாவிலைத் தோரணம். வீட்டுக்குள் ளிருந்து பஜனைப் பாட்டு பாடப்படும் ஓசை கேட்டது. கேட்டுக்கு அருகில் புதிதாக ஒரு போர்டு– "மா கமலா தேவி ஆஸ்ரம், மயிலை,





ட்டிலே மழையே இல்லாதபோது நபிகள்நாயகத்திற்கு அல்லாவின் குரல் அசரீரியாகக் கேட்டது.

'இந்த நாட்டில் கோள் பேசுபவர்கள் நிறையப் பேர் இருப்பதே மழை பெய்யாததற்குக் காரணம்' என்றது அல்லாவின் குரல்.

'இறைவா! கோள் பேசுகிறவன் யார் யார் என்று சொல்லுங்கள். நான் அவர்களைத் திருத்த முயலுகிறேன்' என்றார் நபிகள்.

'நான் அப்படி யாரையாவது குறிப்பிட்டுச் சொன்னால் நானும் கோள் பேசியவனாக ஆகிவிடுவேனே' என்றார் அல்லா.

–'பல்சுவைத் துணுக்குகள்' நூலிலிருந்து:
வயலூரான்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

சென்னை" என்று.

"அடப்பாவி!" என்றேன் என்னையும் மீறி. இடத்தைப் பிடுங்கி, மடத்தைப் பிடுங்கி, கடைசியிலே வீட்டையே ஆசிரமமாக்கி விட்டாளா கமலா? என் நண்பன் என்ன வானான்? நான் குழம்பிக் கொண்டிருக்கையிலே வீட்டுக்குள்ளிருந்து தாமு வெளிப்பட்டான். காவிக் கலரில் வேஷ்டியும் ஜிப்பாவும் அணிந்திருந்தான். கழுத்தில் ருத்ராட்ச மாலை, நெற்றியில் பட்டைபட்டையாக விபூதி, அதன் நடுவில் நீண்ட திலகமாகக் குங்குமம். வடக்கத்திய பக்திப் பழம் போல் காட்சியளித்த தாமு, என்னைக் கண்டதும் விரைந்து வந்து, "வா, மணி. எல்.டி.ஸியில வடக்கே போயிருந்தியே, காசிப் பயணமெல்லாம் எப்படியிருந்தது?" என்றான்.

"என்னடாது வேஷம்?" என்றேன் நான் பதிலுக்கு.

"எது, இதுவா?" என்று தன்னையே சுட்டிக் காட்டிக் கொண்டவன், ஒரு கணம் என்னைக் குறுகுறுவென்று பார்த்தான். பிறகு, "இது வேஷமில்லைடா மணி, சீருடை... மா கமலா தேவியின் கணவனுக்குப் பொருத்தமான சீருடை" என்றான்.

என்கையிலிருந்து கங்கை தீர்த்தத்தையும், அன்னபூரணி சிலையையும் வாங்கிக் கண்ணில் ஒத்திக் கொண்டு உள்ளே கொண்டு போய் வைத்து விட்டு வந்தவன், "பஜனை முடிய இன்னும் ஒரு மணி நேரமாகும். வா, நடந்ததையெல்லாம் சொல்றேன்," என்றபடி வெளியே வந்தான்.

"சுவாமி ஆத்மானந்தா கைது ஆன பிறகு, நானும் உன்னைப் போல, கமலாவோட பித்தம் தெளிஞ்சுரும்னுதான் நினைச்சேன். ஆனா நடந்தது வேறு. கமலாவோட பாப்புலாரிடியை நான் குறைவா எடை போட்டுட்டேன். விரக்தியடைஞ்ச ஆத்மானந்தாவோட பக்தர்களெல்லாம் இவளைத் தேடி வர ஆரம்பிச்சுட்டா. ஓவர்நைட், கமலா, மா கமலாதேவி ஆயிட்டா. என் வீடு ஆசிரமமாயிடுத்து. எனக்கு என்ன தோணறதுன்னா, பக்தர்களுக்கு பக்தி செலுத்த ஒரு உருவம் வேணும், அது ஆத்மானந்தாவாயிருந்தாலும் சரி, கமலா தேவியாயிருந்தாலும் சரி. என்ன நான் சொல்றது?"

"அதெல்லாம் சரிடா. ஆனா நீ எப்படி இப்படி....?"

"மாறினேன்'ங்கிறியா? காலத்தின் கட்டாயம்தான். என்ன செய்யச் சொல்றே? வீட்டுக்கு வர்ற கூட்டத்த கட்டுப் படுத்த முடியலே. இவ பாடறதையோ, அவா இவ கால்லே விழறதையோ தடுக்க முடியலே. அப்பத்தான் தோணித்து, எதுக்கு இதையெல்லாம் எதிர்க்கணும்னு. பேசாம நானும் அவளோட சேர்ந்துண்டுட்டா? இப்ப அவளுக்குக் கிடைக்கிற மரியாதைல பாதியாவது எனக்கும் கிடைக்கிறது. நிறைய பணக்காரா, அந்தஸ்துடையவாளோட பழக்கம் கிடைக்கிறது. அவாவா செலுத்தற காணிக்கையிலேயே ஆசிரமம், குடும்பம் ரெண்டும் அமோகமா நடக்கிறது. திடீர்னு வாழ்க்கை ரொம்ப சுவாரஸ்யமாயிடுத்துடா மணி! என்ன ஒண்ணு, குழந்தைகளுக்கு இதெல்லாம் ரொம்பக் குழப்பமாயிருக்கிறதாலே அவாளை இந்த வருஷத்திலேருந்து ஹாஸ்டல்லே சேத்துடலாம்னிருக்கேன். சரிடா, நான் கௌம்பறேன். ஆரத்தியெடுக்கறதுக்கு நேரமாச்சு. ஒரு நாள் உன் ஒய்பையும் அழைச்சிண்டு பஜனைக்கு வாயேன்?"

"வேலைக்குப் போயிண்டிருக்கியோ இல்லியோ?"

"அது எதுக்கு இனிமே? உப்பு சப்பில்லாத வேலை! போன வாரமே ராஜினாமா பண்ணிட்டேன்! சரிடா, வரேன். அப்புறம் பாக்கலாம். ஜெய் ஸ்ரீராம்!" என்று விடை பெற்றுச் சென்ற தாமுவைக் குறித்து வெகு நேரம் சிந்தித்தேன். கமலாவோடு கூட என் நண்பனும் காணாமல் போய்விட்டான் என்றுதான் தோன்றியது.

கடலுக்கடியில் இருந்து தலையை உயர்த்தும் ஒரு ஒட்டைச்சிவிங்கியைப் போல, கடற்கரைச் சாலையில் நிமிர்ந்து நின்றிருந்தது அந்தக் கட்டடம். அதன் நாலாம் தளத்தின் வரவேற்பு அறையில் அமர்ந்திருந்தாள், வள்ளி. வெளிநாடு செல்லும் பயணிகளுக்கு உதவுகிற நிறுவனம் அது.

கம்பெனிகளுக்கே உரிய ஆடம்பரம். பகட்டு அதன் சுவரில் ஒட்டிக் கொண்டு இருந்தது. அது பெரிய கம்பெனி என்றும், தரமான கம்பெனி என்றும் பிந்து, அவளுக்குச் சொல்லி இருந்தாள். அந்தக் கம்பெனியின் எம்.டி. என்று ஒருத்தரின் முன் அவள் நிறுத்தப்பட்டாள். எம்.டி.களை அவள் சினிமாக்களில் மட்டுமே பார்த்து இருந்தாள். அவர்களுக்குப் போலீஸ்காரர்களைப் போலவே வயிறு பெருத்து இருந்தது. தலையின் முன்பகுதி வழுக்கை விழுந்திருந்தது. அவர்களைப் போல, இந்த எம்.டி. இல்லை. இளைஞனாக, உற்சாகம் கொப்பளிக்கிற மனிதனாக இருந்தான். '555' என்று எண்ணிட்ட சிகரெட் பாக்கெட்டில் இருந்து, ஒன்றைப் பாதி அளவுக்கு உருவி, அவளிடம் நீட்டினான். வள்ளி, திடுக்கிட்டு, 'பழக்கம் இல்லை' என்றாள். 'அது நல்லது' என்றவன், 'நான் புகைக்க அனுமதி தாருங்கள்' என்றான். அவள் ஒப்புதல் தந்த பிறகே, அவன் புகைத்துக் கொண்டான்.

"பிந்து அக்கா உங்களைப் பற்றி நிறையச் சொன்னார். உங்களைப் பற்றி நான் கற்பனை பண்ணியபடி உங்கள் தோற்றமும் இருக்கிறது..." என்று அவன் சொன்னான்.

வள்ளிக்கு கழுத்து நிறைய ஆச்சர்யமாக இருந்தது. இத்தனை பெரிய மனிதன், பிந்துவை



பிரபஞ்சன்

## 14

# பூக்கள் நாளையும் மலரும்

அக்கா என்று அழைத்தது; அப்படி அழைக்கும் படியாக, அவனிடம் அவன் ஏற்படுத்தி இருந்த மரியாதை.

"பிந்து அக்கா மேல் எனக்கு மிகவும் மதிப்பு இருக்கு வள்ளி. புத்திசாலி. அவருடைய வாழ்க்கையை, பிசிறு இல்லாமல், நெஞ்சுக்கு வஞ்சகம் இல்லாமல், குற்ற உணர்வு இல்லாமல் அவர் வாழ்கிறார். அதுதானே வாழும் முறை? இந்த அம்சம்தான் என்னைக் கவர்ந்தது. பிந்துவை, என் ஆசிரியராக, வழிகாட்டியாக, தத்துவம் போதிப்பவராகவே நான் கொண்டிருக்கிறேன். என் தொழில், மிகவும் உணர்வுமயமான தொழில். பிரச்னைகள் மலிந்த தொழிலும் கூட. எப்போதும் எனக்கு டென்ஷன். இதிலிருந்து நான் என்னை மீட்டுக் கொள்வதே, புத்தகம் படித்தும், பிந்து அக்காவிடம் பேசியும்தான்... சரி வள்ளி... உங்கள் 'பயோ-டேட்டா'வைப் பார்த்தேன். படிச்சு முடிச்சு அஞ்சு ஆறு வருஷங்களுக்குப் பிறகு வேலைக்கு வருகிறீர்கள். என்ன அவசியம் நேர்ந்தது? சொந்த விஷயம் அல்ல என்றால் சொல்லுங்கள்."

வள்ளி யோசிக்க வேண்டி வந்தது. உண்மையைச் சொல்லிவிடுவது என்று எப்போதும் முடிவெடுப்பது போல், இப்போதும் முடிவெடுத்தாள், அவள்.

"இப்போதைக்கு எங்கள் குடும்பத்தில் சம்பாதிப்பவர் என் கணவர்தான். நாங்கள் சாப்பிடுகிற சாப்பாட்டில் என் பங்குச் சம்பாத்தியமும் இருக்க வேணும் என்று ஆசை. அதற்குத்தான் வேலைக்கு வந்ததே..."

"ஏன்? வேலைக்குப் போனால்தான் சம்பாத்யமா? உங்கள் குடும்பத்துக்காக நீங்கள் செலுத்தும் உழைப்புக்குச் சம்பளம் என்று வந்தால், உங்கள் கணவர் சம்பளத்தை விடவும், உங்களுக்கு அதிகமாக வருமே?"

"எல்லாச் சம்பளமும் நேர்மையான வழிகளில் வருவதில்லையே."

அவன் அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னான்.

"எனக்குப் புரிகிறது. என் தொழிலை, பொய் அகலத்தான் செய்து கொண்டிருக்கிறேன். உங்களுக்கு ஏற்ற இடம்தான் இது."

செகரடரியை அழைத்து, பணி ஆணையை டைப் செய்யச் சொன்னான். பிறகு வள்ளியிடம் திரும்பினான்.

"வேலையின் தன்மை மிகவும் சாதாரணமானதுதான். ஒரு வாரத்தில் நீங்கள் சுலபமாக இதில் தேர்ச்சியடைந்து விடுவீர்கள். நல்லது. நாம் ஒரு குடும்பமாகப் பழகலாம். உழைத்துப் பிழைக்கலாம். நாளையில் இருந்தே வேலைக்கு வந்து விடுங்கள்."

"ரொம்ப நன்றி, சார்."

"என் பெயர் சண்முகம். அப்படியே நீங்கள் சொல்லலாம். அதுதான் சரி."

"சரி, மிஸ்டர் சண்முகம்."

**வ**ள்ளிக்கு மகிழ்ச்சியாக இருந்தது. காலை

நேரத்துப் பனிப்புல் மாதிரி, அவள் முகம் ஜ்வலித்தது. தெருவுக்கு வந்தாள். அவள் பையில், வேலை ஆணை இருந்தது. அவளைச் சுற்றிலும் ஜனக்கூட்டம். உயிர்ப் பிரவாகத்தின் சாட்சியம். உலகம், பந்தயக் குதிரையின் வேகத் தோடு இயங்கிக் கொண்டிருந்தது. மக்கள், பூமியின் மேல் நெருக்கியடித்துக் கொண்டு இருந்தார்கள். அந்த மானுடக் கடலில், அவள் ஒரு துளி. கண்ணியமிக்க அங்கத்தினள். அவள், இனி வீட்டுப் பெண் மாத்திரம் இல்லை. சமூகத்தில் அவளுக்கென்று வேலை ஒன்று இருக்கிறது. எவ்வளவு இனிமையான விஷயம்!'

அர்த்தநாரிக்கு, அது இனிமையான விஷயமாக இல்லை.

"நீ எதுக்கு வேலை பார்க்கணும், வள்ளி?" என்றான் அர்த்தநாரி. பூஷணத்தின் மகளுக்குக் கல்யாணம் கூடி இருந்தது. இப்போது, அவன் கல்யாண வேலை பார்க்கும், உபகாரி. அச்சடித்த பெயர்ப் பட்டியலில் இருந்து, பெயர்களை வெட்டி எடுத்து, அழைப்பிதழில் ஒட்டிக் கொண்டிருந்தான். அவனுக்கு முன், வள்ளி. வேலை உத்தரவை நீட்டினாள்.

"எனக்கு வேலை செய்யப் பிடிக்கிறது. அதனால்தான்."

"நமக்குத்தான் போதுமான பணம் கிடைக்கிறதே."

"வேலை செய்வது பணத்துக்காக மட்டும் அல்லவே."

வள்ளி, எழுந்து ஜன்னல் ஓரமாக வந்து நின்றாள். எதிர்வீட்டு உள் அறை தெரிந்தது. தூங்குமூஞ்சி மரத்தின் தலை தெரிந்தது. இருட்டு, பதுங்கிப் பதுங்கி, வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

"வேலை செய்வது பணத்துக்காக இல்லையென்றால், வேறு எதற்காக?"

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

"தலைவர் ஜெயில்ல இருந்து விடுதலை ஆனதும் தன்னைப் பார்க்க வந்த பார்வையாளர்கள் லிஸ்டை சரிபார்க்கறாரே... ஏன்?"

"சில பேர் ஒரு தடவை பார்க்க வந்துட்டு ரெண்டு தடவை கூலி வாங்கியிருக்காங்களாம்!"

– அம்பை தேவா

"சந்தோஷத்துக்காக. மனத் திருப்திக்காக."

அர்த்தநாரி சிரித்தான்.

மனிதர்கள், அனாவசியமாக நிறைய வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார்கள் என்றே அவன் நினைத்தான். மனத்திருப்தி, சந்தோஷம், நாணயம், நேர்மை, ஒழுக்கம் எல்லாம் அர்த்தம் அற்ற, பொலிவிழந்த, வெளுத்துப் போன வார்த்தைகள்....

"வீட்டிலும் வேலை, வெளியிலும் வேலை செய்து என்னத்தைப் பெரிசாக அடையப் போகிறாய். சம்பளமும் கொஞ்சம்தானே?"

அவள், ஜன்னலில் இருந்து முகம் திருப்பாமலேயே சொன்னாள்.

"கொஞ்சமாக இருக்கலாம். எனக்கான ரொட்டியை, நானே சம்பாதிக்கிறேன் என்கிற திருப்தியும் சந்தோஷமும் இருக்கவே இருக்கிறது."

அவன் மீண்டும் சிரித்தான்.

"என்னமோ, போ... எல்லாம் நம் இருவர் சந்தோஷத்துக்காகத்தானே. நாம், சும்மா எதையாவது பேசிக் கொண்டு, பைத்தியம் மாதிரி, வாழ்க்கையை வீணடித்துக் கொள்ளக் கூடாது. காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளணும், வள்ளி."

வியாபித்துக் கொண்டு வரும் இருட்டையே, அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். தினமும் இருட்டு என்கிற விஷ விருட்சம் வளர்ந்து கொண்டே இருக்கிறதாக அவளுக்குத் தோன்றியது. அந்த விருட்சத்தின் நிழலே மனிதர் மனங்களில் புகுந்து கொண்டு, அவர்களைப் பாமரமாக, ஜடமாக மாற்றியமைத்துக் கொண்டிருக்கிறதா?

காற்றில் மர இலைகள்; முயல் காதுகளைப் போல ஆடிக் கொண்டு இருந்தன. தெரு விளக்குகளின் வெளிச்சம், வெள்ளைப் பாம்புகளைப் போல நெளிந்து கொண்டிருந்தன. அர்த்தநாரியிடமிருந்து வெளியேறும் வார்த்தைகள், ஜன்னல் வழியாக, சுருட்டி எறியப்பட்ட காகிதக் குப்பைகளைப் போல, 'பொத் பொத்' தென்று வெளியில் விழுந்து கொண்டு இருந்தன.

"எனக்குப் பிடிக்காததையே நீ செய்து கொண்டிருக்கிறாய்" என்றான் அவன் இறுதியாக. இரவுச் சமையலைக் கவனிக்கச் சமையல் அறைக்குள் சென்றாள் வள்ளி. அவள் போவதையே பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தான் அர்த்தநாரி.

'தொலையட்டும். வேலைக்குத்தானே போகிறேன் என்கிறாள். போகட்டும். அதனால், அவள் முறைப்பு குறையும். எல்லாவற்றையும் குறைசொல்லிக் கொண்டு, குதர்க்கம் பேசிக் கொண்டு, திரிவது குறையும். வீட்டில் அவள் இருக்கும் நேரம் குறைந்து, அவனுக்குத் திருப்தி தரும் காரியமாக இருக்கும்...'

"**வா**ழ்த்துக்கள்" என்றாள் பிந்து.

பிந்து, அவள் வீட்டின் 'பால்கனியில்' காற்றாட அமர்ந்திருந்தாள். அவளுக்கு முன் இருந்த பிரம்பு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்திருந்தாள் வள்ளி.

"பிந்துக்கா... நான் உங்களுக்குத்தான் நன்றி சொல்ல வேணும். ரொம்பக் குழப்பத்தில் இருந்தேன். சரியான நேரத்துல சரியான உதவியைச் செய்தீங்க அக்கா" என்று நெகிழ்ச்சியுடன் நன்றி சொன்னாள், வள்ளி.

"அது இருக்கட்டும். நமக்குள்ளே என்னத்துக்கு உபசாரம். என் கவலை, உன் கணவன் இதை எப்படி எடுத்துக் கொள்வார் என்றுதான்."

"வேலையைச் சம்பளத்தோடு சேர்த்துத் தானே எல்லோரும் நினைக்கிறாங்க? அவரும் அப்படித்தான் நினைச்சுப் பேசினார். 'நான் தான் சம்பாதிக்கிறேனேன்னு' சொன்னார். எனக்கு வேலைக்குப் போகணும்னு கறாரா சொல்லிட்டேன். அக்கா. அவரோடு சேர்ந்து வாழறதும் கூட எனக்குக் கசப்பா இருக்கு."

"அவசரப்படாதே, வள்ளி. அவருக்கும் ஒன்றல்ல, பல வாய்ப்புகளைக் கொடு. அவருக்கும் உறைக்கும், ஒரு சந்தர்ப்பத்திலே. அதுக்காக நீ காத்திருக்கணும். பொறுமை தேவை."

"எனக்கு நம்பிக்கை இல்லை. பண ஆசை, ஆயிரத்துலதான் ஆரம்பிக்கும். அது கோடியா வளர்ந்து இன்னும் இன்னும்னு விஷ ஜுரம் மாதிரி மேலே போய்க்கிட்டே இருக்கும். அவருக்கு, இதுதான் நடந்துக்கிட்டு இருக்கு."

"எனக்கு இதுதான் ஆச்சர்யமா இருக்கு. மனுஷனுக்குப் பணம் தேவை. எந்த மட்டுக்கு? சாப்பிட, சுகாதாரமான சூழ்நிலையில் தங்கி வாழ, உடுத்த – அவ்வளவுதானே? பணக்காரன் நாலு படி சோறா தின்ன முடியும்? ரெண்டு 'பேண்ட்டா' போட்டுக்க முடியும்? திருட்டு வழியிலே சம்பாதிக்கிறவங்களுக்கு இது ஏன் புரியலை?"

வானத்தில் நிலா, சாப்பிட்டுக் கழுவிய தட்டு மாதிரி, சுத்தமாக இருந்தது. வள்ளி, நிலவையும், அதை மறைத்தபடி போய்க் கொண்டிருக்கும் மேகங்களையும் பார்த்தவாறு இருந்தாள். திடுமென, நினைவு வந்தவளாகச் சொன்னாள்.

"எங்கள் முதலாளி, உங்களை அக்கான்னு சொன்னார், பிந்து. ரொம்ப மரியாதை வச்சிருக்கார் உங்க மேல."

பிந்து, டீ போட்டுக் கொண்டு வர அடுப்பறைக்குள் சென்றாள். ஒரு கப் டீயை, வள்ளிக்குக் கொடுத்து விட்டுச் சொன்னாள்.

"அந்தப் பையன், சண்முகம், ரொம்பப் பாவம்பா. ரொம்ப நல்ல பையன். தருமர் சொன்னாராமே, உலகத்துல எல்லோருமே நல்லவங்கன்னு, அது மாதிரி, அவனுக்கு உலகத்துல எல்லோருமே சூதுவாது தெரியாதவங்கதான். வெள்ளையாய் இருக்கிறது எல்லாம் பால். எனக்கு ஷோபான்னு ஒரு சிநேகிதி இருந்தா... நிறுவனத்துல பெரிய அதிகாரி. நல்ல படிச்ச பெண். என்னை மாதிரியே, 'டைவர்ஸ்' ஆனவள். ஏதோ ஒரு சந்தர்ப்பத்துல, சண்முகம், ஷோபாவைச் சந்திச்சு இருக்கான். அந்தச் சந்திப்பை, ஷோபா பயன்படுத்திக்கிட்டா. அவங்க நெருக்கமா பழக ஆரம்பிச்சு இருக்காங்க...

"வள்ளி. நாம ஒரு விஷயத்துல தெளிவா இருக்கணும். ஆண்கள்ளே எவ்வளவு மோசமானவர்கள் இருக்காங்களோ, அதே மாதிரி பெண்கள்ளேயும் இருக்கிறாங்க. அயோக்கியத்தனம், பொது. இரண்டு பேருக்குமே. அற்ப குணம் உண்டு. பெண்களைப் பொறுத்தவரைக்கும், பெண், ரொம்பச் சின்னத்தனமா இருக்கிறதுக்கு ஆண்களும் ஒரு காரணம்தான். அதே சமயத்துல, சின்னத்தனமும், மனுஷ குணாம்சம் தானே? தெய்வங்களும், பேய் பிசாசுகளும் வந்து உலவுகிற இடம்தான் மனுஷ மனசு. ஷோபா, அடிப்படையில மோசமானவள். அவளுக்கு, சண்முகம், ஒரு பெயர். சண்முகத்துக்குத்தான் காதலியா இருக்கோம்கிற பெயரைப் பரப்பி, அதன் மூலமா, சண்முகத்துக்கு இருக்கிற சமூக மரியாதையைச் சுரண்டறது மட்டும்தான் அவளோட நோக்கம். சாராய வியாபாரி சங்கரசாமியோட பழகி, வீடு வாங்கினாள். இன்னொருத்தன் மூலமா, நகை. ஒருத்தன் பட்டுப் புடைவைகள் வாங்கிக் கொடுத்தான். பத்திரிகைகள், மீடியாக்கள், இது மாதிரி பெண்களை 'பூஸ்ட்' பண்றதுக்குன்னேதான் இருக்கே. இப்படி வளர்ச்சி அடைஞ்சவதான், ஷோபா. என் அக்கறை, அவள், அவளோட கணவனால் கைவிடப்பட்டவள் என்பது மாத்திரம்தான். பாவம், சண்முகம். ஷோபாவை



**''சிறைக்குப் போன நம்ம தலைவர் 'ஜாமீனே' கேட்கலையே, ஏன்?''**

**''வீட்டிலே அவரோட மனைவியோட தொல்லையைவிட 'கொசுக்கடி' எவ்வளவோ தேவலேன்னு நினைக்கிறாராம்!''**

**– மல்லிகை மன்னன்**

உண்மையாவே நேசிக்க ஆரம்பிச்சுட்டான். நல்ல ஆத்மாக்கள், நேசிக்க மட்டுமே செய்யும். மற்றதெல்லாம் அதுகளுக்குத் தெரியாதே. இந்தக் காதல், ஒரு பூதக் கண்ணாடி, வள்ளி. எதையுமே பெரிசுபடுத்தி, அலங்காரப்படுத்தித் தான் புரிஞ்சுக்கும். காதலி அல்லது காதலன், நகம் கடிக்கிற பழக்கம், உள்ளவர்களாக இருந்தா, அது குழந்தைத்தனம்னு, காதல் புரிஞ்சுக்கும். அதையே என்ன அசிங்கமான பழக்கம்னு, வெறுப்பு சொல்ல வைக்கும். காதல், எல்லா விஷயங்களிலும் சர்க்கரை போட்டே சாப்பிடும். காதல் மாறிப் போனா, வெறுப்பு வந்தா, எல்லா விஷயமும் மாறிப் போயிடும். எனக்குத் தெரிஞ்ச ஒருத்தன் கல்யாணத்துக்கு முன்னாலே, பெண் வீட்டுலே, உப்பே இல்லாமல் சாப்பிட்டு முடிச்சு, நல்லா இருக்குன்னு



"இரண்டு குழந்தைகளுக்குமேல் பெற்றவர்கள் தேர்தலில் போட்டியிட தடை வருகிறதாம்..."

"நல்லவேளை, ரெண்டு மனைவிகள் தானோன்னு பயந்துட்டேன்!"

– ராஜிராதா

சொன்னான். உப்புப் போட மறந்தது பிறகு தான் தெரிஞ்சது. அதே கணவன், பின்னாலே, உப்பு கொஞ்சம் குறைஞ்சதுன்னு, பெண்டாட்டியை அறைஞ்சான்... சண்முகம், தொடக்கத்துலயே ஷோபாவை விளங்கிக்கலை. ஷோபாவுக்கு எனக்குத் தெரிஞ்சு நாலு காதலர்கள் இருக்காங்க. இதுதான், அவளோட இயல்பு. சண்முகத்தால, அதைச் சகிச்சுக்க முடியல்லை. இதுல, ஷோபா செய்த தப்பு என்னன்னா, தன் இயல்பு இதுன்னு சண்முகத்துக்குச் சொல்லி இருக்கணும். அவள் அதைச் செய்யலை. அதுக்கு மேலே, அதை மூடி மறைக்கவும் செய்தாள். இதுதான் பிரச்னை. சண்முகம், காதல்ங் கிறது, ஒருவழிப் பாதையா நினைச்சான். ஷோபாவுக்கு, எல்லா நதிகளும் தன்னை வந்து அடையணும்னு கடல் மாதிரி ஆசைப்பட்டாள். சண்முகம், குத்துவிளக்கு. ஷோபா, ஆர்க் லாம்ப். சண்முகம், ரொம்ப சாதாரணமான மனுஷன். ஷோபா, சாயங்கால மனுஷி. இரவு வாழ்க்கைதான் வாழ்க்கைன்னு வாழறவள், சண்முகமோ, வீட்டுக்குள்ளே இருக்கிற பல அறைகள்ளே ஒன்றுதான் படுக்கை அறைன்னு நினைப்பு. படுக்கை அறைக்குள்ளே நாள் முழுக்க அவனாலே இருக்க முடியாது. பிரச்னை முற்றி, ஒரு முடிவுக்கு வந்துடுச்சு. ஆனா, சண்முகம், தாடி வளர்க்கலே. தேவதாஸ் ஆகல்லே. ரொம்ப கௌரவமா, அந்தக் கசப்பை விழுங்கிட்டான்.

"ஷோபாவுக்கு, நான் சினேகிதி என்பதாலே, இந்தப் பிரச்னை என்கிட்டே வந்துச்சு. நான் நியாயத்தின் பக்கமா நின்னேன். ஷோபா, தன்னோட தவறுகளுக்கு, பெண் உரிமைன்னு பேர் வச்சிருக்கா. தேளை என்ன பெயரிட்டு அழைச்சாலும் அது கொட்டும். பெண் விடுதலை, ஒடுக்கப்பட்ட பெண்களோட போர்க் குரல். ஷோபா மாதிரி, உடம்பை மூலதனமா வச்சுச் சுரண்டுற பெண்களுக்கு, அந்த நல்ல இயக்கத்தைக் கொச்சைப்படுத்த அனுமதி இல்லைன்னு நான் சொன்னேன். சண்முகம், சுமார் எட்டு லட்ச ரூபாய்க்கு, வாங்கிக் கொடுத்த 'பிளாட்' என் அன்பளிப்பா, ஷோபாவோடேயே இருக்கட்டும்னு சொல்லிட்டான். ஆனா, ஷோபா, கால் பவுன் மோதிரத்தைச் சண்முகத்துக்கிட்டே திருப்பிக் கேட்டாள். சண்முகம், அந்த அன்புப் பரிசையும் திருப்பிக் கொடுத்துட்டான்..."

"பெண்கள் இப்படியும் குரூரமா இருக்க முடியுமா, அக்கா?"

"முடியும், குரூரம், ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது. எனக்கு ஷோபா மாதிரி பெண்கள் மேலே, கோபம் இல்லை. இது ஒரு வகையான நோய். வஞ்சகம், களவு, சோரம் எல்லாம் சமூக நோய்கள். சொத்து, ஆண் ஆதிக்கம் இரண்டும் சேர்ந்து பெற்றெடுத்த நோய்க் குழந்தை அது."

"சண்முகத்துக்கு என்ன வயசிருக்கும் இப்போ?"

"நாற்பத்து ஐந்து. பார்த்தால் முப்பதுன்னு தோணும். இனிமேல், சண்முகம், தனக்கு ஏற்ற பெண்ணைத் தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கு."

"சாத்தியமா?"

"ஏன் இல்லை. காதல், வயசோட மட்டும் சம்பந்தப்பட்டது இல்லை. அது மனம் சம்பந்தப்பட்டது. எனக்கே, அந்த வயசுதான், வள்ளி, ஏறக்குறைய. எனக்கும், இப்போ, காதல் அரும்பி இருக்கு..."

"அக்கா" என்றாள் வள்ளி ஆச்சர்யமுடன்.

நிலா, ஒரு தேரைப் போல, அசைந்து அசைந்து, எல்லா உயிர்க்கும் இன்பம் ஊட்டி, நகர்ந்து போய்க் கொண்டிருந்தது.

(தொடரும்)

## வட்டமேஜை

# கார்ட்டூனுக்கு நூற்றுக்கு நூறு!

✉ இந்தியாவில் எய்ட்ஸ் ஆரம்பமானதைக் கண்டறிந்ததுமே அதனை ஒழிக்கும் முயற்சியை மேற்கொண்ட, மேற்கொண்டிருக்கும் சுனிதி சாலமனின் தூய பணி புனிதமான பணி. பல ஏளனப் பேச்சுக்களுக்கும் இன்னல்களுக்குமிடையே எய்ட்ஸை ஒழிக்கப் பாடுபட்டு வரும் இவரின் சமூக சேவைக்கு அரசு உறுதுணையாக இருக்க வேண்டும்.
காயக்காடு,
ப. ராமகிருஷ்ணன்.

✉ "ஒரு வாசகி, கதை எழுதுகிறார்..." பகுதியில் எழுத்தாளர் டீவே. சிவகுமார், தம் காதல் அனுபவத்தை நகைச்சுவையோடு குறிப்பிட்டவிதம் சூப்பர். கூடவே, புதிதாகக் கதை எழுதுபவர்களுக்குக் கொடுத்த 'டிப்ஸ்' அசத்தல்!
திருப்பூர்,
ப. சங்கர்.

✉ எழுத்தாளரின் வாழ்க்கைச் சம்பவத்துக்கு வாசகி எழுதும் கதையா...! உமது புதுமையான முயற்சிக்குப் பாராட்டுக்கள்...!
விசலூர் - 1,
ஜி. ஜி. கிருஷ்ணன்.

✉ ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பார்கள். காவிரி பிரச்னையில் தமிழக கட்சிகளிடையே பிளவு ஏற்பட்டால் இலாபம் கர்நாடகத்திற்குத்தான். இந்நிலையில் தமிழகத்தின் அனைத்து கட்சிகளும் ஒன்றுசேர்ந்து குரல் எழுப்ப வேண்டும் என்கிற தங்களின் தலையங்கம் மிகச் சரியானதே. மக்கள் பிரச்னை அரசியல் காழ்ப்புணர்ச்சியால் பாதிக்கப்படக்கூடாது என்பதே தமிழக மக்களின் விருப்பம்!
திருவண்ணாமலை,
என். சண்முகம்.

### பரிசு பெறும் கடிதம்

✉ மிக எளிதாகத் தீர்க்கக்கூடிய காவிரி நீர்ப் பிரச்னையை கர்நாடகம் இழுத்தடித்துக் கொண்டு போவதைப் பார்த்தால் மிகவும் வேதனையாக உள்ளது. இரு மாநில விவசாயிகளையும் முதலில் பேசச் சொன்னால் விவசாயிகளுக்கு உரிய கஷ்டத்தை மற்ற மாநில விவசாயி அறிந்து கொள்ள ஏதுவாக இருக்கும். அரசியல்வாதிகள் தவிர, இரு மாநில விவசாயிகள் சங்கப் பிரதிநிதிகளையும் பேச அழைக்கலாமே?
திருச்சுழி,
சுந்தர் அழகேசன்.

✉ தொட்டுப் பார்த்தால் தான் தெரியும் நெருப்பு சுடும் என்று. அதே போல எமர்ஜென்ஸி என்ன என்பதை அதை ஜெயிலில் அனுபவித்தவர்கள் மூலமாகக் கேட்டு வெளியிட்டது ஜெவுக்கு சரியான நோஸ்கட்.
அரசரடி, நெல்லை. வி. சிவா.

✉ அரசியல் ஞானம் அறவே இல்லாத ஜெயலலிதாவின் முகத்திரையை கிழிக்கும்விதமாக, எமர்ஜென்ஸியின் போது ஜெயிலில் இருந்து கஷ்டப்பட்ட மூவரின் பேட்டியும் விளங்கின. அவரது அறிக்கைகள் அரசியல் அறியாமையின் வெளிப்பாடே என்பது நூற்றுக்கு நூறு உண்மை.
சென்னை-1,
கே. ஆர். உதயகுமார்.

✉ காதல் தோல்வியின் சோகத்தைக் கிராமத்துப் பின்னணியில் கவிதைச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார் பச்சியப்பன்! அந்தப் பின்னணி, காட்சிகளாய் நம் கண்முன் விரிந்து, நொறுங்கிய காதலின் சோகங்கள், நம் நெஞ்சில் சுமைகளாய் விழுகின்றன!
சென்னை - 106,
ஆர். ராஜா சாஹிப்,

✉ 'செல்வா' திரைப்படம் ஏதோ ஓடுகிறது என்றால் அந்தப் பெருமை ரகுவரன் ஒருவரையே சாரும் என்ற கருத்தில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. நடுநிலையாக உள்ளதை உள்ளபடி கூறி இருக்கும் விமர்சனம் பாராட்டுக்குரியது.
விழுப்புரம்,
வை. வெங்கடேசன்.

✉ "பண விஷயத்தில் கணக்குப் பார்த்தால் நட்பே இல்லை!" என்று சுகி.சிவம் சொன்னது நூற்றுக்கு நூறு சரியே.
மதுரை, வி. பி. மகராசி.

✉ புதுக்கோட்டையில் நடக்கும் இடைத்தேர்தல் பரீட்சையில் வெற்றிபெற, ஒவ்வொரு கட்சித் தலைவருக்கும் ஏற்ற, பொருத்தமான 'சப்ஜெக்ட்'டுகளை தேர்வு செய்து போட்ட கார்ட்டூனுக்கு, நூற்றுக்கு நூறு மார்க்!
வேலூர் - 6,
வே. ந. கதிர்வேல்.

# வி.கே. ராமசாமி

# 4

நாடகக் கம்பெனியில் சேருகிற பையன்கள் அத்தனை பேரும் உடனே நடிகனாகி விட முடியாது. நாடகம் இருக்கிற தினங்களில் கூட்டத்தில் ஒருவராக வந்து போவது, சலாமிடுகிற வாயில்காப்போனாக நிற்பது, அரசர் 'யாரங்கே' என்றால் ஓடிவந்து, அவர் சொல்வதைக் கேட்டுக்கொண்டு, வந்த வழியே திரும்பிப் போவது – இதுமாதிரியான வேஷங்களில் 'வந்து போக'த் தடை இல்லை. ஆனால் ஒரு கேரக்டரில் – வசனம் பேசி, பாடி நடிப்பதற்குப் பயிற்சி அவசியம். கம்பெனியில் அத்தகைய பயிற்சி தர ஆசிரியர்கள் இருப்பார்கள்.

இயல்பாகவே, பாடுகிற திறமை எனக்கு ஓரளவு இருந்ததாலும், என் ஆசிரியர் திரு. ஏ.பி. கிருஷ்ணமூர்த்தி எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த வேகம் – நேர்த்தி காரணமாகவும் அந்த ராசிபுரம் கேம்ப்பில் நான் நடிகனாக அரங்கேற முடிந்தது.

அந்த இராமாயண நாடகம் போடும் போதெல்லாம் அரங்கம் வெறும் நாடகக் கொட்டகையாக இருக்காது. ஏதோ தேவலோகத்துக்குள் நுழைந்து விட்டாற்போல ஓர் உணர்வு வந்து விடும்.

சாம்பிராணிப் புகை போட்டு, அரங்கம் முழுவதுமே 'கும்'மென்று புகை மண்டலமாக்கப்பட்டு விடும். கடவுள் வாழ்த்து, பூஜை, நாமாவளிகள் என்று ஒரு முக்கால் மணி நேரம் தெய்வீகமயமாகக் கழியும். அந்தச் சமயத்தில் ஆயிரக்கணக்கில் மக்கள் குழுமியிருந்தாலும் ஒரு சப்தம் வராது. திருப்பதியில் நடக்கிற சுப்ரபாத சேவை எப்படி நடக்குமோ, அப்படித் தொடங்கும் அந்த நாடகம்.

பின்னாளில் மிகச் சிறந்த கதை வசன கர்த்தாவாகவும் இயக்குநராகவும் விளங்கிய ஏ.பி. நாகராஜன் அப்போது என் நாடகக் குழுத் தோழர். அந்த 'இராமாயணம்' நாடகத்தில் அவர் 'யவ்வன சூர்ப்பநகை' என்றொரு ஸ்திரீ பார்ட் போடுவார்.

சூர்ப்பநகை என்பவள் அரக்கி. குரூரமான தோற்றமும் இராட்சஸ குணங்களுமாகவல்லவா காட்டப்பட வேண்டும்?

எதிலும் வித்தியாசமாகச் செயல்பட வேண்டும் என்கிற நோக்கம் கொண்ட என் ஆசிரியர், அந்த நாடகத்தில் மட்டும் சூர்ப்பநகையை மிக அழகானவளாக, 'யவ்வனசூர்ப்பநகை'யாக உருவாக்கிப் படைத்திருந்தார்.

அழகிய மானிடப் பெண் வேடம் கொண்டு, ராமனை மயக்க வருகிற சூர்ப்பநகைப் பாத்திரம், ஏ.பி. நாகராஜனுக்கு. அப்போது அவருக்குச் சுமார் 12 – 13 வயதுதான் இருக்கும். பார்க்க மிக அழகாக இருப்பார். அதுவும் பெண் வேஷம் போட்டுவிட்டால் கேட்கவே வேண்டாம்!

நாடகத்தில் அந்த 'யவ்வன சூர்ப்பநகை' எப்போது வருவாள் என்று காத்திருந்து, சரியாக அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்து, ரசித்துவிட்டு, அந்த 'பார்ட்' முடிந்ததும் எழுந்து போய்விடும் பெரிய கோஷ்டியே ஒன்று இருந்தது!

அந்த நாடகத்தில் பாலராமராக வேஷம் போட்டவர் புகழேந்தி. பின்னாளில் திரு. கே.வி. மகாதேவனிடம் உதவி இசையமைப்பாளராகச் சேர்ந்து இன்றும் மகாதேவனுடனேயே இருந்து இசைப்பணி ஆற்றிவரும் புகழேந்தி, எங்கள் கம்பெனியில் இருந்தவர் தான்!

'இராமாயணம்' நாடகத்தில் விஸ்வாமித்திரர் பாத்திரம் இடம்பெறுவது பால காண்டம் முடிவிலும் அயோத்தியா காண்டம் ஆரம்பத்திலும்தான். சுமார் முக்கால் மணி நேரம் இடம்பெறக்கூடிய அந்தப் பாத்திரத்தில் நான் நடித்தேன். நடித்தேன் என்று சொல்லக் கூடாது; வாழ்ந்தேன். வாழ்க்கையில் முதல் முதலாக எனக்குக் கிடைத்த அரிய வாய்ப்பு அல்லவா அது!

தசரதனிடம், 'ராமனை என்னுடன் காட்



டுக்கு அனுப்பு' என்கிற கட்டத்தில் அருமையான பல பாடல்கள் பாடி நடிக்க வேண்டி வரும்.



# தேரோட்டம்

வளமான குரல் எடுத்து, கம்பீரமாகப் பாடி, வீரமாக வசனம் பேசி, ராமனைக் கூட்டிப் போவது முதல், திருமணம் முடித்து அவனை மறுபடி அயோத்தி கொண்டு சேர்ப்பிப்பது வரை மேடையில் என் ஆதிக்கம்தான்.

நிறைய பாராட்டுக்களோடும் புகழோடும் (முக்கியமாக வசூலோடும்) அந்த நாடகம் பெரிய வெற்றி கண்டது.

அதே நாடகத்தில் எனக்குப் பின்னால் பரசுராமர் வேஷம் தரப்பட்டது. அதிலும் சிறப்பாகச் செய்தேன். 'இனி கவலையில்லை; நாமும் அங்கீகரிக்கப்பட்ட ஒரு நடிகனாகி விட்டோம்' என்று எனக்கு சந்தோஷம் உண்டானது.

இந்தச் சமயத்தில் நடிப்பது தவிர, கம்பெனியில் எனக்கு வேறு சில பொறுப்புகள் வழங்கப்பட்டன. எங்கள் கம்பெனியில் இருந்த பையன்களிலேயே ஓரளவு படித்தவன்(?) நான் தான்.

ஆகவே கணக்கு வழக்கெல்லாம் என்னால் ஓரளவு பார்க்க முடியும் என்று என் முதலாளி நம்பினார்.

அதன் முதல் கட்டமாக டிக்கெட் விற்று, கலெக்ஷனைக் கூட்டி, கணக்கெழுதி ஒப்படைக்கும் பொறுப்பு எனக்கு வந்து சேர்ந்தது.

அப்போது நான் 'ஆனை வாத்யாரை'த்தான் நன்றியுடன் நினைத்துக் கொண்டேன். விருதுப்பட்டியில் எனக்குக் கணக்கு சொல்லிக் கொடுத்தவர். அவர் பெயரே எனக்கு மறந்து விட்டது. அவரது உருவத்தை வைத்து, நடையை வைத்து அவருக்கு 'ஆனை வாத்தியார்' என்று ஊராரே ஒரு பெயர் கொடுத்திருந்தார்கள்.

எல்லா பாடங்களும் சொல்லித் தருபவர்தான் என்றாலும் கணக்கில் அவர் புலி. குடும்பம், குழந்தையெல்லாம் கிடையாது அவருக்கு. காலையிலிருந்து மாலை வரை இடைவிடாமல் பாடம் சொல்லித் தருவார்.

பிற்பகல் பன்னிரெண்டு, ஒரு மணிவாக்கில் அவரை மெதுவாக அழைத்துக் கொண்டு நாங்கள் (என் வயதொத்த சிறுவர்கள்) ஆற்றங் கரைக்குப் போவோம்.

அவருக்கு நீச்சல் தெரியாது. கரையில் அவரை உட்கார வைத்து விட்டு, வாளி வாளியாகத் தண்ணீர் மொண்டு ஊற்றித் தேய்த்துத் தேய்த்துக் குளிப்பாட்டுவோம்.

மாலை ஆறு, ஏழு மணி ஆனால் ஒரு பெரிய சட்டியை எடுத்துக் கொண்டு, வீடு வீடாகப் போய், "ஆனை வாத்தியாருக்கு சாப்பாடு போடுங்க" என்று கேட்போம். கூடவே இன்னொரு வசனம் : "ஆனை வாத்தியாருக்கு மோர் ஒத்துக்காது; சாம்பார், ரசம் மட்டும் ஊத்துங்க."

இப்படிப் பல வீட்டுச் சாப்பாட்டை ஒரே சட்டியில் வாங்கிப் பிசைந்து அவருக்குக் கொண்டு போய்க் கொடுப்போம். இரவு சாப



பிட்டுப் போக, மறுநாளுக்கும் அவர் அந்தச் சாப்பாட்டையே வைத்துக் கொள்வார். அத்தனை ஏழைமை; பாவம்!

அந்த ஆனை வாத்தியாரிடம் படித்த கணக்கு வீணாகாமல், இப்படி கவுண்டர் காசை எண்ணிச் சரிபார்க்கவாவது உபயோகமாகிறதே என்று எனக்குச் சந்தோஷம்.

டிக்கெட் கொடுக்கிற வேலை தவிர, இன்னொரு வேலையும் எனக்குத் தரப்பட்டிருந்தது.

அது - நாங்கள் முகாமிட்டிருந்த இடத்திலிருந்து, நாடகம் நடக்கிற அரங்கிற்குப் பையன்களைக் கூட்டிக் கொண்டு போய், விடுகிற வேலை.

இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாக நான் எங்கள் நாடகக் குழுவில் முக்கியத்துவம் பெற்றுக் கொண்டிருந்தபோது, எதிர்பாராவிதமாக ஒரு சம்பவம் நடந்தது. ஊரிலிருந்து என் அண்ணன் வந்தார், என்னைப் பார்க்க. 'சரி, பையன் எப்படி இருக்கிறான் என்று பார்த்துப் போக வந்திருப்பார் போலும்' என்று எனக்கு நானே சமாதானம் சொல்லிக் கொண்டு என் அண்ணனை வரவேற்றேன்.

ஆனால் அவர் பார்த்துப் போக வரவில்லை; என்னைக் கூட்டிப் போகத்தான் வந்திருக்கிறார் என்று தெரிந்தபோது மிகவும் உடைந்து போனேன்.

என்னதான் முரட்டுப் பையனானாலும் சுமார் 13-14 வயதுப் பையனால் பெரியவர்களை எப்படி எதிர்த்துக் கொண்டிருக்க முடியும்?

நான் எத்தனை முரண்டுபிடித்தும் கெஞ்சியும் அழுதுபார்த்தும் என் அண்ணன் மசியவில்லை. ஒரேயடியாக 'நீ கிளம்பி வந்துதான் ஆக வேண்டும். நடித்துக் கிழித்தது போதும்; புறப்படு!' என்று சொல்லி விட்டார்.

அன்றைய இரவை என்னால் மறக்கவே முடியாது. சுமார் இருபது பையன்கள் கண்ணில் நீரோடும் மனத்தில் பிரிவுச் சுமையோடும் என்னை, என் அண்ணனுடன் வழியனுப்ப, நானும் அழுது கொண்டே விருதுப்பட்டியை நோக்கிக் கிளம்பினேன்.

அப்போது கூட ஒரு யோசனை வந்தது. இவர்கள் என்னைத் தேடி வந்து கூப்பிட்டுப் போவதும் நான் மீண்டும் ஓடிவந்து விடுவதும் எனக்கொன்றும் புதிதல்லவே!

'மறுபடி நாளையே நைஸாகக் கிளம்பி வந்து விட்டால் போயிற்று' என்று எனக்கு நானே சமாதானம் சொல்லிக் கொண்டேன்.

ஆனால் அப்போது எனக்குத் தெரியாது - அந்தப் பயணம் என் பாலகானசபா நாடக வாழ்க்கைக்கு ஒரு முற்றுப்புள்ளியாக அமையப் போகிறது என்பதும்; என் வாழ்க்கையில் நான் விரும்பாத வேறொரு அத்தியாயம் ஆரம்பமாகப் போகிறது என்பதும்!

(தொடரும்)

---



# அவுட் ஆன பேட்ஸ்மேன்?

'என் முகத்திலிருக்கும் புன்னகை, பேட்ஸ்மேனை வீழ்த்தி விக்கெட் எடுக்கும்போது பௌலரின் முகத்தில் ஏற்படும் புன்னகைக்குச் சமம்.'

— பீஹார் முதல்வர் லாலுபிரசாத் யாதவை விசாரித்த சி.பி.ஐ. டைரக்டர் யு.என். விஸ்வாஸ் கூறியது.

— ஆர்.எஸ். கிருஷ்ணன்

சகுந்தலை தன் மகனுடன் துஷ்யந்தனுடைய அவைக்குச் சென்றாள். துஷ்யந்தன், "பெண்ணே! நீ யார்? உன் கணவன் யார்? இம்மைந்தன் யாவன்? இங்கு ஏன் வந்தாய்?" என்றெல்லாம் வினாவினான். இத்தனை வினாக்களுக்கும் ஆழமாகவும், அழகாகவும், சிந்தித்து சகுந்தலை சொன்னாள்: "மகனே, பரதா! உன் தந்தையை வணங்கு!"

— கிருபானந்தவாரியார்

தகவல் : ஆர். பார்த்திபன்

# நான் சர்க்கரை வியாதியிலிருந்து விடுபட்டு பக்க விளைவுகளிலிருந்து மீண்டது எவ்வாறு?

**பெருமதிப்பிற்கு உரிய டாக்டர் T. ஞானசுந்தரம் அவர்களுக்கு,**

கடந்த 3 ஆண்டுகளாக நீரிழிவு நோயால் பாதிக்கப்பட்டு மிகவும் கஷ்டப்பட்டு வந்தேன். திருச்சி, தஞ்சை போன்ற ஊர்களில் அலோபதி வைத்தியம் செய்து கொண்டேன். அது தற்காலிக நிவாரணம் கொடுத்ததே தவிர நோய் முற்றிலும் நீங்கவில்லை. உடல் தளர்ச்சி ஏற்பட்டு கை, கால் பாதங்களில் ஊசிகுத்துவது போன்ற உணர்ச்சியால் அவஸ்தைப்பட்டேன். உடலில் அரிப்பும் மலச்சிக்கலும் இருந்து வந்தது. தூக்கம் சரிவர இல்லை. வயது 62 ஆனதால் களைப்பு அதிகமாக இருந்து வந்தது. மனக்கவலை அடைந்த நிலையில் தங்கள் விளம்பரத்தை பார்த்து தஞ்சாவூரில் தங்களை சந்தித்து மருத்துவ ஆலோசனை பெற்றேன். தங்களுடைய ஆலோசனைப்படி தங்களால் கொடுக்கப்பட்ட மூலிகைப்பொடி, மூலிகை மருந்துகள் நேரம் தவறாமல் சாப்பிட்டு வந்தேன். தாங்கள் சொன்ன வழிமுறைகளை பின்பற்றி உடற்பயிற்சி, நடைபயிற்சிகளை கடைபிடித்து வந்தேன். 5 மாதங்களில் நீரிழிவு நோய், கை, கால் குடைச்சல் நீங்கி உடல் புத்துணர்ச்சி ஏற்பட்டது. வள்ளலார் கருணையால் தங்கள் சேவை செழிக்கவும் மக்கள் நோயின்றி வாழ, தங்கள் தொண்டு சிறப்பிக்கவும் எல்லாம் வல்ல இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன்.



இப்படிக்கு
**N. ஞானசிகாமணி,**
சார்பதிவாளர் (ஓய்வு)
21, கோ. தெற்கு வீதி,
மன்னார்குடி (PO)
நாகை காயிதே மில்லத் மாவட்டம்.

## ஆஸ்துமாவா? ஆண்மைக் குறைவா? சிறுநீரக கோளாறா? மூட்டு வலியா? சர்மவியாதியா? மாதவிடாய்த் தொந்தரவா? வெள்ளைப்படுதலா? அல்சரா? கவலையே வேண்டாம்!



**ஞானமூலிகை வைத்தியர்**
**Dr.T. ஞானசுந்தரம்**
வள்ளலார் இயற்கை நலவாழ்வு நிலையம்
செலந்தம்பள்ளி (Post)
திருப்பத்தூர் N.A.A. Dt. 635653 போன்: 04179-20668.

**NATURE HERBAL CURE**

### வைத்தியரை வெளியூர் முகாம்களில் நேரில் சந்திக்க: ஒவ்வொரு மாதமும்

| | | |
|---|---|---|
| 1-ந் தேதி | திருவண்ணாமலை | காலை 10.00 - 11.00 ஹோட்டல் ஆகாஷ் (பஸ் நிலையம் எதிரில்) போன்: 22152. |
| 1-ந் தேதி | விழுப்புரம் | மதியம் 2.30 - 3.30 ராமகிருஷ்ணா லாட்ஜ், 20, கே.கே.ரோடு, போன்: 23289 |
| 1-ந் தேதி | பாண்டிச்சேரி | மாலை 5.30 - 6.30 ஹோட்டல் ராம் இண்டர் நேஷனல் போன்: 37230 |
| 2-ந் தேதி | கடலூர் | காலை 8.30 - 10.00, ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல் போன்: 20707 |
| 2-ந் தேதி | சிதம்பரம் | மதியம் 12.30 - 1.30 S.V. ஜெயராமன் லாட்ஜில், S.P. கோவில் தெரு, போன்: 22007 |
| 3-ந் தேதி, 15-ந் தேதி | சென்னை | காலை 9.30 - 12.30 மாலை 6.00 - 7.00 உடுப்பி ஹோட்டல் கதா 97, பூந்தமல்லி ஹைரோடு, (தாசப்பிரகாஷ் ஹோட்டல் அருகில்) போன்: 30707 |
| 4-ந் தேதி | காஞ்சிபுரம் | காலை 10.00-11.00, ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) போன்: 22519 |
| 4-ந் தேதி | வேலூர் | மாலை 4.00 - 5.30 ஹோட்டல் ரங்கா லாட்ஜ், 3, தென்னமரம் தெரு, போன்: 21644 |
| 7-ந் தேதி | சேலம் | காலை 10.30 - 11.30 ஹோட்டல் செல்லம், (புதிய பஸ் நிலையம் எதிரில்) போன்: 449331 |
| 7-ந் தேதி | ஈரோடு | மாலை 4.00 - 5.30 ஆக்ஸ்போர்டு லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில்) போன்: 70761 |
| 8-ந் தேதி | கோயமுத்தூர் | காலை 9.00 - 12.00 சேரன் பேலஸ் லாட்ஜ், (சாந்தி தியேட்டர் பின்புறம்) போன்: 302211 |
| 9-ந் தேதி | மதுரை | காலை 8.30 - 10.30 ஹோட்டல் கிராண்ட் சென்ட்ரல் (மேலபெருமாள்மேஸ்திரி தெரு) போன்:543941 |
| 9-ந் தேதி | புதுக்கோட்டை | மாலை 4.00 - 5.00 நேஷனல் லாட்ஜ், (பஸ் நிலையம் எதிரில்) போன் : 2127 |
| 10-ந் தேதி | கும்பகோணம் | காலை 8.30 - 10.00 VPR லாட்ஜ், . (பெரிய கடை தெரு) போன்: 21331 |
| 10-ந் தேதி | மயிலாடுதுறை | மதியம் 12.30 - 1.30, செல்வா லாட்ஜ், (கச்சேரி ரோடு) போன்: 24329 |
| 10-ந் தேதி | தஞ்சாவூர் | மாலை 5.30 - 6.30, அசோகா லாட்ஜ், போன்: 20021 |
| 11-ந் தேதி | திருச்சி | காலை 8.30 - 10.30, அஜந்தா லாட்ஜ், (ஜங்ஷன் ரோடு) போன்: 460501 |
| 11-ந் தேதி | நாமக்கல் | மாலை 3.00 - 4.00 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, போன்: 20433 |
| 12-ந் தேதி | திருப்பத்தூர் | காலை 10.30 - 11.30, சுந்தர் லாட்ஜ், (ஸ்டேட் பாங்க் எதிரில்) போன்: 20293 |
| 15-ந் தேதி | சென்னை | காலை 9.30 - 12.30, மாலை 6.00 - 7.00 உடுப்பி ஹோட்டல் கதா, போன்: 8252255 |
| 18-ந் தேதி | தருமபுரி | காலை 9.00 - 10.00, ஸ்ரீ மாகேஸ்வரா லாட்ஜ், போன்: 60226 |
| 18-ந் தேதி | கரூர் | பிற்பகல் 2.30 - 3.30, ஆர்த்தி ஹோட்டல், தின்னப்பா தியேட்டர் அருகில், போன்: 60122 |
| 18-ந் தேதி | திண்டுக்கல் | மாலை 6.00 - 7.00, குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் பின்புறம், போன்: 27017 |
| 19-ந் தேதி | விருதுநகர் | காலை 10.00 - 11.00, ஆண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, போன்: 45537 |
| 19-ந் தேதி | திருநெல்வேலி | பிற்பகல் 2.30 - 3.30, அருணகிரி லாட்ஜ், மதுரை ரோடு, போன்: 24553 |
| 20-ந் தேதி | நாகர்கோவில் | காலை 9.00 - 11.00, பயனீர் குமாரசாமி லாட்ஜ், PWD ரோடு, முனிசிபல் பார்க் அருகில், போன்: 22175 |
| 20-ந் தேதி | கோவில்பட்டி | பிற்பகல் 2.00 - 3.00, ஆனந்தா லாட்ஜ், பஸ் நிலையம் அருகில், போன்: 22203 |
| 21-ந் தேதி | உடுமலைப்பேட்டை | காலை 9.00 - 10.00, குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில், போன்: 24353 |
| 21-ந் தேதி | திருப்பூர் | பிற்பகல் 12.30 - 1.30, இராமகிருஷ்ணாலாட்ஜ், போன்: 740418. |

❏ ரூ. 25. பரிசு பெறுபவர் :
என். சங்கரதாஸ்,
1, முடுக்குத் தெரு,
ஸ்ரீவில்லிபுத்தூர்,
காமராஜர் மாவட்டம் - 626 125.

● வி.எஸ். கணேசன்,
சென்னை – 78.

? புரட்சித் தலைவி ஆட்சியில் அவருக்கு உருப்படியான யோசனை கூற ஒருவர் கூட இல்லையா?

! இருந்தார்களே! ஆனால், நேர்மையும் திறமையும் மிக்க அதிகாரிகள் பலர் சொன்னதைப் புரட்சித் தலைவி கேட்டாரா என்ன...? தமக்குச் சாதகமாய்ப் பேசிய ஊழல் அதிகாரிகள், நண்பர்கள், அமைச்சர்களைத்தான் அவர் விரும்பினார். அதனால் வந்த வினைதான் எல்லாம்... ஆட்சியில் இருப்போர் குறளை மறக்கலாமா? (784).

● வீ. அருண்சொல்லரசு, இரமங்கலம்.

? தி.மு.க. ஆட்சி வந்த பிறகு விலைவாசிகள் மிக அதிகமாக ஏற ஆரம்பித்துவிட்டன என்று மக்கள் பேசிக் கொள்கிறார்களே?

! விலைவாசி உயர்வு என்பது பெரும்பாலும் மத்திய அரசின் பொருளாதார, நிதிக் கொள்கைகளால் ஏற்படுகிறது. மத்திய நிதி அமைச்சர்தான் பொறுப்பு. விலைவாசிகளைக் குறைப்பதற்காக, மாநில அரசுகள் அரிசி போன்ற சில முக்கிய பொருள்களுக்கு மான்யங்கள் அளித்து ஓரளவு சமாளிக்கின்றன. எந்தக் கட்சியின் மாநில ஆட்சிக்கும் இது பொருந்தும்.

● கே.ஆர். உதயகுமார், சென்னை – 1.

? பெண்களிடம் ஆண்கள் வழிவதைப் போல் ஆண்களிடம் பெண்கள் வழிவதில்லையே, ஏன்...?

! உங்கள் அனுபவத்தின் அடிப்படையில் எல்லோரையும் எடைபோடக் கூடாதுங்க...!

● என். சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர். ❏

? நடிகரின் வீட்டில் உள்ள கறுப்புப் பணத்துக்கும் அரசியல்வாதியின் வீட்டில் உள்ள லஞ்சப் பணத்துக்கும் என்ன வித்தியாசம்?


• அ.தி.மு.க. வங்கி!


• விபரீத யோசனை

! அது கறுப்பு என்றாலும் உழைத்துச் சம்பாதித்தது. இது உழைப்பே இல்லாமல் சம்பாதித்தது.

● வ. தங்கவேல், பு. புளியம்பட்டி.

? நாம் பிறருடைய காலில் விழுந்து வணங்குகையில் அவர்களது சக்தி நமக்குக் கிடைக்குமாமே...?

! ஒரு பெரியவர் காலில் விழுந்து நாம் வணங்கும்போது, அவர் 'நாராயணா' 'நாராயணா' என்று கூறி, அந்த நமஸ்காரத்தை பகவானுக்கு அனுப்பி வைக்க வேண்டும். – இது காஞ்சி பரமாச்சார்யார் கற்றுக் கொடுத்த வழி. ஆக, இறைவனின் அருட்சக்தியை, நமஸ்கரிப்பவன் பெறுகிறான். ஆனால் ஊழல்காரர்களின் காலில் விழுந்தால்...? அந்த நமஸ்காரத்தை மமதை காரணமாக அவர்களே ஏற்க, காலில் விழுந்தவரும் ஊழல் சக்தியைத்தான் பெறுகிறார்!


• ஷாக்!

# கௌடாவின்

● ஆர். ராஜா சாஹிப், சென்னை – 106.

? தமிழ் இலக்கியத்தின் இன்றைய நிலை ஆக்கமா? தேக்கமா?

! வீக்கம்!

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? 'பணத்துக்கும் போலிப்

# சாதனை என்ன...?

புகழுக்கும் ஆசைப்பட்டு கர்நாடக இசைப் பாடகிகள் திரை இசைப் பக்கம் திரும்பக் கூடாது. சாரீரம் பழுதாகிவிடும்' என்று விமர்சகர் சுப்புடு கூறியது சரியா?

! சினிமாவில் பெண்கள் பெரும்பாலும் எட்டு முதல் பத்துக் கட்டை சுருதியில் பொய்த் தொண்டையில்தான் பாட வேண்டும். கர்நாடக இசைக்கோ கள்ளக் குரல் உதவாது. இந்தக் கவலையில்தான் சுப்புடு பரபரப்பான எச்சரிக்கை விடுக்கிறார். ஆனால், நிஜ குரலிலேயே சினிமாவிலும் பாடி கர்நாடக இசையிலும் கொடி நாட்டி சரித்திரம் படைத்தவர்கள் உண்டு : எம்.எஸ்., டி.கே.பி, எம்.எல்.வ...



• 'ஜே' போடலாம்



• கேட்பதைக் கொடுத்தால்...?

● தேவந்தி துரைராஜ், திருப்பத்தூர் – 2.

? பிரபுதேவாவுக்கு மின்சாரக் கனவாவது கைகொடுக்குமா...?

! வியாபார ரீதியில் ஏற்கெனவே ஷாக் அடித்து விட்டதாகத்தான் பேச்சு...

● எஸ். சுடர்க்கொடி, கல்பூதூர்.

? அ.தி.மு.க.வை ஜெயலலிதா ஆயுதமாகப் பயன்படுத்துகிறாரா? இல்லை, பாதுகாப்புக் கவசமாகப் பயன்படுத்துகிறாரா?

! இப்போதைக்குக் கடன் பெறும் வங்கியாக! வருமான வரி கட்டுவதற்கு நான்கு கோடி ரூபாய் கடன் பெற்றிருக்கிறாரே...!

● பி.எம். வள்ளி, பாஸ்டின் நகர்.

? அது என்னங்க, வங்க எழுத்தாளர்களே ஞானபீட விருதை அடிக்கடி தட்டிச் சென்று விடுகிறார்களே... எப்படி?

! ஏனையோரைப் போல் அங்கே எழுத்தாளர்கள் மூளையால் எழுதுவதில்லை, இதயத்தால் எழுதுகிறார்கள். அதுதான் காரணம்.

● ஜெ. ரஜினி ராம்கி, மயிலாடுதுறை.

? கௌடாவின் சாதனையாகப் பேசப்படப் போவது எது...?

! கௌடா ஆட்சியில் சில நல்ல காரியங்கள் நடந்துள்ளதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். சீனா, பங்களாதேஷ், இலங்கை போன்ற அண்டை நாடுகளுடனான உறவுகளைப் புதுப்பிக்கவும் பலப்படுத்தவும் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளைப் பாராட்டலாம். குஜ்ராலுக்கு 'ஜே' போட்டு வாழ்த்துச் சொல்லலாம்.

● ஆர். லோகநாதன், நாகூர்.

? 'ஜெ' இல்லாத அ.தி.மு.க. வுடன் த.மா.கா. தேர்தல் உடன்பாடு வைத்துக் கொண்டால் நல்லது' என்று சோ கூறியிருக்கிறாரே...?

! அவ்வளவு சரியாகப் படவில்லை. கண்ணப்பனும், முத்துசாமியும் எஸ்.டி.எஸ்ஸும் வழக்குகளில் அடிபடுகிற வேளையில், இதுவரை கறை படியாத த.மா.கா. அவர்களுடன் இணைவது, சந்தேகமின்றி தற்கொலைதான்!

• நிஜத்துக்கு...



...நிகர்

● எம்.எம். அபிநாட்சயா, மதுரை – 10.

? மத்தியில் ஆட்சி மாறினால் ஜெ. மீதான வழக்குகள் புஸ்வாணம் ஆகிவிடுமாமே...?

! அவர் எந்தக் கட்சியுடன் கூட்டணி அமைக்கிறார் என்பதைப் பொறுத்தே அது அமையும்; மத்தியில் ஆட்சிக்கு வருவது எந்தக் கட்சி என்பதையும் பொறுத்திருக்கிறது.



...போட்டியில்லை!

● கே. கணேசன், கிருஷ்ணகிரி.

? சந்தனக் கடத்தல் வீரப்பனுக்குப் பொது மன்னிப்பு வழங்கப்படுவதை வரவேற்கிறீர்களா...?

! அப்புறம் லல்லுவும் ராவும் சுக்ராமும் ஹர்ஷத்தும், ஏன்... நமது ஜெயலலிதாவும் கூடத்தான்... பொது மன்னிப்பு கேட்பார்களே, பரவாயில்லையா..



● மலர்விழி முத்துவிநாயகம், தஞ்சை – 2

? பாரம்பரியம் மிக்க பத்திரிகைகள் கூட இலக்கியத்தை நம்பாமல், லாட்டரி போல் பரிசுகள் அளித்து ஆசை காட்டி, விற்பனை செய்வது தமிழுக்கு நல்லதா?

! எழுத்தாளர்களுக்கு இலக்கியப் போட்டி நடத்தும் பத்திரிகைகள், வாசகர்களின் மூளைக்கு வேலை தந்து போட்டி வைப்பதில் தவறு ஏதும் இல்லை. அது கிட்டத்தட்ட லாட்டரி போல் மாறும்போதுதான் தப்பு.

**நீங்கள் கேட்டவை – தராசு**




**வ**ங்கி மானேஜர் சத்யப்பிரியாவிடம் லோன் கேட்கப் போகிற அஜீத்குமார், அவர் பெண் மகேஸ்வரியிடம் நேசம் கொண்டு விடுகிறதுதான் கதை. ஒரு சவாலில் உதிக்கிற காதல் எப்படி நிஜ காதலாகிறது என்பதைப் படிப்படியாகக் காட்டுவது திரைக்கதை.

அதில் ஏதாவது புதுசாகப் பண்ணியிருக்கலாம். மோதலில் தொடங்கி, சிறலில் வளர்ந்து, பாதியிலே காதல் கைகூடி விடுவதால், மேற்கொண்டு என்ன செய்வது என்பதற்குக் காவிரிப் பேச்சுவார்த்தைத் தோல்விக்குப் பின் கருணாநிதி போல சிண்டைப் பிய்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

அஜீத்தின் அப்பாவாக வரும் மணிவண்ணன் கேரக்டரை அநாவசியத்துக்கு வளர்த்து, கச்சடாவாகச் சில சண்டைகள், சென்ட்டிமென்ட் என்று அலைந்து திரிந்து, எங்கெங்கோ போகிறது கதை.

இடையில், பாக்கெட்டில் முட்டையை வைத்துக் கொண்டு, அது உடையாமல் கட்டிப் பிடிக்க முடியுமா என்பது போன்ற அறிவுபூர்வமான கேள்விகளை எழுப்பி, செயல் முறை விளக்கங்கள் தருகிறார்கள்.

மணிவண்ணனின் என்னலும் துன்னலுமான வசனங்கள் மட்டும் இல்லாதிருந்தால் இண்டர்வல் வரைகூட உட்கார முடிந்திருக்காது. தோதாக கவுண்டமணி.

ஒரு சராசரி ரசிகனை எங்கே தொட்டால் சிரிப்பான் என்று துல்லியமாகக் கணித்து எழுதப்பட்ட வசனங்களை ஒருவித பிரத்யேக அலட்சிய பாவத்துடன் கவுண்டமணி வெளிப்படுத்துகிற விதம் ரசனைக்குரியது.

இந்தக் கூட்டணியின் ஆக்கிரமிப்பில் ஹீரோ அஜீத் இருக்கிற இடம் தெரியவில்லை. பாடி ஆடுகிறாரே தவிர நடிக்கிற சோலியே இல்லை. அதென்னய்யா, காதல் ரசம் சொட்ட வேண்டிய காட்சிகளில்கூட காந்தியடிகள் மாதிரி ஒரு காருண்ய சொரூபம்?

அவரே தேவலை என்கிறார் மகேஸ்வரி. மொழுங்கென்று மெழுகு பொம்மை போல நிற்பதும் ரோபோ மாதிரி நடப்பதும் வெற்று கிரகவாசி போல சிரிப்பதும் (அத்தனை குளோஸப்கள் தேவையா கபாஷ்?) - ரொம்பவே பயமுறுத்துகிறார்.

ஏதோ ஒன்று - படமாக வந்தால் சரி என்று ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு, மாட்டைத் தூக்கி மண்டபத்தில் போட்டு கதம்ப சாதம் கிளறியிருக்கிறார்கள்.

மோசம்.

— ஆர்.பி.ஆர்.

• விருதுபெறும் ராஜம்...

# புரி சாதனை! பிடி விருது!

எழுத்தாளர்களைக் கௌரவிக்க அகாதமி பரிசு, அண்ணாமலை பரிசு, ஞானபீடப் பரிசு என்று பல உள்ளன. இசை, நடனக் கலைஞர்களை விருது வழங்கிப் பாராட்ட எத்தனையோ சபாக்கள் உள்ளன. ஆனால் பத்திரிகையாளர், ஓவியர்களை ஊக்குவிக்க யாரும் முன்வரவில்லையே என்று யோசித்திருக்கிறார் சாவி. அதன் விளைவாக நண்பர் கோபுலு, வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணசாமி ஆகியோர் ஒத்துழைப்புடன் பிறந்தது "ஞானபாரதி" விருது.

இந்த ஆண்டு இவ்விருது ஓவியர் எஸ். ராஜம் அவர்களுக்கும் பகீரதனுக்கும் வழங்கப்பட்டது. இருவருமே கல்கி வாசகர்களுக்கு நன்கு தெரிந்தவர்கள்தாம். கல்கி பத்திரிகையின் ஆரம்ப நாட்களிலேயே இந்த நிறுவனத்தில் சேர்ந்த பகீரதன், அரைப்பக்கக் கதையில் ஆரம்பித்து, பயணத் தொடர் எழுதுமளவுக்கு வளர்ந்தார். சிறுவர் தொடர்கதை, சமூகத் தொடர்கதை, அரசியல் ரிப்போர்ட்டிங் என்று அவர் தொடாத பத்திரிகைப் பிரிவு இல்லை. அவருடைய தேன்மொழியாள் நாவல் நாடகமான போதுதான் 'சோ' நாடக மேடைக்கு அறிமுகமானார்.

கல்கியை விட்டுப் பிரிந்த பிறகு பகீரதன் "கங்கை"யென்றும் "சத்திய கங்கை" என்றும் அடுத்தடுத்து பத்திரிகைகள் நடத்தினார். "சத்திய கங்கை" மிகச் சிறிய அளவில், கிட்டத்தட்ட சங்கு கணேசனின் காலணா பத்திரிகையை நினைவூட்டியபடி வெளிவந்தது. பத்திரிகை நிறுத்தாலும் தலையங்கங்களின் காரம் போகவில்லை! இதை விருது வழங்கும் விழாவில் நினைவூட்டிக் கொண்டு பேசியவர் 'சோ'.

பொள்ளாச்சி நா. மகாலிங்கத்தின் ஆளுமைக்கு உட்பட்ட பிறகு, பகீரதன் நிரந்தரப் பயன்தரும் பல சாதனைகள் புரிந்தார். சர்தார் வேதரத்தினத்தின் வாழ்க்கை வரலாறு, ஓமந்தூரார் வாழ்க்கை வரலாறு எழுதியது தவிர,



• பகீரதன்

தொல்காப்பியத்துக்கு உரை எழுதுகிற பணியிலும் பெரும்பங்கு வகித்தார்.

விருது பெற்ற ஓவியர் எஸ். ராஜம் கல்கி தீபாவளி மலர்கள் மூலம் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். அவருடைய பாணி அஜந்தா பாணியைப் பின்பற்றியதோ என்று விழா மேடையில் பொள்ளாச்சி மகாலிங்கம் யோசித்தார். ஆனால் உண்மையில் எஸ். ராஜத்தின் ஓவியங்கள் எஸ். ராஜம் பாணியைப் பின்பற்றியவையே தவிர வேறு எதையும் அல்ல. அந்தத் தனிப் பாணியில் கல்கி, கலைமகள் பத்திரிகைகளுக்கு அவர் பல வண்ண மடல்கள் அளித்துள்ளார். அதற்கு அடுத்தபடியாக அவரது தெய்வீக ஓவியங்களை தெய்வத் தமிழின் சிறப்பு ஓங்கப் பயன்படுத்திக் கொண்டவர் என். மகாலிங்கம் அவர்களே.

ஓவியர் எஸ். ராஜம் இசைக் கலைஞரும் கூட; இசை ஆய்வாளர், ஆசான். சங்கீத மும்மூர்த்திகளின் சித்திரங்களை வண்ணத்தில் வரைந்து அவர் பதித்துள்ள முத்திரை, இசை உள்ளளவும் நிலைத்திருக்கும்.

சென்ற ஆண்டு ஞானபாரதி விருது பெற்றவர்கள் கல்கி ராஜேந்திரன், ஹிந்து பத்திரிகை கார்ட்டூனிஸ்ட் கேசவ் ஆகியோர். அடுத்தடுத்து கல்கி பத்திரிகையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள் இந்த விருதினைப் பெறுவது இந்த நிறுவனத்துக்குப் பெருமை சேர்க்கும்; அமரர் கல்கியின் பெருமையை உணர்த்தும்.

- நமது நிருபர்

# திருமுருகா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்

(கம்பெனிகள் சட்டம், 1956ன் படி பதிவு செய்யப்பட்டது. பதிவு எண் 18-34128 ஆப் 1996)

(திருமுருகா தொகுப்பு நிறுவனத்தை சார்ந்தது)



வி.கே.கே.டிரேட்
சென் டர், (2-வது மாடி)
73, ரங்கநாதன் தெரு
தி.நகர், சென்னை - 17
போன் : 434 7833

கிளை :
H-58/59, சௌத் எக்ஸ்டன்ஸன்
பகுதி I, பிஎஸ்.அவுஸ்.
புது டெல்லி - 110 049,
போன் : 464 4179

# "அமுத சுரபி"

# டிபாசிட் திட்டம்

## குறைந்த பட்ச டிபாசிட் - ரூ.1,000/-

## (ஆண்டு வட்டி 15% முதல் 20% வரை + ஊக்கதொகை)

***என்ன சார்! சௌக்கியமா? புரியவில்லையா? வழக்கமாக தமாஷாக பேசும் 'திருமுருகா' உரிமையாளன்தான் சார்***

**பொது ஜனம் :** உனக்கு ஒன்றும் வேலையில்லையா? இப்போது தான் எல்லாக் கம்பெனியும் 'டிபாசிட் வாங்கக் கூடாது' என்று 'தடை' விதித்துவிட்டார்களே! பின்னே எதுக்கு "Bore" அடிக்கிறே?

**திருமுருகா :** சார் இப்படி ஏதாவது ஆகும் என்று ஒரு வருடத்திற்கு முன்பே யூகித்து "திருமுருகா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்" என்கிற ரிசர்வ் வங்கி கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட கம்பெனியை நெ.18.34128/96ல் ரிஜிஸ்டர் செய்து வைத்தேன். அது இப்போது பயனுள்ளதாக இருக்கிறது.

**பொது ஜனம் :** மத்தவங்களைப் போல இந்தக் கம்பெனியில் வட்டி குறைவாய் கொடுப்பாய்? எவன் உன்கிட்ட போடுவான் போய்யா!.

**திருமுருகா :** சட்டப்படி 15% முதல் 20% வட்டியும், + ஊக்க தொகையும் நான் கொடுக்க முடியும்.

நேரில் வந்தால் 'சட்டப்படி சில உதவிகள் பற்றி கூறுகிறேன்.

எங்களுக்கு வந்த டிபாசிட்டில் இதுவரை 2 கோடிக்கு மேல் திருப்பி கொடுத்துவிட்டோம். இது நாள் வரை ஒரு "Cheque" ஐயும் காசு இல்லாமல் திருப்பியதில்லை. மற்ற வியாபாரத்தில் வரும் வருமானத்தை வைத்து திருப்பி கொடுக்கிறோம்.

**பொது ஜனம் :** ஏய்யா, உயிரை வாங்குகிறாய்? நீ வாங்கினே திருப்பி கொடுக்கிறே!

**திருமுருகா :** எங்கள் கம்பெனி நியாயமானது "Solvent" என்று சொல்லத்தான் இதை சொல்லுகின்றேன். உங்கள் பணத்திற்கு பாதுகாப்பானது. உங்களுக்கு வேறுமுறையாலும் பயனடைய வழி உள்ளது. தயவு செய்து ரிசர்வ் வங்கி கட்டுப்பாட்டில் உள்ள எங்கள் **திருமுருகா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்** கம்பெனியில் டிபாசிட் செய்யுங்கள் சார்!



“அடேய்ய்ய்....”

மோகன்ராமின் அடிவயிற்றில் இருந்து பீறிட்டுக் கிளம்பிய அந்த சப்தம் கேட்டு காளியப்பன் திடுக்கிட்டுப் போகிறான்.

தலைக்கு மேலே சாராயக் கூடையின் பாரம் அழுத்த, ஒரு தினுசாகப் பார்க்கிறான்.

இதற்குள் மோகன்ராமின் நெருங்கி விட்ட சரீரம் காளியப்பனின் பனியன் மார்பை ஆவேச கதியோடு பற்றுகின்றது.

“ஏய் என்ன பண்றே... எதுக்கு பிடிக்...” – முழுதாகப் பேசுமுன் அந்த சாராயக் கூடை அவன் தலையிலிருந்து தப்பி கீழே விழுகிறது. சாக்கிலிருந்து விலகி, அந்த தகர டின் தன்னுள் அடங்கிய சாராயத்தை வீதியில் பாய்ச்சுகிறது!

குமட்டல் நெடி வீதியையே வெளியே இழுத்து வருகிறது.

பானுவின் தற்கொலை முயற்சி மந்தாவை ரொம்பத்தான் பாதித்து விட்டது. புலம்பிக் கொண்டேயிருக்கிறாள்.

“ ‘குளிக்காட்டா சிவப்பு – குளிச்சா கருப்புன்னு’ உன்னை வெச்சிருக்க நினைக்கறேன். நீயோ காத்தா கரையலாம்னும் புகையா மறையலாம்னும் பாக்குறியே?

எதிர்த்து வாழணும்டி.. நானில்லை?

வெறும் சட்டி பானையை நம்பியே உன்னை ஆளாக்கலையா?” – கேள்வியாய்க் கேட்டு புதிர் போடுகிறாள்.

# இந்திரா சௌந்தர்ராஜன்

# 4

# ஆசை நெசவு

காளியப்பனிடமும் இப்போது கொதிக்கும் ஆவேசம்.

"என்னா தில் இருந்தா நீ இந்த காளியப்பன் மேலேயே கை வைப்பே? நாயே - உன்னால சரக்கெல்லாம் கூட வீதியிலே..." - காளியப்பன் பதிலுக்கு மோகன்ராமைப் பிடித்து, கடலைச் செடி போல் உலுக்க ஆரம்பிக்கிறான்.

'ஐய்யோ...' என்கிற அலறலுடன் இடையிடுகிறாள் மகாலட்சுமி.

"டேய் மோகன் விட்றா. என்னடா இது? விடுங்கடா... விட்டுடுங்கடா..." - அவளின் புலம்பலுக்கு நடுவில் இருவருமே வீதியில் அந்த சாராய ஓட்டத்தின் மேலேயே விழுந்து புரளுகின்றனர்.

வீதியில் கூட பெரும் பாலோர் மலைப்பக்கம் போய் விட்ட நிலையில் கிழடு கட்டைகளாகவே எட்டிப் பார்த்து கை பிசைந்து நிற்கின்றனர். அந்த யுத்தத்துக்கு இடையீடே இல்லாத நிலை. ஆயினும் மோகன்ராமின் கைதான் ஓங்கும் போல இருந்தது.

அவனது ஆவேசம் காளியப்பனைப் புரட்டி எடுப்பதிலும் அவன் திணறுவதிலும் நன்கு தெரிந்தது. தாக்குப்பிடிக்க முடியாத நிலையில் ஒரு கட்டத்தில் காளியப்பன் அந்த குண்டும் குழியுமான சாலை ஓரமாகக் கிடந்த ஒரு பெரிய கல்லை சட்டென்று கையில் எடுத்துக் கொண்டான். மோகன்ராமின் தலையைக் குறிவைத்துத் தாக்கப் போக, அது தப்பாமல் அவன் பின் மண்டையைப் பெயர்த்து அவனை மயங்கி விழவைத்துவிட்டது!

கசகசவென்று ரத்தக் கசிவு. தோள் பட்டை கழுத்து என்று ஓடி, ஒரு கொலை செய்து விட்டதைப் போன்ற பயத்தை காளியப்பனிடமும் ஏற்படுத்துகிறது.

"ஐய்யோ.. அடேய் மோகன்.. மோகன் கண்ணைத் திறந்து பாருடா... டேய்" - மகாலட்சுமி வேறு அழுது அரற்றத் தொடங்குகிறாள். இனியும் அங்கிருப்பது ஆபத்து என்கிற மாதிரி கூடையையும், முக்கால் பாகத்தை வீதியில் கொட்டிவிட்ட அந்தத் தகர சாராய டின்னையும் அள்ளி எடுத்தபடி அப்படியே நழுவ ஆரம்பித்தான் காளியப்பன்.

என் முனை எதிர்ப்பில்லாத தெரு.

அவன் வேகமாக ஓடுவதை வேடிக்கை பார்த்து நிற்கிறது.

அதன் பிறகுதான் மோகன்ராமின் மயக்க நிலையையே கவனிக்கிறது.

மகாலட்சுமி, குமட்டும் சாராய வாடைக்கு நடுவில் மகனை மடியில் போட்டுக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் விழிக்கும் போது, செய்தியறிந்து புழுதி பறக்க ஓடி வந்து கொண்டிருந்தாள் பானு. பின்னாலேயே பதைப்போடு மந்தா கிழவி.

நெருங்கி விட்ட பானு ரத்த உருண்டையாகக் கிடக்கும் மோகன்ராமின் தலையைப் பார்த்து, விழி விரிக்கிறாள். அதில் அதிகபட்ச அதிர்ச்சியும் பயமும்.

"மாமி என்னாச்சு... எப்படி இப்படி?"

"நான் என்னத்தச் சொல்வேன் - நீ போய் ஒரு குதிரை வண்டி கூட்டிக்கிட்டு வாடி. டாக்டர்கிட்ட போவோம்..."

அதற்கு மேல் அங்கு நிற்காமல் ஓடுகிறாள் பானு. இண்டர்நெட் யுகத்திலும் இன்னமும் சில மட்டக் குதிரை வண்டிகள். இருமலோடும் உருமாலோடும் சாயபு வண்டி ஓட்டிகள். மந்தா கிழவி முதல் வீதிக் கிழடுகள் வரை எல்லோரும் வேடிக்கை பார்க்க, அதில் ஒரு வண்டி மோகன்ராமைச் சுமந்தபடி ஓடத் தொடங்குகிறது. அடுத்த தெருக் கடைசியில் இருக்கிறது கம்பவுண்டர் பழனியின் வீடு. முன்னாலே ஒரு பத்துக்குப் பத்து சதுர அறையில் ஒரே ஒரு மர பெஞ்சு. அதில்தான் ஆபரேஷன் கேஸ் முதல் காலில் முள் தைத்த கேஸ் வரை படுத்து எழுந்தாக வேண்டும்.

பழனியிடம் வியாதிக்கெல்லாம் தோராயக் கணக்குதான். யார் வந்தாலும் எதற்கு வந்தாலும் கட்டாயம் ஊசி போட்டு விடுவான். பெரிய ஆஸ்பத்திரி போல கட்டி கட்டியாக



● ஒரு மனிதனுக்கு மகிழ்ச்சி தருவது வசதிகளோ வருமானப் பெருக்கமோ அல்ல. தேவைகளின் சுருக்கம்!

தொகுப்பு: கு. அருணாசலம்



மாத்திரை தந்து கலர்த் தண்ணீர் தந்து அனுப்பும் வேலையெல்லாம் கிடையாது.

"எலே பழனி நீயாச்சும் ஊசி போடுடா..." என்கிற ஏழை விருப்பம் நிறைவேற்றுபவன். பத்து ரூபாய்க்கு எய்ட்ஸுக்கே வைத்தியம் பார்க்கும் ஏழை பங்காளன்!

மோகன்ராமுக்கு வைத்தியம் பார்க்கிறான். பின் தலையில் ஒரு கரப்பு படுத்திருப்பது போல் சிவப்பாய் பிளவு. ரத்தம் சுதந்திர வேட்கையோடு தாவிக் குதித்து வந்து கொண்டேயிருக்கிறது.

"தையல் போட்டாகணுமே... இல்லாட்டி ஒண்ணும் பண்ண முடியாது. டாக்டர்கிட்டதான் போயாகணும்" என்று கட்டுப் போட்டு அனுப்புகிறான். "அப்ப நீ?" மகாலட்சுமியின் அப்பாவிக் கேள்வி முன் வழிசலாகச் சிரிக்கிறான்.

"டாக்டர் கிட்டைன்னா? நூறு ரூபாயாச்சும் வேணுமே..." கையை உதறுகிறாள் பானு. சட்டென்று, "மாமி எங்கிட்ட இருக்கு. திருவட்டம் சுத்தி சேத்த காசு" – என்றபடி ஓடிப் போய் எடுத்தும் வருகிறாள்.

மகாலட்சுமி நன்றியோடு அவள் கையைப் பிடித்துக் கொண்டாள்.

"மாமி கிளம்புங்க, இப்படி தேங்கி நின்னா எப்படி?" – அவள் திரும்பவும் மட்டைக் குதிரை வண்டியில் அவனைத் தூக்கிப் போட்டுக் கொள்ள, அந்தக் குதிரை 'லொக்கடி லொக்கடி' என்று ஓட ஆரம்பித்தது.

மகாலட்சுமியை துக்கம் கவ்விக் கசக்கிக் கொண்டு இருந்தது. நடுவில் –

"யார் எப்படிப் போனா நமக்கென்ன... வீண் கோபத்தால, பாரு எவ்வளவு சிரமம்?" என்று விசும்புகிறாள்.

எதுவும் பானு காதில் விழுந்த மாதிரி தெரியவில்லை.

மோகன்ராமை தன் மடியில் கிடத்தியிருக்கும் அந்த நிலையில், வண்டி ஓட்டத்தில் அவன் தலை அவள் அடிவயிற்றில் மோதுகிறது. இன்பமாக இருக்கிறது.

அர்த்த ராத்திரி!

அங்கும் இங்குமாக சில கோலி பல்ப் வெளிச்சம் கசியும் வாசல்களுடன் தெரு. விளக்குக் கம்பங்களில் ஒன்றில் கூட உயிரில்லை. இருக்கவும் ஜவஹர் பாபு விட மாட்டான்.

இரவு நேரத்தில்தான் எங்கிருந்தெல்லாமோ குடிக்க வருவார்கள். பிறர் கண்ணில் படாமல் வந்து குடித்து விட்டுப் போக நினைக்கும் எவ்வளவோ பெரிய மனிதர்கள் எல்லாம் பாபுவின் வாடிக்கை. அவர்களுக்காகத்தான் அந்த ஏற்பாடும் கூட. சமயங்களில் அந்த இருட்டில் தெரு நாயை மிதித்துக் கடிபட்டவர்கள் முதல் கழுத்து நகையை திருடக் கொடுத்தவர்கள் வரை எவ்வளவோ பேர். எத்தனைதான் கத்தினாலும் வீதிக்கு மட்டும் வெளிச்சம் வரவே வராது.

அந்த இருட்டு இப்போது சுசிலாவுக்கு மிக உதவியாக இருக்கிறது. வேகமாக வந்திருப்பவள் மோகன்ராம் வீட்டுக் கதவைத் தட்டுகிறாள். திறந்து கொண்ட கதவுக்குப் பின்னால் மட்டமான கோலி பல்ப் வெளிச்சத்தில் மகாலட்சுமி. அவளிடம் கூட பகீர் உணர்ச்சி.

"என்னடி இது வீட்டுக்கே வந்துட்டே...?" கேட்டபடி வேகமாக அவளை உள் இழுத்துப் போட்டு கதவடைக்கிறாள். உள் நுழையும் சுசிலாவின் பார்வை தலையில் கட்டுடன் படுத்திருக்கும் மோகன்ராமையே சில விநாடிகள் வெறிக்கிறது.

"என்னடி... என்ன விஷயம், எதுக்கு வந்தே? சத்தமில்லாம சொல்லு. மோகன் காதுல விழுந்து எழுந்துடப் போறான்" என்று ரகசியக் குரலில் மகாலட்சுமி எச்சரிக்கையோடு பேச, சுசிலா சட்டென்று அவள் கையைப் பிடித்தபடி அந்த குச்சு வீட்டின் பின்பக்கமாய் விரை



"என் கணவருக்கு இருக்கற திமிரைப் பாரேன்!"

"என்ன சொல்ற?"

"இனிமே நகைகளே அணியமாட்டேன்னு எப்ப அறிவிக்கப்போறே'ன்னு கேட்கறாரு!"

– அம்பை தேவா

கிறாள்.

கிணற்றடியும் கீரைச் செடியுமாய்க் கிடக்கும் திறந்தவெளிப் பகுதியில் ஒரு துணி துவைக்கும் கல் மேடை. அதன் மேல் அமருகின்றவள் ஆழமாக மகாலட்சுமியை ஏறிடுகிறாள். சலிப்பாக பேச்சையும் ஆரம்பிக்கிறாள்.

"ஆமா உன் மகனுக்குக் கொஞ்சம் கூட அறிவில்லியா? இப்படியா அந்த காளியப்பன்கிட்ட மோதுவான்?"

"அதுக்கென்னடி...?"

"அதுக்கென்னவா... அவன்லாம் மனுஷ ஜாதியா? ஏற்கெனவே தாமு வேற இவனை அடிக்கனும்னு நினைச்சுக்கிட்டிருக்கச்சே, இவனுக்கு எதுக்கு புது வம்பு?"

"ஐயோ... அவன் மோதனும்னு மோதலடி. பத்மாவதி ஞாபகம் வந்து அவனை இப்படி பண்ணிடிச்சு. ஆமா காளியப்பனை பாத்தியா, எதாவது மிரட்டினானா?"

"மிரட்டினானாவா? ஒரு கையையோ காலையோ வாங்காம விடப் போறதில்லைன்னு சொல்லிக்கிட்டிருக்கான்."

"இப்ப என்னடி பண்ண?"

"என்ன பண்ணவா? உன் மகனை அடக்கி வை. வெளிய விடாதே. அத சொல்லத்தான் வந்தேன். ஒரு தனிமனுஷன் ஜெயிக்கறதெல்லாம் சினிமா கதைலதான். சமூகத்துல கிடையாது. ஒழுங்கா படிச்சு பாஸ் பண்ற வழிய பார்க்கச் சொல்லு. அப்படியே அந்த தாமு விஷயத்துலயும் இப்ப தலையிட வேண்டாம்னு சொல்லு."

"நான் சொன்னா கேக்கறவனா இவன். ஆண்டவன் ஏன் என்னை இப்படி சோதிக்கறான்?"

"அவனுக்கு சோதிக்க மட்டும்தான் தெரியும் அதனாலதான். நாமதான் நம்ம புத்திசாலித்தனத்தால தப்பிச்சுக்கனும். சரி சரி செலவுக்குப் பணம் இருக்கா?"

"இருக்கு என்பது போல் மகாலட்சுமி பெரிதாகத் தலையாட்டினாள்.

"எங்க இருக்கு... ஆஸ்பத்திரி செலவுக்கே பானுதான் தந்தாளாமே...?"

"உனக்கு எப்படிடி தெரியும்?" தயங்கியபடி கேட்கிறாள்.

"எனக்குத் தெரியாம இந்தத் தெருவுல ஈ, காக்கா கூட பறக்காது. அது தெரியுமா உனக்கு? போகட்டும் உன் மகன் இன்னிக்கு அந்த பானு பொண்ணைக் காப்பாத்தி, புண்ணியத்தக் கட்டிக்கிட்டான் போல இருக்கே?"

"ஆமாம்... அந்தப் பொண்ணே பின்னால சொன்னப்பதான் எனக்கே தெரியும்."

"ஆமா, அந்த பொண்ணைப் பத்தி என்ன நினைக்கறே நீ?"

"காலாகாலத்துல கல்யாணம்னு ஒன்னு

மதுரை ஆட்டோக்களில் பெரும்பாலும் 'அய்யனார் துணை', 'மதுரை வீரன் துணை' போன்ற வாசகங்களைக் காணலாம். ஆனால் ஒரு ஆட்டோவின் பின்புறம் 'பொது மக்கள் துணை' என்று எழுதப்பட்டிருக்கிறது!

— வைகை ரமேஷ்

ஆகலைன்னாலே இப்படித்தான்டி. அதுலையும் பானு மாதிரி வில்லங்கம் உள்ளதுங்க எப்படித்தான் கரை ஏறப் போகுதோ தெரியலை. ஹூம்..."

– மகாலட்சுமி பெரிதாகச் சலித்துக் கொண்ட அந்த நொடியில், உள்ளிருந்து மோகன்ராம் குரலும் பெரிதாகக் கேட்கத் தொடங்கியது.

"அம்மா... யார் கூட பின்னால பேசிக்கிட்டிருக்கே?"

"ஐய்யோ மோகன் எழுந்திரிச்சிட்டான் போல. இப்ப என்னடி பண்ண?"

"இந்தா இந்த ரூவாய பிடி. நான் அப்புறம் உன்னைப் பாக்கறேன். இப்படியே பின்வழியே சாக்கடை வழியா நான் போய்க்கறேன். நீ எதையாவது சொல்லி சமாளிச்சுக்கோ..."

– சுசீலா பேச்சோடு பேச்சாக சேலையை ஏற்றிச் செருகியபடி பின் வழியே இருளில் ஓடி மறைய, ரூபாய் நோட்டுக்களை சேலை முந்தியில் மூடிக் கொண்டு மகாலட்சுமி உள்நுழைகிறாள்.

"ஆமா, யார் கூட பேசிக்கிட்டிருந்தே?" மோகன்ராம் முன் ஒரு சின்ன திணறல். வெறிக்கிறான் அவன். பின், "அந்த சுசீலா கூடத்தானே?" என்று சரியாகக் கேட்கிறான். மகாலட்சுமியின் மௌனம் அதை ஆமோதிக்க, அவள் கைவசம் உள்ள ரூபாய் வேறு இப்பொழுது அவன் கண்களில் பட்டு அவனை கோபத்தில் தள்ளுகிறது.

"இது என்ன ரூபா? அவ தந்தாளா...?"

"ஆ... ஆமா... கடனா நான்தான் கேட்டேன்."

"அதுக்கு அவதான் கிடைச்சாளா?"

"ஏன் அவளுக்கு என்ன?"

"அவனுக்கு என்னவா? அம்மா உன் கைல இருக்கற காசு நல்ல வழியில வந்தது இல்லம்மா. ஆசையிலையும் போதையிலையும் திரியற ஒழுக்கமில்லாதவங்களோட கைபட்டு வந்த காசும்மா அது. வெக்கத்த விட்டு உடம்பை வித்து, அத அவங்ககிட்ட இருந்து வாங்கி உன் கிட்ட தந்துருக்காம்மா அவ... அது சரி, இப்ப எதுக்கு இங்க வந்தா அவ?"

முக்கிய கேள்விக்கு வந்தவனை வெறிக்கிறாள் மகாலட்சுமி. பின் மெள்ள உதடு பிரிக்கிறாள்.

"அந்த காளியப்பன் உன் கை காலை வாங்கணும்னு துடிச்சுக்கிட்டு இருக்கானாம்..."

"ஓஹோ, அதைச் சொல்லி என்னை மிரட்ட வந்தாளா?"

"இல்லடா... உன்னை எச்சரிக்கை செய்ய வந்தா. பகல்லையே அந்த தாமு வேற உன்னை மலைல அடிக்கத் தேடியிருக்கான் போல..."

"அதனால...?"

"என்னடா இப்படி கேக்கறே... அவங்கள்லாம் இந்த சமூகத்தோட ராட்சஸங்கடா. அவங்களோட மோதி மீள முடியுமா நீ?"

மகாலட்சுமியின் கேள்வி முன் ஒரு நீண்ட மௌன வசம் சிக்குகிறான் மோகன்ராம்.

அவன் மௌனத்தைக் கண்டிப்பது போல் வெளியே திடும்மென்று பலமான இடி. எடுப்பிலேயே பெரிய ஆரம்பத்தோடு சடசடவென மழை வந்து, வீட்டின் ஓட்டுக் கூரை மேல் விழுந்த விதத்தில், ஒரு தினுசான சப்தம்.

"இதென்ன இப்படி திடீர்னு மழை பிடிச்சுக்கிட்டு...?"

மகாலட்சுமி சட்டென்று மழையால் திசை திரும்பி, அது ஒழுகி உபத்திரவப்படுத்தும் இடங்களை உத்தேசித்து, சமையல் கட்டுப் பக்கம் சென்று அலுமினிய பாத்திரங்களை எடுத்து வருகிறாள். வீடு முழுக்கத் தரை மேல் வைத்து ஒழுகும் நீர்ச் சொட்டுக்களைப் பிடிக்க ஆரம்பிக்கிறாள்.

நடுவில் மோகன்ராமும் எழுந்து தன் பட்டுத் தறியை பாலிதீன் தாளால் மூடப் பார்த்தான். ஆனால் பின் மண்டைக் காயம் ஆவென அவனை அலற விட்டது. அப்படியே அதிசயமாக அவனை மயங்கவும் விட்டது. அத்தனை பலமான அடி!

மகாலட்சுமிக்குள் பதற்றம் பரவிய நொடியில், பெரிய இடி ஒன்று அவனை 'அர்ச்சுனா!' என்று கதறியபடி ஓர் ஓரமாக முடக்கித் தள்ளியது. கருத்த வானில் ஏகமாய் மின்னல் கிளைகள் - டிராகன் உருப்போல தோற்றம். கூடவே இடியுடன் ஒரு ஆபத்தான மின்னல், அந்த ஏழை வீதியில் பானுவின் நொடிந்த வீட்டைக் குறிவைத்து இறங்க ஆரம்பித்தது!

(தொடரும்)

## TV மர்சனம்:



# ஜகா வாங்கிய, ஜெயந்தி!

●● 'வீடு தேடி வரும் விஜய்' என்று ஒரு நிகழ்ச்சி- விஜய் டீ.வி.யில் தான்! சினிமாவில் காணாமலே போய்விட்ட ரேகா வீடு வீடாகப் போய் ஆயிரம் ரூபாய் கொடுக்கிறார். ஆம்! கடிதம் எழுதிய நேயர் வீட்டில் இருந்து விட்டால், அவருக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்து, அவரது விருப்பமான பாடலையும் ஒளிபரப்புகிறார்கள். ஓர் ஆணும் பெண்ணும் தங்களுக்குக் கிடைத்த ரூபாயைச் சமர்த்தாக அப்படியே அப்பா. அம்மாவிடம் கொடுத்து விடுவதாகச் சொன்னார்கள். ஒரு திருமதி மட்டும் 'கணவரிடம் கொடுக்க மாட்டேன்; நானேதான் செலவு செய்வேன்' என்றார் வெளிப்படையாக. மூவருமே கிடைத்ததில் கொஞ்சம் தருமமும் செய்வோம் என்றது சந்தோஷமான விஷயம். இந்த நிகழ்ச்சி தூர்தர்ஷனில் வருகிற 'ஏரியல் மிஸ்டர் கோல்டு' நிகழ்ச்சியின் இன்னொரு வடிவம்தான்! ஒரேயொரு வித்தியாசம், அதில் வருகிற இந்தி நடிகர் அனுபம் கேர் ரொம்ப ரொம்ப இயல்பாகவும் அநாயாசமாகவும் செய்கிறார்; ரேகாவோ புதுப் பெண் மாதிரி கூச்சப்பட்டுக் கொண்டு செய்கிறார்!

●● 'Lonely Planet' என்கிற டிஸ்கவரி நிகழ்ச்சியில் ஒருமணிநேரம் சீனாவைப் பற்றிக் காட்டினார்கள். ஓர் அமெரிக்கப் பெண் சீனாவைச் சுற்றிப் பார்க்கிறார்- கூடவே கேமராவும்! சீனா என்றதுமே சீனப் பெருஞ்சுவர் பற்றி மட்டுமே அறிந்திருந்த நமக்கு, சீனாவின் பல நகரங்களையும் கிராமங்களையும் பார்க்கிற வாய்ப்பு. அப்பப்பா! சீனாவில் ஜனத்தொகை தான் அதிகம் என்பதில்லை; பச்சைப் பசேல் பசுமையும் மிக அதிகம். விண்முட்ட நிற்கும் மலைகளையும் பள்ளத்தாக்குகளையும் பார்க்கப் பார்க்கச் சலிக்காது. மக்கள்? சீனாமுழுக்கவே ஆங்கிலம் தெரிந்தவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம் போல! இந்த அமெரிக்கப் பெண் ஒவ்வோரிடத்திலும் விசாரித்துத் தெரிந்து கொள்வதற்குள் படாதபாடுபட்டு விடுகிறார்! ஓரிடத்தில் அழகான அலாரம் கடிகாரத்தைப் பார்த்த அந்த அமெரிக்கப் பெண்ணுக்கு அதை வாங்க வேண்டுமென்கிற ஆசை. கேட்ட விலையைக் கொடுத்து விடவில்லை. விடாமல் பேரம் பேசி கடைக்காரர் சொன்னதில் பாதி விலைக்கு வாங்கியே விட்டார்!

●● 'பிரியமுடன் ராதிகா' இந்த வாரம் ஜெயந்தி நடராஜனைச் சந்தித்தார். 'நாடாளுமன்றத்தில் பெண்களுக்கான 33 சதவிகித ஒதுக்கீட்டுக்கான சட்டம் நிறைவேறுவதை ஆண்கள் விரும்பவேயில்லை. பெண்களுடனான அதிகாரப் பகிர்வை அவர்களால் நினைத்துக் கூடப்பார்க்க முடியவில்லை. அதனால்தான் அந்தச் சட்டம் கிடப்பில் போடப்பட்டு விட்டது. சுதந்தரம் பெற்று ஐம்பதாண்டுகள் ஆகியும் பெண்களுக்கு இதுதான் கதி' என்று ஜெயந்தி நடராஜன் சொல்ல, 'ஒட்டுமொத்த ஜனங்களின் கதியும் அதுதானே!' என்றார் ராதிகா. 'அப்படியெல்லாம் சொல்ல முடியாது. எவ்வளவோ செய்திருக்கிறோம்!' என்று அவசரமாக மறுத்தார் ஜெயந்தி நடராஜன். ஆக, ஆணாக இருந்தால் என்ன, பெண்ணாக இருந்தால் என்ன! அரசியல்வாதியாகிவிட்டால் இருவருமே ஒரே ஜாதிதான்!

●● ஜான்டிரோட்ஸின் அதிரடி ஆட்டத்தை ரசித்த கையோடு நம்மவர்களின் ஆட்டத்தையும் வெள்ளிக்கிழமை நடுராத்திரி கண்விழித்துப் பார்த்துக் கொண்டிருந்த ரசிகர்கள் கண்ணில் கொஞ்சம் கொஞ்சம் தூக்கம் ஒட்டிக் கொண்டிருந்தாலும் ஓடியே போயிருக்கும்- அந்த அதிரடிக் காட்சியைப் பார்த்தபின். அஸாருதீன் நான்கு நான்காக வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தார் கர்மசிரத்தையாக. இடையில் திடீரென்று இரவுண்டில் யாரடா அது ஆறாம் என்று பார்த்தால் அவரைத் துரத்திக் கொண்டு ஆறேழு பேர். கையில் ஒரு மஞ்சள் துணி. அந்த நிர்வாணரின் இடுப்பில் எப்படியாவது அதைக் கட்டி, இழுத்துப் போக ரொம்பவே திணறிவிட்டார்கள். ஒரு டீ பிரேக் விட்டால் கூட கவனம் பிசகி, அவுட் ஆகி விடுவார்கள் நம்மவர்கள். (ஒன்றுமில்லாதபோதே ரொம்பு ஒழுங்கு என்பது வேறு விஷயம்.) இப்படியெல்லாம் அதிர்ச்சி தரப்பட்டால்? அஸார் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருக்க, எதிர்ப்பக்கம் கங்கூலி கவனம் சிதறி அவுட்! அந்தப் புண்ணியாத்மாவின் நோக்கமும் அதுதானோ என்னவோ?

- 'டிவ்'

கிளிண்டனுடைய பதவி ஏற்பு வைபவத்தின்போது பரிமாறப்பட்ட முக்கிய உணவு வகை எது தெரியுமா? இந்திய பாணி உணவுதான்! கிளிண்டனுக்கு அதுதான் ரொம்பப் பிடிக்கும்! ஜனாதிபதிக்குப் பிடித்த உணவுதான் தங்களுக்கும் பிடிக்கும் என்று காட்டிக்கொள்ள விருந்தினரிடையே ஏகப் போட்டி! தவிர, வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் மனைவி, மகளுடன் கிளிண்டன் வாஷிங்டனிலுள்ள ஓர் இந்திய உணவு விடுதிக்கு ஓசைப்படாமல் போய் விடுவார்.

"ஹலோ! கிளிண்டனா? கங்கிராட்ஸ்! எதனால் இந்திய உணவு மீது இத்தனை மோகம் உங்களுக்கு?'' என்று ஃபோனில் கேட்டேன்.

"ஹி... ஹி... என்னைக் கேட்காதே! மிஸஸ் ஹிலரி கிளிண்டனைக் கேளு. அவதான் எலினா ரூஸ்வெல்டின் ஆவிக்கு அப்புறம் மகாத்மா காந்தியின் ஆவியைத் தருவிச்சு ரொம்ப நாள் பேசிக்கிட்டிருந்தா... ஹி... ஹி..."

"வழியாதீங்க, நான் உங்களைத்தான் கேட்கிறேன்; உங்க மனைவியை அல்ல" என்று தகவல் பெறும் உரிமையை நிலை நாட்டினேன். அமெரிக்காவில் அதற்கெல்லாம் மதிப்பு உண்டு.

''டண்டூரி உணவுன்னாலே நாக்கில் தண்ணி ஊறும் எனக்கு" என்றார் கிளிண்டன். "அதைச் சாப்பிட்ட பிறகுதான் அயல்நாட்டுத் தொழிலதிபர்களைக்கூட ஒயிட் ஹவுஸுக்கு விருந்துக்கு அழைத்து, கட்சியின் தேர்தல் நிதிக்குப் பணம் கேட்டுப் பெறுகிற தைரியம் எனக்கு வந்தது. ஆனாலும் என்ன, உங்க இந்தியத் தலைவர்களின் ஊழலுக்கு இதெல்லாம் உறை போடக் காணாது!" என்றார்.

''அதிலும் மசால் தோசைன்னா ரொம்ப ரொம்பப் பிடிக்குமாமே?"

''ஆமாம்; அதுக்கும் காரணம் இருக்கு. தமிழ் நாட்டுத் தலைவர்களுக்குத் தலா ரெண்டு மூன்று மனைவியர் உண்டுன்னு கேள்விப் பட்டிருக்கேன். அதைத் தவிர, இளமைக் காலக் காதல் பற்றியும் கட்டுரை எழுதறாங்களாம்! அவங்களோட அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்! என்



# கிளிண்டனுக்கு பிடித்த மசால் தோசை!

### செம்பியன்

னைப் பாருங்க, ஹிலரியைத் தவிர வேறு ஒருத்தியைக் கல்யாணம் செய்துக்க முடியுமா? அதுக்கு சட்டமும் இடம் தராது; ஹிலரியும் சம்மதிக்க மாட்டா. அதனால சும்மா இருந்துட முடியுதா? ஓரிரு பெண்களிடம் கொஞ்சம் ஜாலியா இருந்திருக்கேன். அதைப் போய் பெரிசுபடுத்தி, இவன் மறுபடி ஜனாதிபதி ஆயிடுவானா பார்த்துடலாம்னு வரிந்து கட்டிக் கிட்டு எழுதி, பேசி, நார அடிச்சுட்டாங்க. நல்லவேளை, அமெரிக்க மக்களும் தமிழர்களைப் போல இந்த விஷயத்துல தாராள மனப்பான்மை காட்ட ஆரம்பிச்சிருக்காங்களோ, பொழைச் சேனோ!" என்றார்.

"ஓகே! பை!" என்று கூறி ஃபோனை வைத்ததும் 'கிளிண்டனுக்கு மசால் தோசை பிடிக்கும் என்றால் கௌடாவுக்கு என்ன பிடிக்கும்?' என்று கேட்கத் தோன்றியது. மைசூர்பாகா? மைசூர் ரசமா? மைசூர் போண்டாவா? மங்களூர் போண்டாவா?

"சீச்சீ அதெல்லாம் ஒரு டேஸ்ட்டா?" என்று செல்லுலரில் அலுத்துக் கொண்டார் கௌடா. "தமிழ்நாட்டில் கேசரின்னு ஒரு ஸ்வீட் செய்வீங்களாமே?"

"ஆமா, ரவா கேசரி!"

"ஹா! அதே! அதே! குங்குமப்பூ வாசனையோட பொன் மஞ்சள் கலர்ல அந்தக் கேசரி, ராவ் கடை அசல் நெய்ல மிதக்கணும். ஸ்பூன் ஸ்பூனா எடுத்து வாயில் போட்டா, சிரமமே தெரியாம வழுக்கிட்டு உள்ள போயிடணும்!"

"முந்திரி பருப்பு?"

"பவார், பைலட்டுன்னு ரெண்டு மூணு முந்திரி பருப்புங்களை நாலு நாலாக் கிள்ளி, தனியா நெய்யில வறுத்து எடுத்து கேசரியில சேர்த்துடணும். இடை இடையே அதைக் கடித்து அரைக்கும்போது மனசுக்கு ஏற்படற ஆனந்தமே அலாதி!" என்றார்.

'கௌடாவுக்கு கேசரி பிடிக்கும் என்றால் கேசரிக்கு என்ன பிடிக்கும்?' நெம்பர் ஒற்றினேன்.

"அடுத்த தடவை பெங்களூர் போகிற போது ஓட்டல்ல 'கடுபு'ன்னு கேட்டுப் பாரு" என்றார் கேசரி. " 'கடுப்பு'ன்னு சொன்னாலும் எனக்கு சம்மதம்தான்! மினி கௌடா வடிவத்துல புட்டு மாதிரி ஒண்ணு கொண்டு வந்து வைப்பாங்க. அரிசியை சன்னமா உடைச்சு, ஊறி, மிளகுக் காரம் சேர்த்து, வேக வைச்சு எடுக்கறது. கௌடாவை நினைச்சுக்கிட்டே கடுபுவை கடுப்புடன் ஸ்பூனால எடுத்து வாயிலே போட்டு மெல்லலாம். எவ்வளவுக்கு எவ்வளவு கடுப்பு அதிகமோ அத்தனைக்கத்தனை கடுபு பிளேட் பிளேட்டாக காலியாகும்!"

ஜெவுக்கு ஃபோன் பண்ணத் தயக்கமாயிருந்தது. தைரியத்தைத் திரட்டிக் கொண்டு செயல்பட, "இதுக்கு ஏன் பயப்படணும்? தங்கத் தட்டுல கேழ்வரகுக் களியும் மோரும் கொடுத்தால் சந்தோஷமா சாப்பிடுவேன்" என்றார். "தொட்டுக் கொள்ள ஒரு பாட்டில் டொமேட்டோ சாஸ், நாலு ஆப்பிள், ஒரு ஊறுகாய் பாட்டில், கை கழுவ மினரல் வாட்டர், தாகத்துக்கு ஆப்பிள் ஜூஸ், உதடு ஒற்ற டிஷ்யூ, கை துடைக்க ஒரு டஜன் டர்க்கி டவல்...

"இருங்க இருங்க... புதுசா ஏதாவது?"

"கருணைக்கிழங்கு மசியல் கேள்விப்பட்டிருக்கியா? கருணாநிதிக் கிழங்கு மசியல்னு வேணும்னாலும் சொல்லலாம். அதை தோல் சீவி, வேகவைத்து, மிக்ஸில போட்டு அரையோ அரைன்னு அரைச்சு, உப்பு, காரம் சேர்த்து, எலுமிச்சம் பழம் பிழிஞ்சு, பச்சை மிளகாய் நறுக்கிப் போட்டு கொதிக்க விட்டு..."

"ரொம்ப சூடாத்தான் இருக்கீங்க; ஆனா கருணைக் கிழங்கு நாக்கை அரிக்குமே, வாயு பண்டமாச்சே!"

"நாலு திட்டு திட்டினா அரிப்பு ஓடிப் போகுது; ஆயிரம் கோடி முழுங்கி ஏப்பம் விட்டவளுக்கு இந்தக் கிழங்கை ஜீரணிப்பதுதானா கஷ்டம்?"

கடைசியாக கருணாநிதியையும் கேட்டு விடலாம் என்று பார்த்தால் ரொம்பச் சோகமாக இருந்தார். "ரேஷன்ல இனிமே நமக்கெல்லாம் அரிசி கிடைக்காதாமே, என்ன ஆட்சி பண்ணறீங்க?'ன்னு தயாளு ஏகமா கோவிச்சுக்கறா; டில்லி போன மாறன் மாதிரி நானும் பூரி, சப்பாத்தி சாப்பிட பழகிட்டிருக்கேன்" என்றார்!



# “நான் வருங்கால ஜனாதிபதி; அவன், வருங்கால பிரதமர்!”

சட்டக் கல்லூரியில் என் சக மாணவனாக அறிமுகமானவன் தங்கவேலு. கையில் போதிய பணப்புழக்கம் இல்லாத நிலை. வகுப்புகள் முடிந்தவுடன், பாக்கெட்டில் ஒரு ரூபாய் தட்டுப்பட்டது என்றால், அதைக் கொண்டு கல்லூரியின் எதிரில் உள்ள குறளகத்திற்குச் சென்று, இரண்டு கப் காப்பி வாங்கிக் குடிக்கலாமா அல்லது லிங்க், மெய்ன்ஸ்ட்ரீம் போன்ற பத்திரிகைகளை வாங்கலாமா என்பதைப் பற்றி நாங்கள் தீவிரமாக விவாதிப்போம். ஒரு முடிவெடுத்து செயல்படுத்துவதற்குள், காப்பி கடையை மூடி விட்டிருப்பார்கள் அல்லது அந்தப் பத்திரிகைகள் விற்றுப் போயிருக்கும்!

நாங்கள் நண்பர்கள்தான். என்றாலும் கூடவே என்னைத் தன் குருவாகவும் மதித்தான் தங்கவேலு. “சபதம்” என்றொரு பத்திரிகையை கல்லூரி நாட்களில் நான் நடத்தினேன். அதில் தங்கவேலுவும் பல கட்டுரைகளை எழுதியிருக்கிறான். “நவநந்தன்” என்ற புனைபெயரில் அவனை அறிமுகப்படுத்தினேன். காரணம் உண்டு. அவன் ஆதிதிராவிட இனத்தைச் சேர்ந்தவன். புரட்சிகரமான எண்ணங்களைக் கொண்டிருக்கும் அவன், அவற்றைச் செயல்படுத்தவும் வேண்டும் என்ற எண்ணத்தில்தான் அந்தப் புனைபெயரை வைத்தேன். ஒரே அறையில் இருவரும் கட்டுரைகள் எழுதுவோம். நான் நாற்காலியில் உட்கார்ந்து எழுதினால், அவன் தரையில் அமர்ந்துதான் எழுதுவான். நட்பில் மரியாதை!

பங்களாதேஷில் முஜிபுர் ரஹ்மான் படுகொலை செய்யப்பட்டார். மக்களின் முழு ஆதரவோடு ஆட்சிக்கு வந்த அவர், எதிர்க் கட்சிகளை ஒடுக்க முயற்சிகள் எடுத்ததன் விளைவாக, தம் முடிவைச் சந்தித்தார். இது பற்றி “பிதாவே இவர்கள் அறிந்தே செய்கிறார்கள்” என்ற பெயரில் ஒரு கட்டுரை எழுதினேன். அந்தக் கட்டுரை மறைமுகமாக பிரதமர் இந்திரா காந்தியைத் தாக்குவதாக எண்ணி (அப்போது எமர்ஜென்ஸி காலத்தின் தொடக்கம்) அந்தப் பத்திரிகை தடைசெய்யப் பட்டது. என் நீண்ட கட்டுரையை ஒரு பதினாறு பக்கப் புத்தகமாக “நியாயம் கேட்கிறோம்” என்ற பெயரில் வெளியிட்டேன். இதற்குத் தடைபோட்டது அன்றைய (கலைஞர்) அரசு. இந்தப் புத்தகங்களை வெவ்வேறு கடைகளுக்குக் கொண்டு சென்றது தங்கவேலுதான். அப்போது உளவுத் துறை எஸ்.பி.யாக இருந்த ஸ்ரீபால் அந்த நூல் விற்பனைக்கு விநியோகிக்கப்பட்ட இடங்களையெல்லாம் காட்டச் சொன்னார். தங்கவேலுவோ தான் நூல்களைக் கொடுக்காத இடங்களுக்கெல்லாம் போலீஸை அழைத்துச் சென்றான்! என் கருத்துக்கள் பரவ வேண்டும் என்பதிலும், என் பொருளாதாரம் மேலும் சரிந்து விடக்கூடாது

என்பதிலும் அவனுக்கு அவ்வளவு அக்கறை.

'தலைவரே' என்றுதான் என்னைக் கூப்பிடுவான். ஆதிதிராவிடர்கள் பலவித கொடுமைகளை அனுபவிப்பதாக அழுத்த மாகக் கூறுவான். அதே சமயம் மற்ற இனத்த வர்களின் அடக்குமுறைக்கு எந்தவிதத்திலும் குறையாத அளவுக்குத் தங்கள் இனத்திலேயே கூட முன்னுக்கு வந்தவர்கள், கீழிருப்போரை ஒடுக்குவதைக் குறிப்பிடுவான். திருச்சிக்கு அருகே உள்ள அவனது ஊரான தாத் தையங்கார் பேட்டையில் "சமுதாய இழிவு ஒழிப்பு மாநாடு" ஒன்றை ஏற்பாடு செய்து அதில் என்னைப் பேசச் செய்தான். அவ்வளவு கூட்டத்தை அவனால் திரட்ட முடிந்ததைப் பற்றி எனக்குப் பெரும் ஆச்சரியம். யாரும் எதிர்பாராதவிதமாக 150 அரிஜன சிறுவர்களை மேடையேற்றிப் பூணூல் அணிவித்தான். 'பாரதியாரின் வழியில்' என்றான்.

நாங்கள் இருவருமே மாணவர் தி.மு.க. அமைப்பில் உறுப்பினர்களாக இருந்தோம். இந்தப் பூணூல் விவகாரத்தை உள்ளூர்வாசிகள் கலைஞர் கருணாநிதிக்குத் தெரிவிக்க, அவர் என்னைக் கூப்பிட்டு அனுப்பினார். 'இனி எதையும் என்னைக் கேட்டுச் செய்யுங்க' என்றார். கலைஞருடன் இப்படி ஒரு நேரடித் தொடர்பு உண்டாகக் காரணம் கூட தங்க வேலுதான்.

வழக்கறிஞராகப் பணிபுரியாமல் தன் ஊரின் கல்லூரிப் பேராசிரியராகப் பணிபுரியத் தொடங்கினான் தங்கவேலு. 'கனவு மெய்ப்பட வேண்டும். நம்பிக்கைதான் வாழ்க்கை' என் றெல்லாம் நான் தன்னம்பிக்கையை அடிக் கோடிட்டுப் பேசும்போது, அதற்கு நல்ல வர வேற்பு கிடைக்கும். தங்கவேலு என்னிடம் தொலைபேசியில் பேசும்போது 'வருங்கால இந்திய குடியரசுத் தலைவரே, நான்தான் வருங்காலப் பிரதமர் பேசறேன்!' என்பான். கொஞ்சமும் கிண்டலாக அல்ல. என் தன்னம் பிக்கைப் பேச்சின் வீச்சு அவன் மீது அந்த அளவுக்கு விழுந்திருக்கிறது.


தங்கவேலு

**வா**ல்பாறை தோட்டத் தொழிலாளிகள் நலனுக்காக நிறைய முயற்சிகள் எடுத்துக் கொண்டான். திடீரென்று காங்கிரஸ் கட்சியின் டிக்கெட்டில் தேர்தலில் போட்டியிட்டு வால் பாறை தொகுதியின் எம்.எல்.ஏ.வானான். அப்போது நான் எம்.ஜி.ஆர். தொடங்கிய அ.தி.மு.க.வில் இருந்தேன். 'நம் பயணங்கள் மாறவில்லை. வாகனங்கள்தான் மாறிவிட்டன' என்று எழுதினான்.

எம்.எல்.ஏ. ஆன பிறகு முதல் சட்டசபை கூட்டத் தொடரில் கலந்து கொள்ள சென் னைக்கு வந்திருந்தான். எனக்குப் பட்டுவேட்டி, பட்டு சொக்காய், என் மனைவிக்குச் சேலை என்றெல்லாம் வாங்கிக் கொண்டு வந்தான். தன் முதல் சட்டசபைப் பேச்சில் 'நான் இந்த நிலைக்கு வளர்ந்ததற்குக் காரணம் ஜான்தான்' என்று அவன் அறிவித்ததில் சில காங்கிரஸ் கட்சிக்காரர்கள் முகம் சுளித்தனர். என்ன செய்ய? சமய சந்தர்ப்பம் பார்த்துப் பேசும் கலை அவனுக்குத் தெரியாத ஒன்று.

நிறைய தயார் செய்து கொண்டு வந்து உரையாற்றினாலும் தன் சட்டசபைப் பேச் சுக்களை எந்த நாளிதழும் வெளியிடுவதில்லை என்று மிகவும் குறைபட்டான். 'கொஞ்சம் வித்தியாசமா பேசினாத்தான் வெளியிடுவாங்க. நீ நரி, எறும்பு பற்றிய உன் அனுபவங்களை யெல்லாம் கல்லூரி நாட்களில் கூறினதுண்டே, அதிலே ஒன்னு ரெண்டை சட்டசபையிலே எடுத்து விடு. பேச்சு பிரசுரமாயிடும்' என்று நான் விளையாட்டாகச் சொல்லப் போக, அதை உடனே செயல்படுத்தி விட்டான் தங்க வேலு! 'நரிக்கறி சாப்பிடுவது உடம்புக்கு நல்லது – எம்.எல்.ஏ. தங்கவேல் பேச்சு!' என்று மாலை நாளிதழின் முதல் பக்கத்தில் செய்தி வந்திருந் தது!

**ந**ம்பிக்கைக் கனவுகளோடு வாழ்பவன் என்பதாலேயே தங்கவேலுவை எனக்கு நிறையப் பிடிக்கும். சமீபத்தில் ஒரு கடிதம் எழுதியிருக்கிறான் 'நீ அனுப்பிய புத்தாண்டு மற்றும் பொங்கல் வாழ்த்துக்கள் கிடைத்தன நன்றி!' என்று. நான் அவற்றை அனுப்ப மறந்த தைத்தான் சுட்டிக்காட்டியிருக்கிறான்!

சந்திப்பு : அருண்சரண்யா.

# பில்டர் காபியை விரும்பிக் குடித்த நேதாஜி!

**149,** பாரதி சாலை, ராயப்பேட்டை, சென்னை. ஏதோ ஒரு வீட்டின் முகவரி இது என்று ஒதுக்கி விட முடியாது. இந்த வீட்டுக்குத் தனிப் பெருமைகள் பல உண்டு.

'காந்தி பீக்' என்ற பெயருக்கேற்றவாறு வீட்டின் உச்சி முகப்பில் மகாத்மாவின் சிறிய சிலை. திறந்து வைத்தவர்: மூதறிஞர் ராஜாஜி. மூன்றாவது மாடி கட்டுவதற்கு அடிக்கல் நாட்டியவர் : பாபு ராஜேந்திர பிரசாத். 1926-ல் கட்டப்பட்ட வீடு. ஒவ்வொரு மாடியாகக் கட்டி முடித்தார்களாம். '30-ல் இரண்டாம் மாடி, '37-ல் மூன்றாவது என்று இப்படி.

இன்னொரு அரிய பெருமை: நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் சென்னைக்கு வந்த இரண்டு (39-ல், 40-ல்) தடவையும் இந்த வீட்டில்தான் தங்கியிருந்தார். அவரின் நூற்றாண்டு விழா நடைபெறும் இந்த ஆண்டில் இந்த வீட்டுக்குத் தனி முக்கியத்துவம்.

அந்தக் காலத்தில் அந்தப் பகுதியில் என்ஜினியர் எஸ்.பி. அய்யாசாமி என்றால் தெரியாதவர் இருக்க முடியாது. அப்படி ஒரு பாப்புலர் பர்ஸனாலிடி. மிகத் தீவிர காங்கிரஸ் பக்தர். விடுதலைக்காகப் பாடுபட்ட தலைவர்கள் மீது தனிக்காதல் கொண்டவர்.

அவரது மகன் எஸ்.பி. சபேசன் வழிப் பேரன் எஸ்.பி. தனஞ்ஜெயா. இப்போது அந்த வீட்டில் வசித்து வருகிறார். சென்னை பங்கு மார்க்கெட்டில் முன்னணி வர்த்தகர்.

"தாத்தாவைப் பற்றி அப்பா நிறைய சொல்லியிருக்கிறார். நேதாஜி வந்து தங்கியதைப் பற்றி உணர்ச்சி வசப்பட்டுப் பேசுவார். நேதாஜி அப்போது விடுதலைப் போர் முன்னணி வீரராக இருந்தாலும், மகாத்மாவின் சாத்வீக போராட்ட முறைகளை ஏற்றுக் கொள்ளாதவர் என்பதால் அவர் சென்னை வந்த போது, தங்கள் வீட்டில் தங்க இடம் தர எல்லோரும் தயக்கம் காட்டினார்கள். என் தாத்தா மட்டும் முன் வந்தார்.

"1939ம் வருடம் செப்டம்பர் 3, 4, 5 தேதிகளில் நேதாஜி இங்கே தங்கியிருந்தார். அப்போது வேட்டி, சட்டை, துண்டு, கதர்க் குல்லாய் அணிந்து அவர் இருந்ததை போட்டோ எடுத்து அதில் அவரே கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருக்கிறார். தாத்தாவும் அவரும் சேர்ந்து இருக்கும் புகைப்படத்தையும் நான் பொக்கிஷமாகப் பாதுகாத்து வருகிறேன்.

"நேதாஜி இங்கே தங்கியிருந்த மூன்று நாட்களிலும் இந்த வீட்டை மின் விளக்குகளால் அலங்கரிக்க ஏற்பாடு செய்திருந்தாராம் தாத்தா. எங்கள் வீட்டில் அவருக்குப் போட்டுக் கொடுத்த ஃபில்டர் காபியை மிகவும் ரசித்துக் குடித்த நேதாஜி, 'எப்படி இவ்வளவு அருமையாகக் காபி போடுவது' என்று செய்முறை விளக்கத்தையும் கேட்டுத் தெரிந்து கொண்டாராம்.

- நேதாஜியைப் பற்றி எது சொன்னாலும் தனஞ்ஜெயா உணர்ச்சிவசப்பட்டுப் போகிறார்.

ஒரு பழைய நோட்டுப்புத்தகத்தை நம்முன் விரித்து வைத்தார் தனஞ்ஜெயா.

"இதைப் பாருங்கள். ரொம்ப இன்ட்ரஸ்டிங். நேதாஜி எங்கள் வீட்டில் தங்கியிருந்த மூன்று நாட்களில் என்னென்ன வாங்கினார்கள், என்ன செலவாயிற்று என்பதை அயிட்டம் விடாமல் அப்போதே பென்சிலால் எழுதி வைத்திருக்கிறார்கள். இதையும் நான் மிகக் கவனமாகப் பாதுகாத்து வருகிறேன்..."

பக்கங்களைப் புரட்டினால், ஒரு தலைவரை உபசரிக்க அந்த காலகட்டத்தில் ஒரு கல்யாண விருந்தே ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்ற பிரமிப்பு!

**நே**தாஜி இங்கே தங்கியிருந்த நாட்களில் ஒருநாள் மெரினாவில் திலகர் கட்டத்தில் (இப்போதைய சீரணி



• நேதாஜியுடன் அய்யாசாமி



• காந்திபீக் இல்லம்

அரங்கம்) ஒரு பொதுக் கூட்டத்தில் பேசப் போயிருக்கிறார். அன்றுதான் உலகப் போர் பிரகடனப்படுத்தப் படுகிறது. அச்செய்தி மாலை மூன்று மணிக்கு இந்தியன் எக்ஸ்பிரஸ் அலுவலகத்துக்குக் கிடைக்கிறது. உடனே பெருத்த சிரமத்துக்கிடையே விசேடப் பதிப்பு ஒன்றை எக்ஸ்பிரஸ் வெளியிடுகிறது. நேதாஜி மெரினாவில் பேச ஆரம்பித்து விட்டார் என்று தெரிந்ததும், அந்த விசேடப் பதிப்பின் சில பிரதிகளை அவசர அவசரமாகக் கொண்டு போய் மேடையில் பேசிக் கொண்டிருந்த

கடவுள் துணை

1939 சுபாஷ்போஸ் செலவு

செப்டம்பர் 3 நாள் செலவு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தேதி | 3 | அரிசி முட்டை | 8 | 0 | 0 |
| | | அரிசி கூலி | 0 | 1 | 6 |
| | | அவரம் பருப்பு | 2 | 0 | |
| | | கடலை பருப்பு | 0 | | |
| | | உளுத்தம் பருப்பு/படி | | | |
| | | பச்சை பருப்பு | | | |
| | | மிளகாய் | | | |

நேதாஜியின் கரங்களில் திணிக்கிறார்கள். நேதாஜி பேச்சை சில வினாடிகள் நிறுத்தி விட்டு பேப்பரைப் படிக்கிறார். உலகப் போர் மூண்ட செய்தி அவருக்கும் அப்போதுதான் தெரிகிறது. உடனே மைக்கில் செய்தியைப் படிக்கிறார். சென்னை மக்களுக்கு அந்த மிக முக்கிய செய்தி தெரிய வந்தது நேதாஜியின் மூலம்தான்!

11.2.97 தேதியிட்ட 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' இதழில் இந்த வரலாற்றுக் குறிப்பை ஒரு மலரும் நினைவாக வெளியிடப்பட்டிருக்கிறது.

**'கா**ந்தி பீக்' இல்லத்தின் ஹாலில் ராஜேந்திர பிரசாத் தலைமை தாங்க, அவர் அருகே சத்தியமூர்த்தி போன்ற தலைவர்கள் கீழே அமர்ந்திருக்க காங்கிரஸ் ஆலோசனைக் கூட்டம் ஒன்று நடைபெற்றதையும் சுவரில் மாட்டப்பட்டுள்ள ஒரு புகைப்படம் செய்தியாகத் தருகிறது.

அய்யாசாமி அவர்களுக்கு அந்த நாளில் ஒரு பழக்கம் இருந்தது. தமது வீட்டில் ஒரு பெரிய மணி கட்டியிருந்தார். பள்ளிக்கூட பெல மாதிரி.. காலை ஆறு முதல் பகல் பன்னிரண்டு வரை. மாலை ஐந்து முதல் ஒன்பது மணி வரை ஒவ்வொரு மணி நேரத்துக்கு ஒரு முறை நேரத்தைத் தெரிவிக்கும் வகையில் அத்தனை முறை மணியடிப்பார். அந்தப் பகுதி மக்களுக்கு நேரத்தைத் தெரிவிக்கும் சேவையாக அதைத் தொடர்ந்து அவர் செய்து வந்தார்.

நேதாஜி தம் வீட்டில் இருந்தபோதும் இப்படி மணி அடித்தார். தியானம் செய்து கொண்டிருந்த நேதாஜிக்கு இந்த ஒலி சிரமமாக இருந்தது. "மணி அடிக்காமல் இருக்கக் கூடாதா?" என்று அய்யாசாமியிடம் நேதாஜி கேட்க, கிடைத்த பதில்: "மாட்டேன். அடிக்காமல் இருக்க மாட்டேன். இது ஒரு சர்வீஸ். உங்களுக்காக இதில் இருந்து தவற நான் விரும்பவில்லை!" அய்யாசாமியின் பொதுநல சேவைக்கு இது ஒரு சாம்பிள்.

• தனஞ்ஜெயா



தமது முதல் மகனுக்கு சுபாஷ் சந்திரா என்றே பெயர் வைத்திருக்கிறார் தனஞ்ஜெயா. தமது வீட்டில் வளைய வரும்போதும் ஒருவித நியாயமான பெருமையுடனேயே வளைய வருகிறார்.

அடுத்தமுறை ஜாம்பஜார் பக்கம் போகும்போது இந்த 'காந்தி பீக்' இல்லத்தை நாம் எல்லோரும் ஒருதரம் நிமிர்ந்து பார்க்க வேண்டும்.

— கஸ்தூரி

படங்கள் : யோகா



# சுட்ட பழம்!

**நா**ன் தெரிவித்த முழு விவரங்களையும் ஒருசேர வெளியிடாமல், ஊழல் தடுப்பு மற்றும் கண்காணிப்புத் துறை இயக்கக அதிகாரிகள் திரித்து வெளியிடச் செய்தார்கள்; பகுதி பகுதியாக வெளியிடச் செய்தார்கள்; இவற்றில் தினம் ஒரு தகவலைத் தந்து, நான் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாகப் பேசுவதாக ஒரு பொய்யான தோற்றத்தை உருவாக்க முயற்சித்தார்கள். ....நான் தெரிவித்த உண்மை விவரங்களை நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களது நம்பிக்கையையும் அன்பையும் பெறுவதில் நீங்கள் அனைவரும் இன்னும் வேகமாக ஈடுபட வேண்டும்; தெரு முனைக் கூட்டங்கள் நடத்தி மக்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டும் என்பதே என் விருப்பம்.

– தொண்டர்களுக்கு எழுதிய கடிதத்தில் ஜெயலலிதா.

**கனிந்த சிந்தனை :**

*புரட்சித் தலைவி தவிர வேறு யாருக்கும் இப்படிப்பட்ட யோசனை வராது என்பதை எதிர்க்கட்சியினர் ஒப்புக் கொள்வார்களா? ஒருபோதும் மாட்டார்கள்! 'விளம்பரப் பிரியர் ஜெயலலிதா' என்று வழக்கம் போல் எகிறுவார்கள்.*

*யோசித்துப் பாருங்கள்.... இதய தெய்வத்தின் தொண்டர்கள் நடத்தும் தெரு முனைக் கூட்டமென்றால் சும்மாவா? அலங்கார விளக்கென்ன, ஒலிபெருக்கி என்ன என்று இரவெல்லாம் பகல் போல பிரகாசமாகிவிட, தெரு நாய்களும் திருடர்களும் அந்தப் பக்கமே தலைவைத்துப் படுக்க மாட்டார்கள்.*

*'அவர்கள் தலைவைத்துப் படுப்பது கிடக்கட்டும்; நாங்கள் தலைசாய்க்க முடியாதே; தூக்கம் போச்சே...' என்று புலம்புபவர்கள் அசடுகள் – அம்மா ஜெயிலில் கூட தூங்கவில்லையே, அதை நினைத்துப் பாருங்கள்!*

*கூட்டங்கள் நடக்கும்போது தெருமுனைக் கடைக்காரர்களுக்குச் சுறுசுறுப்பாய் வியாபாரமாகும். 'அது சரி; காவலுக்கு நிறுத்தப்படும் கான்ஸ்டபிள்கள் ஓசியில் சோடா, பிஸ்கட், கடலையுருண்டை என்று கடையை ரெய்டு செய்தால்...?' – இப்படி பயப்படும் கடைக்காரர்களே, பொறுமை கொள்ளுங்கள்! ஜெயலலிதா வீட்டிலேயே ரெய்டு நடந்ததே. அப்போது அவர் பொறுமையாய் இருக்கவில்லையா!*

*எதிர்க்கட்சியினர் நடத்தும் தெருமுனைக் கூட்டம்தான் எனினும் அதற்காகவாவது தெருவைச் சுத்தப்படுத்தி குப்பைகளை அகற்றுவார்கள் இல்லையா... குப்பைத் தெருக்களில் வசித்துப் பழகிய சென்னைவாசிகளுக்கு இதைவிட குதூகலமான விஷயமிருக்க முடியுமா?*

*'ஐயய்யோ! குப்பைகள் அகன்றால் என்ன, கூட்டத்தில் பேசப்படும் விஷயங்கள் காது கூசச் செய்யுமே...' என்று புலம்பும் பேர்வழிகளுக்குச் சொல்லிக் கொள்கிறோம் :*

*அன்று காது கூசத் திட்டியவர்களையெல்லாம் அம்மா அணுக்கத் தொண்டர்களாகவும் சட்ட ஆலோசகர்களாகவும் இன்று ஏற்றுக் கொண்டிருக்கிறாரே... அந்த சகிப்புத் தன்மையை – பெருந்தன்மையை அவரிடமிருந்து நீங்களும் கற்றுக் கொள்ளுங்கள்!*

– ***'சில்மிஷா'***

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

# உங்கள் வளமான எதிர்காலத்திற்கு எங்கள் விசேஷ சேமிப்புத் திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



இன்றே எங்களிடம் ஒரு டெபாஸிட்டைத் துவக்கி,
வளமான மகிழ்ச்சியான வருங்காலத்தை எதிர்நோக்குவீர்

**EXPRESS**
FINANCIAL EXCHANGE LIMITED

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேப் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Matheson

